# தியாகராச செட்டியார்

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

**டாக்டர் உ. வே. சாமிநாதையர்**

அவர்கள் எழுதியது

இது

ஷை ஐயரவர்கள் குமாரர்

**எஸ். கலியாணசுந்தரையரால்**

பதிப்பிக்கப்பெற்றது





கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை

[விலை ரூ. 2/-

# பொருளடக்கம்

# முகவுரை

கலைமகளென்னும் பத்திரிகையின் தொடக்கத்தி லிருந்து மாதந்தோறும் என் தந்தையாரான மகாமகோ பாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் முதற் கட்டுரையை எழுதிவந்தார்கள். அவர்கள் சொந்த அனுபவத்தாலும் கேள்வியாலும் பழக்கத்தாலும் அறிந்த பல அரிய செய்தி களையும், நன்னீதியைப் புகட்டும் சிறந்த நிகழ்ச்சிகளையும், புலவர்கள், மேதாவிகள், பெருந்தகையாளர்கள், உபகாரி கள் இவர்களுடைய வாழ்க்கைச் சிறப்பியல்களையும் தெரி விப்பனவாக அமைந்தன அக்கட்டுரைகள். இதுவரையில் வெளிவாராத சில தமிழ் நூல்களையும் குறிப்புரையுடன் இப்பத்திரிகையின் அநுபந்தமாக வெளியிட்டு வந்தார் கள். பிரபல சங்கீத வித்வான்களாக விளங்கிய கனம் கிருஷ்ணையர், கோபாலகிருஷ்ண பாரதியார், மகாவைத்திய நாதையர் இவர்களுடைய சரித்திரங்கள் பகுதி பகுதியாக அவ்வப்போது அப் பத்திரிகையில் எழுதப் பெற்று வந்து இப்போது தனிப் புத்தகங்களாக நிலவுகின்றன.

தமிழ் உலகில் பிள்ளையவர்களென்றால் மகாவித்து வான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைத் தெரிந்து கொள்வது போலவே செட்டியாரவர்களென்றால் இன்னா ரென்று சுலபமாகத் தெரிந்துகொள்ளக்கூடிய பெருமை வாய்ந்த ஸ்ரீமான் தியாகராச செட்டியாரவர்களுடைய ஜீவிய சரித்திரத்தை ஐயரவர்கள் கலைமகளில் விக்கிரம(ஹு) மாசி மாதம் முதல் தொடர்ச்சியாக எழுதி வந்தார்கள். இந்த வருஷம் கார்த்திகை இதழில் சரித்திரம் பூர்த்தி யாயிற்று. படிப்பவர்கள் படித்து இன்புறும்படி ஒரு தனிப் புத்தகமாக இப்போது இது வெளியிடப்பட் டுள்ளது.

நன்மாணாக்கர், நல்லாசிரியர், நற்கவிஞர் என்னும் முத்திறத்திலும் செட்டியாரவர்கள் ஒப்புயர்வற்று விளங்கினார்கள். நல்லாசிரியரை யடுத்து முறையாகப் பாடங் கேட்டுச் சிறப்புற்றவர் அவர்; பிள்ளையவர்களிடம் படித்த அவர், கும்பகோணம் காலேஜில் தாம் வகித்து வந்த தமிழ்ப் பண்டிதர் வேலையை என் தந்தையாருக்குச் செய்வித்து எங்கள் குடும்பத்தை நிலைநாட்டிய மகோபகாரியாவர். அவருடைய கபடமில்லா இயற்கையும், அறிவாற்றலும், அஞ்சா நெஞ்சமும், குருபக்தியும், பரோபகார சிந்தையும், இன்னோரன்ன சிறப்பியல்புகளும் இச்சரித்திரத்தால் நன்கு விளங்கும்.

அவருடைய சில சிறந்த பாடல்கள் இதில் இடையிடையே ஆங்காங்குச் சேர்க்கப் பெற்றுள்ளன.

செட்டியாரவர்களுடைய கல்வியாற்றல் முதலியவற்றைப் பற்றி எடுத்துரைக்க எனக்குச் சிறிதும் தகுதியில்லை. அவருடைய சரித்திரத்திற் சில பகுதிகளை ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரத்திலும் காணலாம்.

இச்சரித்திரத்தைத் தமது பத்திரிகையில் வெளியிடச் செய்ததோடு தனிப் புத்தகமாகவும் அமைத்துக் கொடுத்தவரும் என் தந்தையாரிடம் அன்பு காட்டி வருபவருமாகிய கலைமகள் அதிபர் **ஸ்ரீமான் ரா. நாராயணசாமி ஐயரவர்களுக்கு** என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

**திருவேட்டீசுவரம் பேட்டை,**
***20-12-1942***

இங்ஙனம்,
**S. கலியாணசுந்தரையர்.**

உ

# வித்துவான் தியாகராச செட்டியார்

## முன்னுரை

மனிதராகப் பிறந்தவர்களுள் ஒவ்வொருவனும் தனித்திருந்து வாழ முடியாது. ஒவ்வொரு நாளும் அவன் பல ஜனங்களுடைய உதவிகளை எதிர்பார்க்க வேண்டியவனாக இருக்கிறான். ஒரு சமயம் மாத்திரம் அவனுக்கு உதவி செய்வோர் பலர். ஆயுள் முழுவதும் உதவி செய்வார் சிலர். சிலர் செய்த உதவிகள் சில நேரமே பயன்படும். சிலர் செய்தனவோ ஆயுள் முழுவதும் பயன்படும். ஆயுள் முழுவதும் பயன்படும் உதவிகளைச் செய்பவர்களே மகோபகாரிகளாவார்கள்.

என் வாழ்க்கையில் எவ்வளவோ மனிதர்களோடு பழகியிருக்கிறேன்; நல்லவர்களால் நன்மை அடைந்திருக்கிறேன்; உபகாரிகளிடமிருந்து உபகாரம் பெற்றிருக்கிறேன்; மகோபகாரிகளுடைய அன்பிலே ஊறி இன்புற்றிருக்கிறேன்.

என் உடம்பை எடுத்து நிறுத்திய என் தந்தையார், என் அறிவை நிலைநிறுத்திய என் ஆசிரியர், என் நிலையை உயர்த்திய திருவாவடுதுறை ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர், எனக்கு ஒரு பதவியை அளித்து நிலைபெறச் செய்த ஸ்ரீ தியாகராச செட்டியார் ஆகியவர்கள் எனக்கு மகோபகாரம் செய்தவர்களின் வரிசையிலே முன்னணியில் நிற்பவர்கள். இந்த நால்வரும் நால்வேறு குணம் உடையவர்கள்; நால்வேறு நிலையை உடையவர்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் எனக்குத் தெய்வமாக விளங்குகின்றனர்.

தியாகராச செட்டியார் சிறந்த தமிழ்வித்துவான்; இவர் காலத்தில் தமிழ்வித்துவான்களுக்குப் புகழ் மாத்திரம் இருந்தது; பொருள் இல்லை; செட்டியாரோ அவ்விரண்டையும் உடையவராக விளங்கினர். இயல்பாகவே இவருக்கு மனோதைரியம் அதிகம். ஒரு நல்ல உத்தியோகத்தில் இருந்ததால் அத்தைரியம் மேன்மேலும் அதிகரித்தது. கும்பகோணம் காலேஜில் தமிழ் ஆசிரியராக இவர் இருந்து கீர்த்தி பெற்றார். தமிழ் நாட்டில் பல கலாசாலைகளில் பல தமிழ்ப்பண்டிதர்கள் அக்காலத்தில் இருந்தார்கள். ஆனாலும் இவருக்கு இருந்த மதிப்பும் செல்வாக்கும் வேறு யாருக்கும் இருந்ததில்லை. காலேஜில் ஆங்கிலம் முதலிய பாடங்களைப் போதிக்கும் பேராசிரியர்களுக்கும் இவருக்கும் சம்பளத்தைத் தவிர மற்ற விஷயங்களில் வேற்றுமை ஒன்றும் இராது. அவர்களுக்கு நடுவே இவரும் இருந்து அவர்களைப் போலவே பெருமை பெற்றார். தம்முடைய கடமையைத் திருத்தமாக நிறைவேற்றுவதும், குற்றம் செய்பவர் யாரானாலும் அவரை வெளிப்படையாகக் கண்டிப்பதும், மனத்தில் தோற்றியதை ஒளியாமல் எடுத்துரைப்பதும் இவரிடம் பொருந்தியிருந்த விசேஷ இயல்புகள்.

என் ஆசிரியரிடம் எனக்குமுன் படித்தவராதலின் இவர் எனக்கு முன்னவர்; என்பால் அன்பு வைத்துப் பழகியமையின் என் நண்பர்; இன்ன இன்னபடி மாணாக்கர்களிடம் நடந்து வரவேண்டுமென்பதையும் சில நூற்பொருள்களையும் வேறு விஷயங்களையும் எனக்கு அறிவுறுத்தினமையின் என் ஆசிரியர்களில் ஒருவர்; எனக்குத் தம் உத்தியோகத்தை அளித்துப் பிறர் கையை எதிர்பாராத நிலையைச் செய்வித்தமையின் ஒரு வள்ளல். தியாகராசர் என்று இவருக்கு வாய்த்த பெயர் என்னளவில் பொருளுடையதாகவே நிற்கின்றது. இவரை நான் மறவேன். காலேஜில் தம் இடத்தை எனக்கு

உதவிய இவர் பெயரை நான் தங்கியிருக்கும் இடத்திற்கு வைத்து அதில் வாழ்ந்து வருகிறேன். 'தியாகராஜ விலாசம்' இவருக்கும் எனக்கும் உள்ள அன்புப் பிணைப்புக்கு ஓர் அடையாளமாக நிற்கிறது.

செட்டியார் என்றே இவரை நாங்கள் வழங்குவது வழக்கம். இவரிடம் காலேஜில் படித்த மாணாக்கர்களில் பலர் சிறந்த பதவிகளை வகித்து விளங்கினர். இவரிடம் தமிழ் நாட்டினர் வைத்திருந்த மதிப்பை அறிந்தவர் இன்றும் சிலர் இருத்தல் கூடும்.

இவர் புகழ் பரவியுள்ள இத் தமிழ்நாட்டில் இவர் வாழ்க்கை வரலாறு விரிவாக வழங்க வேண்டுமென்பது என் அவா. பல அறிஞர்களும் அன்பர்களும் இவர் சரித்திரம் வெளிவர வேண்டுமென்று விரும்பினார்கள். பழைய ஞாபகங்களை மீண்டும் நினைத்துப் பார்ப்பதில் எனக்கு ஓர் இன்பம் உண்டு. அவற்றைத் தெரிந்துகொள்வதில் மற்றவர்களுக்கும் மகிழ்ச்சியிருப்பதை அறிந்து இவர் சரித்திரத்தை எழுதத் தொடங்கி நான் பலகாலமாகக் குறித்துத் தொகுத்து வைத்திருந்த இதனை இப்பொழுது வெளியிடலானேன்.

## 1. ஊரும் குலமும்

தியாகராச செட்டியாருடைய குலத்தின் பெயரே இவரது ஊரின் பெயரையும் புலப்படுத்துகின்றது. பூவாளூர்ச் செட்டியார் மரபில் உதித்தவர் இவர். செட்டிமார்களில் பல வகையினர் உண்டு. அவர்களுள் பூவாளூர்ச் செட்டியார்கள் சைவ ஒழுக்கமும் வேளாண் வாழ்க்கையும் உடையவர்களாக இருந்தனர். பூவாளூரில் நிலைபெற்று வாழ்ந்த கூட்டத்தினராதலின் இவர் குலப்பெயர் அவ்வூரோடு சார்த்தி வழங்கப்படுவதாயிற்று.

ஒரு வைசியக் கூட்டத்தினர் தங்கி வாழ்வதற்குரிய இடமென்றால் அதற்கு ஒரு மதிப்பு இருக்க வேண்டு

மல்லவா? பூவாளூர் நிலவளத்தாலும் தலச்சிறப்பாலும் பெருமைபெற்ற இடமாகும். தமிழ் நாட்டில் உள்ள பெரும்பாலான ஊர்களைப்பற்றிப் பழைய வரலாறுகள் பல அங்கங்கே கர்ண பரம்பரையாக வழங்கி வருகின்றன. ஸ்தலமாக இருந்தால் கர்ண பரம்பரைச் செய்திகளோடு புராண வரலாறும் அமைந்து விளங்கும்.

இக்காலத்தில் புராண வரலாறுகளுக்கு மதிப்பு வர வரக் குறைந்துகொண்டே வருகின்றது. சென்ற நூற்றாண்டில் புராண வரலாறுகளுக்கு இருந்த மதிப்பே வேறு. ஒரு ஸ்தலத்துக்குப் போய் விசாரிக்கத் தொடங்கினால் அங்குள்ள முதியவர்கள், "இந்த ஸ்தலம் மிகப் பழமையானது; தேவாரம் பெற்றது" என்று சொல்லி ஸ்வாமி பெயர், அம்பிகை பெயர், பிற மூர்த்தி தல தீர்த்த விசேஷங்கள் முதலிய செய்திகளைப் பெருமிதத்தோடு சொல்வார்கள். தேவாரம் பெற்ற ஸ்தலமாக இல்லாவிட்டால் "இந்த ஊர் சிறந்த ஸ்தலம்; இதற்கு நிச்சயமாகத் தேவாரப் பதிகம் இருந்திருக்க வேண்டும். கறையான் அரித்தவை போக எஞ்சி நின்ற பதிகங்கள்தாமே இப்போது இருக்கின்றன? மறைந்த தேவாரப் பதிகங்களில் இத்தலத்துத் தேவாரமும் இருந்திருக்கும்" என்று சமாதானம் சொல்லப் புகுவார்கள்; புராணச் செய்திகளுக்கு அடையாளங்களாக விளங்கும் இடங்களைக் காட்டுவார்கள்.

அத்தகைய மன இயல்புடையவர்களுக்கு மிக்க மகிழ்ச்சியைத் தரும் சிவஸ்தலமாக விளங்குவது பூவாளூர். சோழநாட்டின் பழங்காலப் பிரிவுகளுள் மேல் மழநாடு என்பதைச் சார்ந்தது இது; இக் காலத்துப் பிரிவில் திருச்சிராப்பள்ளியில் லால்குடி என்னும் தாலுகாவில் இருக்கிறது.

மன்மதன் இத்தலத்திற்கு வந்து சிவபெருமானைப் பூசித்தானென்பது புராண வரலாறு. அதனால் இது பூவாளியூர் என்ற பெயரையுடையதாகி அப்பால் மருவிப்

பூவாளூராயிற்றென்பர். காமர்பதி என்பது இதற்குரிய வேறொரு பெயர். பெரிய புராணத்தில் உள்ள திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வரலாற்றில் திருவானைக்கா முதலிய தலங்களுக்கு அவர் சென்றாரென்னும் செய்தி வரும் இடத்தில் திருவானைக்காவுக்கு அருகிலுள்ள பல தலங்களின் பெயர்கள் சொல்லப்படுகின்றன.

[1]"ஆரணத் துட்பொரு ளாயினானை
ஆனைக்கா வின்கட் புகழ்ந்துபாடி
ஏரணி யும்பொழில் சூழ்ந்தசண்பை
ஏந்தலா ரெல்லையி லின்பமுற்றார்" (346)

என்பதில் அவர் திருவானைக்காவைத் தரிசித்த செய்தி வருகிறது. அதன் பின்,

[2]"கைதொழு தேத்திப் புறத்தணைந்து
காமர் பதியதன் கட்சிலநாள்
வைகி வணங்கி மகிழ்ந்தணைவார்
மன்னுந் தவத்துறை வானவர்தாள்
எய்தி யிறைஞ்சி யெழுந்துநின்றே
இன்றமிழ் மாலைகொண் டேத்திப்போந்து
வைதிக மாமணி யம்மருங்கு
மற்றுள்ள தானம் வழுத்திச்செல்வார்" (347)

என்ற செய்யுள் உள்ளது. இதன் முதலடியில் வரும் காமர்பதி என்பது பூவாளூரைக் குறிப்பதாக எண்ண இடமுண்டு. பூவாளூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி யென்னும் பிரபந்தத்தில் இவ்வூர், 'காமர்வளம்பதி', 'காமர் பூம்பதி', 'காமரூர்', 'காமர்பதி' எனவும் வழங்கப் பெறுகின்றது. திருவானைக்காவுக்கும் திருத்தவத்துறை (லாலுகுடி)க்கும்

---

1. ஆரணம் - வேதம். ஏர் - அழகு. சண்பை - சீகாழி; சண்பை ஏந்தலார் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

2. வைகி - தங்கி. தமிழ்மாலை - தேவாரப்பதிகம். வைதிகமாமணி - திருஞானசம்பந்தர். தானம் - சிவஸ்தலங்கள்.

அருகில் இத்தலம் இருப்பதால் திருவானைக்காவிலிருந்து திருத்தவத்துறைக்கு எழுந்தருளிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுர் இத்தலத்தில் தங்கியிருத்தல் இயல்பே.

பூவாளூர்த் தலவிஷயமாக வடமொழியில் ஒரு புராணமும், தமிழில் ஒரு புராணமும் உள்ளன. தமிழ்ப் புராணத்தை இயற்றியவர் திருவாவடுதுறை ஆதீன வித்துவானுக இருந்த ஸ்ரீ கச்சியப்ப முனிவராவார். இங்கே எழுந்தருளிய ஸ்வாமியின் திருநாமம் திருமூலநாத ரென்பது. குங்கும ஸௌந்தரி என்பது அம்பிகையின் திருநாமம். இத்தலத்துக் குரிய விருட்சம் வில்வம். திருக்கோயிலுக்கு வடக்கே மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஒரு சிற்ருறு ஓடுகிறது. அது பங்குனி நதியென்னும் பெயருடையது: கயா பல்குனி எனவும் வழங்கும்.

இங்குள்ள ஜனங்களுள் தொன்று தொட்டு வசிப்பவர்கள் பூவாளூர்ச் செட்டிமார்கள். அவர்கள் வியாபாரத்தையும் வேளாண்மையையும் தொழிலாக உடையவர்கள். காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் கொண்ட காலத்தில் அங்கே வாழ்ந்திருந்த வணிகர்கள் தமிழ் நாட்டிலுள்ள பல ஊர்களில் சென்று குடியேறினுர்களென்றும், இவ்வூரில் வந்து தங்கியவர்கள் நாளடைவில் தனி மரபினராயினரென்றும் அச் சாதியினர்களுள் ஒரு கர்ண பரம்பரைச் செய்தி வழங்கிவருகிறது. பூவாளூர்ச் செட்டிமார் வர வரப் பெருகி வேற்றூர்களுக்கும் சென்று தங்கள் தொழிலை நடத்தலாயினர். திருச்சிராப்பள்ளி, உறையூர், திருவானைக்கா முதலிய ஊர்களில் அம் மரபினரைக் காணலாம். அவர்கள் எங்கிருந்தாலும் வியாபார முயற்சியும், தாம் பெற்ற ஊதியத்தில் ஒரு பகுதியைச் சிவாலயத் திருப்பணியிற் செலவிடும் இயல்பும் உடையவர்களாக இருக்கின்றனர். பூவாளூர், திருத்தவத்துறை, திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி, உறையூர், திருப்பைஞ்ஞீலி, திருப்பாச்சிலாச்சிராமம், திருவையாறு, சிதம்பரம்,

திருவாரூர், பழனி முதலிய சிவஸ்தலங்களில் அம் மரபினர் அமைத்துள்ள கட்டளைகள் நடந்துவருகின்றன.

---

## 2. முன்னோர்

பூவாளூர்ச் செட்டியார்களில் [1]பல கோத்திரங்கள் உண்டு. தியாகராச செட்டியார் கல்விக்குடையார் கோத்திரத்தைச் சார்ந்தவர். தமிழ் நாட்டிலுள்ள பல்வேறு சாதியினரில் வழங்கும் கோத்திரப் பெயர்களுள் குடை அல்லது கொடை யென்று முடியும் சில உண்டு. திருநெல்வேலிச் சீமையை ஆண்ட வடமலையப்ப பிள்ளையனை, 'நாரணக்குடையான்' என்று நீடூர்த் தலபுராணம் கூறும். கம்பருடைய கோத்திரம் 'காரணக் கொடை' என்று தெரிகின்றது. "காரணக் கொடையான் கம்பன் கவியரங் கேற்றினனே" என்னும் பாடற்பகுதி இதனைப் புலப்படுத்தும். கல்விக்கொடை என்னும் உருவமோ காரணக் குடையென்னும் உருவமோ இன்னதுதான் திருத்தமானது என்று தெரிந்துகொள்ள இயலவில்லை. கல்விச் சிறப்பைப் புலப்படுத்தும் குடையை உடையவர்களென்று பொருள்படும் கல்விக் குடையாரென்பதே வழக்கில் இருந்துவருகிறது.

அக்கோத்திரத்திலே பிறந்த ஒருவர் தஞ்சாவூர் மகாராஷ்டிர அரசரிடத்தில் பொக்கிஷதாரராக இருந்து சிறப்புப் பெற்றார். அரசாங்கத்தில் பொக்கிஷத்தை

---

1. முப்பத்திரண்டு கோத்திரங்கள் உண்டென்று கூறுவர். இப்போது தெரியவரும் சில கோத்திரப்பெயர்கள் வருமாறு: கல்விக்குடை, சுரர்குடை, நெறிகுடை, பொருங்குடை, சேவற்குடை, மைவாட்குடை, பிள்ளையார்குடை, கெப்புச்குடை, முறிகுடை, நாகசேரிகுடை, பூதமங்கலச்குடை, அரியதனபாலர் குடை, ஆவினன்குடை, கமலங்கிழார், பாம்பணிகிழார், பரிசுகிழார்.

நிர்வாகம் செய்வதற்குச் சிறந்த அறிவும் கணக்குத் திற மையும் தைரியமும் வேண்டும். அவற்றைப் பெற்ற அவர் அரசரது நம்பிக்கைக்கு உரியவராகி அரசரிடமிருந்து பல வகையான சம்மானங்களை அடைந்து நன்மதிப்போடு வாழ்ந்தார். அவர் எங்கே சென்றாலும் ஏறிப்போவதற்கு ஒரு பல்லக்கு இருந்தது. தமது முதிய பருவத்தில் அரசாங்க வேலையினின்றும் ஓய்வு பெற்று அவர் பல தருமங்கள் புரிந்து வாழ்ந்துவந்தார். முதல் முதலாக மாடியுடன் கட்டப் பெற்ற அவர் வீட்டிற்கு மாடி வீடு என்ற பெயர் வழங்கலாயிற்று. அது பூவாளூரில் அரியிலூருக்குப் போகும் சாலையில் தென்சிறகில் இருந்தது. அக் குடும்பத்தாருக்கு மாடி வீட்டார் என்ற அடையாளப் பெயர் உண்டாயிற்று.

மாடி வீட்டார் பரம்பரையில் சபாபதி செட்டியார் என்னும் ஒருவர் இருந்தார். அவரே தியாகராச செட்டியாருடைய பாட்டனார். அவர் சிவ பக்தியும் தரும சிந்தனையும் உடையவராக விளங்கினார். பூவாளூர்ச் சிவாலயத்தில் நடராஜர் எழுந்தருளிய சபையைப் புதுப்பித்துக் கட்டிய தோடு அதற்கு முன்பு ஒரு மண்டபத்தையும் கட்டுவித்தார். அம்மண்டபத்தின் முன்னே உள்ள தூண்கள் இரண்டில் அவர் உருவமும், அவருடைய மனைவியார் உருவமும் அமைக்கப்பெற்றுள்ளன.

திருவாரூரில் உள்ள அபிஷிக்த வகுப்பினருள் ஒரு பரம்பரையினர் இக் குலத்தினருக்குக் குருவாக இருந்தனர். பூவாளூர்ச் செட்டிமார் திருவாரூர் சென்று அவரிடத்தில் தீக்ஷை செய்துகொள்வதும், உபதேசம் பெறுவதும், பார்த்திப பூஜை, உடையவர் பூஜை, திருமுறையருச்சனை முதலியவற்றைப் பெறுவதும் வழக்கம். சில சமயங்களில் அவ்வாசிரியரைப் பூவாளூருக்கு வருவித்துச் சில காலம் இருக்கச் செய்து உபசரித்து வழிபட்டு வருவார்கள். அவர் வருங்காலத்தில் தங்கி இருப்பதற்காக இவ்

வகையினர் தனியே ஒரு மடம் கட்டிவைத்திருக்கின்றனர். அது கோயிலின் அருகே பங்குனியாற்றின் வட கரையில் இருக்கிறது.

ஊருக்கு யாரேனும் பெரியவர்கள் வந்தாலும் அந்த மடத்தில் தங்குவது வழக்கம். திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக விளங்கிய கச்சியப்ப முனிவர் இவ்வூருக்கு வந்து பூவாளூர்ப் புராணத்தை இயற்றத் தொடங்கிப் பூர்த்தி செய்து இங்கே அரங்கேற்றினார். அக்காலத்தில் அம்முனிவர் இம் மடத்தில் சில மாதங்கள் தங்கியிருந்தனராம்.

தியாகராச செட்டியார் காலத்தில் ஞானாசிரியராக இருந்தவர் சாம்பமூர்த்தி ஐயா என்பவர். அவர் வடமொழி தென்மொழி நூல்களில் நல்ல பயிற்சி உள்ளவர்; தேவாரங்களைப் பண்ணோடு ஓதுவதில் வல்லவர். அவருக்குப் பின்பு அவர் ஸ்தானத்தை வகித்துவந்தவர் அவருடைய தமையனார் குமாரராகிய சாமி ஐயா தேசிகர் என்பவர். அவர் சைவ சித்தாந்த நூல்களில் தேர்ச்சிபெற்றவர்; தம்முடைய மாணாக்கர்களால் சைவசித்தாந்தம் பரவ வேண்டுமென்ற நோக்கமுடையவர்.

சிவபக்தியும் சைவ ஒழுக்கமும் அமைந்திருந்த பூவாளூர்ச் செட்டிமாருக்குத் திருவாரூரில் ஒரு தனிப்பற்று உண்டாயிற்று. அவர்களுடைய ஆசிரியர் அத்தலத்தில் வசித்துவந்ததே அதற்கு முக்கியமான காரணம். தங்கள் ஆசிரியரைத் தரிசிக்கப் போகும்போதெல்லாம் ஆலயம் சென்று தியாகராசப் பெருமானையும் தரிசித்து வழிபட்டு இன்புற்றனர்.

---

## 3. இளமைப் பருவம்

சபாபதி செட்டியாருக்கு இரண்டு குமாரர்கள் இருந்தனர். மூத்தவர் பெயர் சிதம்பரஞ் செட்டியா

ரென்பது. அவருடைய குமாரரே தியாகராச செட்டியார். சிதம்பரஞ் செட்டியாருக்கு ஒரு தம்பி இருந்தார். அவர் திரிசிரபுரத்தில் வியாபாரம் செய்து பெருஞ்செல்வம் சம்பாதித்தார். பல ஊர்களில் அவருக்கு வீடுகளும் நிலங்களும் இருந்தன.

சிதம்பரஞ் செட்டியார் பூவாளூரில் இருந்து வியவசாயம் செய்துவந்தார். பூவாளூருக்குத் தெற்கே உள்ள பட்டவர்த்தி என்னும் இடத்தில் இருபது ஏகராவுக்குமேல் நல்செய்களும், புன்செய்களும் அவருக்கு உண்டு. கௌரவமாகக் குடும்பத்தை நடத்திக்கொண்டு வாழ்ந்துவருவதற்கு அந்நிலங்கள் போதியனவாக இருந்தன. அதனால் வேறு முயற்சி ஒன்றையும் மேற்கொள்ளாமல் அவற்றைப் பாதுகாத்து வேளாண்மை செய்வதிலேயே அவர் திருப்தியடைந்து வாழ்ந்தார்; லாலுகுடியிலிருந்த ஒரு குடும்பத்திற் பிறந்த ஒரு பெண்மணியை மணம் செய்துகொண்டார்; அவர் அடிக்கடி திருவாரூர் சென்று ஆசிரியரையும் தியாகராசப் பெருமானையும் தரிசித்து வருவார்.

அவருக்கு விபய (1826) வருஷத்தில் மூத்த குமாரராக ஸ்ரீ தியாகராச செட்டியார் உதித்தார். இவருக்குப் பின் இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். சிதம்பரஞ் செட்டியார் தியாகராசப் பெருமானிடத்தில் வைத்திருந்த அன்பினால் தம் முதல் குமாரருக்கு அம் மூர்த்தியின் திருநாமத்தையே வைத்தார்.

உரிய பருவம் வந்தவுடன் அந்தக் காலத்து வழக்கப்படி திண்ணைப் பள்ளிக்கூடத்தில் தியாகராச செட்டியார் படித்தார். தம் குமாரர் தாம் பார்த்து வரும் வியவசாயத்தைக் கவனித்துக் கொண்டு வாழ்வதே போதும் என்ற எண்ணத்தினால் இவருடைய தந்தையார் இவரது கல்வி விஷயத்தில் மிக்க கவனம் செலுத்தவில்லை. வழக்கமாகப் பள்ளிக்கூடத்தில் கற்றுக்கொள்ளும் தமிழ்ப் பாடங்களையும் கணிதம் முதலியவற்றையும் தியாகராச செட்டியார்

பயின்று வந்தார். இவர் வளர்ச்சியடைய அடைய இவருடைய அறிவும் வளர்ச்சியடைந்தது. கல்வியிலே இவருக்கு ஆவல் இருந்து வந்தது. கேட்ட பாடங்களை மறவாது சிந்திப்பதும் புதிய செய்யுட்களை அறிந்துகொள்வதுமாகிய காரியங்களில் இவருக்கு ஊக்கம் அதிகமாயிற்று. இந்த இயல்பை இவர் தந்தையார் கவனிக்கவில்லை. இவரை வியவசாயத்துறையிலே நன்றாகப் பழகும்படி செய்ய வேண்டுமென்பது அவரது எண்ணம்.

வயல்களுக்குச் செல்லும்போது இவர் தந்தையார் இவரையும் அழைத்துக்கொண்டு செல்வார். அங்கே நடக்கும் வேலைகளைக் கவனிக்கும்படியும் சில வேலைகளைச் செய்யும்படியும் இவரை ஏவுவார். இவரும் உத்ஸாகத்தோடு அந்தக் காரியங்களைச் செய்வார். மடையடைப்பது, மடைமாற்றுவது, கரும்பாலைகளில் மாடுகளை ஓட்டுவது, கரும்பை ஆலைகளில் செலுத்துவது முதலியவற்றை இவர் செய்து பழகினார். இந்தப் பழக்கங்களால் இவருடைய தேகம் வன்மையுடையதாயிற்று.

தந்தையார் இஷ்டப்படி வியவசாய வேலைகளைச் செய்து வந்தாலும் கல்வியில் இருந்த ருசி சிறிதும் இவருக்கு மாறவில்லை. பள்ளிக்கூடப் படிப்பு முடிந்த பிறகும் ஓய்வு நேரங்களிலெல்லாம் தமிழ்ச் செய்யுள் நூல்களை இவர் படித்து வருவார்; அருகில் உள்ள ஊர்களுக்குச் சென்று அங்குள்ள வித்துவான்களோடு பழகி அவர்கள் அறிந்த நூல்களைப் பாடங் கேட்பார்.

பூவாளூரில் அக்காலத்தில் இருந்த சில கல்விச் செல்வர்கள் இவரிடம் அன்புவைத்துப் பழகினர். திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சிறந்த தமிழ் வித்துவானாக விளங்கிய காலம் அது. சில செல்வர்களுடைய வேண்டுகோளால் அப் புலவர்பெருமான் பூவாளூருக்கு ஒரு முறை வந்து சில நாட்கள் தங்கியிருந்தார். அது முதல் அவர் அடிக்கடி அவ்வூருக்கு வந்து

செல்லலாயினர். ஒரு முறை அவ்வூரினர் வேண்டு கோளின்படி திருமூலநாதர் விஷயமாக, [1]"பூவாளூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி" என்ற பிரபந்தத்தைப் பாடி அரங்கேற்றினுர்.

இவ்வாறு பிள்ளையவர்கள் பூவாளூருக்கு வரும் போதெல்லாம் அவருடன் சில மாணுக்கர்களும் வருவார்கள். எப்பொழுதும் பாடம் சொல்வதும் தமிழ் சம்பந்தமான பேச்சுக்களைப் பேசுவதும், செய்யுள் இயற்றுவதுமாக அக் கவிஞர் பெருமான் பொழுதுபோக்குவார். இளைஞராக இருந்த தியாகராச செட்டியார் தம் குலப் பெரியார்கள் அவர்பால் செல்லும்போது உடன் சென்று அங்கே நிகழ்பவற்றை ஆவலோடு கவனிப்பார்; எங்கும் புகழ் பரப்பி விளங்கிய அப்புலவர்பிரானைக் கண்டு கண்டு சந்தோஷமடைவார்; அவர் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்துக் கேட்டு வியப்பார்.

இயல்பாகவே தமிழ்க்கல்வியில் அன்புடையவராக இருந்த இவருக்குப் பிள்ளையவர்களைக் கண்ட பிறகு அந்த அன்பு முதிர்ந்தது. முன்பு முளைத்திருந்த அது பிள்ளையவர்களது முன்னிலையில் வளர்ந்து இலைவிட்டு நின்றது.

பிள்ளையவர்களும் இவரைக் கவனிக்கத் தொடங்கினுர் "இவ்வளவு கவனத்தோடு இங்கே வந்து விநயமாக நிற்கும் இந்தப் பிள்ளை யார்?" என்று அவர் விசாரித்தார். உடன் இருந்தவர்கள் இவரைப்பற்றிச் சொன்ஞர்கள். இவரும் பணிவாக அவருடன் பேசினுர். அது முதலே இவருக்கு அவரிடம் பக்தியும், "இவரே நம் ஆசிரியர்" என்ற எண்ணமும் உண்டாயின.

செட்டியார் சில முறை திருச்சிராப்பள்ளியில் இருந்த தம் சிறிய தந்தையார் வீட்டிற்குச் செல்வார். அக் காலங்களில் பிள்ளையவர்கள் வீட்டிற்கும் சென்று

---

1. ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டில் இப்பிரபந்தத்தைக் காணலாம்.

பார்த்துவருவார். அப்பெரியாரிடம் சிலர் எப்போதும் உடன் இருந்து பாடம் கேட்டு வருவதைக் கண்ட தியாக ராச செட்டியாருக்குத் தாமும் அவ்வாறு பாடம் கேட்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. தம் சிறிய தந்தை யார் மிக்க மதிப்போடு திருச்சிராப்பள்ளியில் இருந்தமை யால் உணவு முதலியவற்றில் யாதொரு குறைவும் இரா தென்று இவர் எண்ணினுர். ஆனல், தம் தந்தையார் அவ்வாறு செய்ய அனுமதி அளிப்பாரோ மாட்டாரோ என அஞ்சினுர்.

இவரது அச்சம் உண்மையாயிற்று. தியாகராச செட்டியார் தம் கருத்தைத் தந்தையாரிடம் தெரிவித்த போது, "உனக்கு இருக்கும் படிப்பே போதும். இனிமேல் படித்து ஒன்றும் சம்பாதித்துப் போட வேண்டிய அவசி யம் இல்லை. நிலபுலங்களைக் கவனித்துக்கொண்டு குடித் தனம் பண்ணுவதைவிட வேறு கௌரவம் ஒன்றும் இல்லை" என்று அவர் சொல்லிவிட்டார். தமிழ்ப் புலமை யும் வறுமையும் உலகத்தில் ஒருங்கே இருப்பதை அறிந்து தம் குமாரர் தமிழ் படிக்கப் போய்த் துரதிருஷ்டத்தை விலைக்கு வாங்கிக்கொண்டால் என் செய்வது என்ற எண்ணமும் அவருக்கு இருந்திருக்கலாம்.

---

## 4. தமிழ்க் கல்வி

தந்தையார் மறுத்தாலும், எவ்வாறேனும் முயன்று பிள்ளையவர்களிடம் மாணுக்கராகச் சேர்ந்துவிடுவதென்ற எண்ணம் தியாகராச செட்டியாருக்குப் போகவில்லை. அடிக்கடி இவர் தம் தகப்பனுரிடம் தம் உள்ளக் கருத் தைக் கூறி வற்புறுத்தினுர். அக்காலத்தில் இவருக்குப் பிராயம் பதினெட்டு. "கல்யாணம் செய்துகொண்டு குடித்தனம் செய்யவேண்டிய காலத்தில் படிக்கப் போக வேண்டுமென்று சொல்லுகிருயே?" என்று தகப்பனுர்

சொல்லியும் இவருக்குத் தமிழ்க் கல்வியில் இருந்த ஆவல் தளர்ச்சியடையவில்லை. இறுதியில் சிதம்பரம் செட்டியார் தம் குமாரருடைய விருப்பத்துக்கு இணங்கவேண்டியவ ரானார். "சரி, போய்த் தம்பி வீட்டில் இருந்து படித்து வா. ஒரேயடியாகப் படிப்பே கதியென்று இருந்துவிடாதே; தம்பியின் வியாபாரத்தையும் கவனித்துக் கற்றுக்கொள்" என்று தம் குமாரருக்கு அறிவுரை கூறித் திரிசிரபுரத் திற்கு அனுப்பினார்.

குரோதி வருஷம் (1844) இவர் பிள்ளையவர்களிடத் தில் மாணாக்கராகச் சேர்ந்தார். அதற்கு முன்பே தமிழில் கிடைத்த நூல்களை மிக்க அன்போடு வாசித்தும் சந்தித்த வித்துவான்கள்பால் பல விஷயங்களைக் கேட்டும் இவர் தம் அறிவை விருத்தி செய்துகொண் டிருந்தார்; அதனால் பிள்ளையவர்களிடத்தில் வந்தவுடனே திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடங் கேட்க ஆரம்பித்தார். செட்டி யார் பாடம் கேட்கையில் இவருடைய தகுதியையும் உண்மையான அன்பையும் தமிழ் நூல்களில் உள்ள பெருவிருப்பத்தையும் பிள்ளையவர்கள் உணர்ந்துகொண் டார். மற்ற மாணாக்கர்களைக் காட்டிலும் இவர் சிறந்த அறிவாளியாக இருந்தார். அதனால் பிள்ளையவர்களுக்கு இவரிடம் தனியான அன்பு ஏற்பட்டது. அக்காலத்தில் இவருடன் உறையூரைச் சார்ந்த திருத்தாந்தோன்றி என்னும் ஊரினராகிய மருதநாயக முதலியார், கடம்பர் கோயில் சுப்பராய முதலியார் முதலியவர்கள் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டு வந்தார்கள்.

தியாகராச செட்டியார் ஏட்டில் நன்றாக எழுதுவார். கடிதத்தில் இவர் எழுதும் எழுத்து நன்றாக இருக்கும். இக்காரணத்தால் பிள்ளையவர்கள் அன்பர்களுக்கு எழுத வேண்டிய கடிதங்களையும் அவ்வப்போது இயற்றிவந்த நூல்களையும் தனிப் பாடல்களையும் இவரைக்கொண்டு

எழுதச் செய்து வந்தார். இந்தப் பணிகளைச் செய்ததனால் செட்டியாருக்கும் பிள்ளையவர்களுக்கும் இருந்த உறவு வன்மை பெற்றது.

செட்டியாருடைய சிறிய தகப்பனார் திருச்சிராப் பள்ளியில் சின்னக் கடைத்தெருவில் தமக்குச் சொந்த மாக இருந்த ஒரு பெரிய மாளிகையில் வசித்துவந்தார். செட்டியார் அங்கே இருந்துவந்தார். உண்பதும் உறங்குவதுமாகிய காலங்களைத் தவிர மற்ற நேரங்களி லெல்லாம் இவர் தம் ஆசிரியருடன் நிழல்போல இருப் பார். சில சமயங்களில் இவருடைய வேண்டுகோளின் படி பிள்ளையவர்கள் இவருடைய சிறிய தந்தையார் மாளிகைக்கு வருவார். செல்வம் நிறைந்தவராகிய சிறிய தந்தையார் பிள்ளையவர்கள் வந்த காலத்தில் அவரை வரவேற்று உபசரிப்பார். இவ்வாறு அடிக்கடி நேரவே சில நாட்கள் பிள்ளையவர்கள் அந்த ஜாகையிலேயே நெடு நேரம் தங்கி மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லி வந்தார். இடவசதி நன்கு அமைந்திருந்தமையால் அவ்விடம் பலருக்குப் பாடம் சொல்வதற்கு ஏற்றதாயிருந்தது. இந்த நிகழ்ச்சியாலும் பிள்ளையவர்களுக்கும் தியாகராச செட்டி யாருக்கும் இருந்த பழக்கம் பலமடைந்தது.

தம் ஆசிரியரது குறிப்பறிந்து அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துவருவதில் செட்டியார் திறமை யுள்ளவர்; வர வர அவரைப் போலவே பேசவும் அவர் கூறும் இசையிலே செய்யுட்களைச் சொல்லவும் பழகிக் கொண்டார். செய்யுள் இயற்றும் ஆற்றலும் இவர்பால் உண்டாயிற்று. குரு பக்தியில் சிறந்த இவர் தம் ஆசிரிய ரைத் துதித்துத் தினத்துக்கு ஒரு செய்யுளாகச் சில மாதம் இயற்றி வந்தார். அவ்வாறு இயற்றிய செய்யுட் கள் 95. என்ன காரணத்தாலோ அந்த வழக்கம் தொடர்ந்து நடைபெறுமற் போயிற்று.

முதலில் திரிசிரபுரம் சிவாலயத்திலுள்ள செவ்வந்தி விநாயகர்மீது பின்வரும் காப்புச் செய்யுளை இயற்றினர்:

"சீர்கொண்ட வான்புகழ் மீனாட்சி
சுந்தர தேசிகன்றாட்
கேர்கொண்ட பைந்தமி ழந்தாதி
யென்னு மியலலங்கல்
நார்கொண் டிசைத்துப் புனைய
வுதவு நறையிதழி
தார்கொண்ட செவ்வந்தி யாம்பல்பொற்
றாமரைத் தாண்மலரே."

[இயல் அலங்கல் - இயற்றமிழ்மாலை. நார் - அன்பு; மாலை தொடுக்கும் நாரென்பது வேறொரு பொருள். நறை இதழி-தேனையுடைய கொன்றை. செவ்வந்தி ஆம்பல் செவ்வந்தி விநாயகர்; ஆம்பல் - யானை; இங்கே விநாயகரைக் குறித்தது. தாமரைத் தாள்மலர்-தாளாகிய தாமரை மலர். இயலலங்கல்....மலரே-தேனையுடைய கொன்றை மாலையோடு சேர்ந்த செவ்வந்திப் பூவும் ஆம்பல் மலரும் பொலிவு பெற்ற தாமரையாகிய தண்டையுடைய மலரும்; இயலும் மாலையை நாரைக்கொண்டு கட்டி அணிவதற்கு உதவும் என்று வேறொரு பொருள் தோற்றியது.]

ஆசிரியர்மேல் துதிகளைப் பாடத் தொடங்கியபோது கலித்துறை அந்தாதியாக ஒரு பிரபந்தம் இயற்றுவதென இவர் சங்கற்பம் செய்துகொண்டாரென்று தெரிகின்றது. நூலின் முதற்செய்யுள் வருமாறு:

"திருமன்னு பேரருண் மீனாட்சி
சுந்தர தேசிகனை
மருமன்னு கொன்றையும் வாளர
வுங்குனி மாமதியும்

கருமன்னு கண்டமுங் கண்ணுத
லுங்கரித் தோலுங்கரந்
தருமன்னி நின்ற பிரான்கழற்
போதென்று முன்னுவனே.”

[குனி-வளைந்த. கரு மன்னு-கருமை நிலைபெற்ற. கண்ணு தல்-அக்கினிக் கண்ணையுடைய நெற்றி.]

இதில் தம் ஆசிரியரைச் சிவபிரானாகவே எண்ணிப் பாராட்டியிருக்கின்றார். இவ்வாறு உள்ள செய்யுட்கள் பல. அகத்துறையாக அமைந்த செய்யுட்கள் சில. பின் வரும் செய்யுளை இவரும் பிறரும் பிற்காலத்தில் அடிக்கடி சொல்வது வழக்கம்.

“பெற்றாரு ணின்னைப்பெற் றார்போற்பெற்
றார்களும் பேண்பிறப்பை
உற்றா ருளரென்னைப் போலவுற்
றார்களு முன்னருளை
நற்றா ரணியு ளெனைப்போற்பெற்
றார்களு நாடிறினும்
மற்றார்முற் றோர்தரு மீனாட்சி
சுந்தர மாமணியே.”

[மற்று ஆர்? முற்று ஓர்தரும்-முழுதும் உணர்ந்த.]

இச்செய்யுளில் தம் ஆசிரியருக்கும் தமக்கும் உள்ள தொடர்பைச் செட்டியார் புலப்படுத்தியிருக்கிறார்.

திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடம் கேட்டு நிறைவேறியவுடன் திருவிளையாடற் புராணத்தையும், கம்பராமாயணத்திற் சில பகுதிகளையும், வேறு இலக்கியங்களையும் கேட்டார். ஊரில் இருந்த காலத்தில் சிறு பிரபந்தங்களையும் வேறு சிறு இலக்கிய நூல்களையும் படித்துவந்தார். அக்காலத்தில் இலக்கணம் கற்கவேண்டுமென்ற ஆசை மிகுதியாக இருந்தது. ஆனால் கற்பிக்கும் தகுதியுடையவர் யாரும் கிடைக்கவில்லை.

பிள்ளையவர்களிடம் வந்த காலத்தில் இலக்கிய அறிவு ஓரளவு படைத்திருப்பினும் அதற்கேற்ற இலக்கணப் பயிற்சி இல்லாமல் இருந்தது. அதனால் இலக்கியத்தில் திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடம் கேட்டாலும் இலக்கணத்தில் அடிப்படையான புஸ்தகம் ஏதாவது கேட்டால் அநுகூலமாக இருக்குமென்பது ஆசிரியர் கருத்து. ஆதலால், விசாகப் பெருமாளையர் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு உபயோகமாக இருக்கும் பொருட்டு எழுதி வெளியிட்ட பாலபோத இலக்கணத்தை முதலிலே பாடம் சொன்னார். செட்டியார் அந்தப் புஸ்தகத்தால் மிக்க பயனை அடைந்தார். தமிழ் இலக்கணப் பரப்பிற் புகுவதற்கு ஒரு வாயிலாக அப் புஸ்தகம் இருந்தது. அதனால் செட்டியார் பெரிய வித்துவானாக விளங்கிய பிற்காலத்தும் தாம் முதல் முதற் படித்த அந்தப் புஸ்தகத்தை ஒரு மாணிக்கம் போலப் பாதுகாத்து வந்தார். அதைப்பற்றிப் பாராட்டி இவர் பேசுவதை இவருடன் பழகியவர்கள் அறிவார்கள்.

பாலபோத இலக்கணத்திற்குப் பிறகு செட்டியார் நன்னூற் காண்டிகையுரையும் விருத்தியுரையும் பாடம் கேட்டார். இளமையில் எவ்வளவுக் கெவ்வளவு இலக்கணப் பயிற்சி இல்லாமல் இருந்தாரோ அவ்வளவுக் கவ்வளவு அதிகமான நாட்டம் அதில் பிறகு இவருக்கு உண்டாயிற்று. நன்னூலையும் அதன் உரைகளையும் மிகவும் கவனமாகப் படித்தார். எழுத்தெழுத்தாக எண்ணிப் படித்தாரென்று சொல்லுதல் மிகையாகாது. நன்னூலை இங்ஙனம் ஆராய்ந்து கற்றதனால் அதில் இவருக்கு இணையற்ற திறமை ஏற்பட்டது. இலக்கண நூல்களுள் நன்னூலுக்கு ஈடாக எதனையும் சொல்ல இயலாதென்பது இவர் கொள்கை. நன்னூலைப் பாடம் சொல்வதில் இவரைப் போன்றவர்களை நான் எங்கும் கண்டிலேன்.

நன்னூலுக்குப் பிறகு இலக்கணக் கொத்து, இலக்

கண விளக்கம், இலக்கணவிளக்கச் சூருவளி, யாப்பருங் கலக் காரிகை, தண்டியலங்காரம் முதலிய இலக்கண நூல்களைப் பாடம் கேட்டார்.

---

## 5. பட்டாளத்து வாத்தியார்

தியாகராச செட்டியார் ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பிரபுலிங்கலீலையைப் பாடங் கேட்டார். கற்பனைக் களஞ்சியமென்று பாராட்டப் பெறும் துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் இயற்றியது அக்காவியம். அதன் செய்யுள் நடையிலும் பொருட்சிறப்பிலும் செட்டியார் மிகவும் ஈடுபட்டார். அதைப் பாடங் கேட்டு வரும்போது இவர் பிள்ளையவர்களைப் பார்த்து, "இவர் ஓர் ஆள்தான் போல் இருக்கிறது" என்று சொன்னுர்: 'சிறந்த புலமை வாய்ந்த தீரர்' என்ற கருத்தோடு இவர் கூறினுர். பிள்ளையவர்கள் இவர் கருத்தை உணரவில்லை. 'முரட்டு ஆள்' என்று சொன்னதாக அவருக்குத் தோற்றியது. உடனே அவர், "என்ன அப்பா, இப்படிச் சொல்லுகிருய்? சிவப்பிரகாச சுவாமிகளை யாரென்று எண்ணிக் கொண்டாய்? அவருடைய வாக்கின் நயம் வேறு யாருக்கு வரும்? அவர் பாடல்களில் எதைப் பார்த்தாலும் அதிலே ஒரு நயம் இருக்குமே. அவர் இயற்றிய நால்வர் நான்மணிமாலையின் சுவையில் ஈடுபட்ட சிவஞான சுவாமிகள் அந்தப் பிரபந்தத்தை உருண்டை வடிவமான சுவடி ஒன்றில் எழுதித் தம் ருத்திராக்ஷ கண்டியிற் சேர்த்து அணிந்துகொண்டிருப்பாரென்று சொல்லுவார்கள். அத்தகைய சிறந்த பெரியாரை, நீ, 'ஓர் ஆள்' என்று சொல்லாமா?" என்றுர்.

செட்டியார்: நான் தவருக எண்ணிச் சொல்லவில்லையே. அவர் மனிதர்களுக்குள்ளே சிறந்து நிற்கும் ஒருவரென்ற எண்ணத்திஞல்தான் அப்படிச் சொன்

னேன். யாராவது கனவானே, தனவானே, அறிவாளியோ இருந்தால், 'இவன் ஒரு புள்ளி; இவன் ஓர் ஆள்' என்று சொல்வது எங்கள் ஊர் வழக்கம். அதனால் நான் சொன்னேன்.

பிள்ளையவர்கள்: இருந்தாலும் நீ சொல்வதை எவரேனும் கேட்டால் உன் கருத்தை அறிந்துகொள்ளமாட்டார். நீ புலவர்களின் அருமையை அறியாதவனென்று தான் எண்ணிக்கொள்வார்.

செட்டியார்: அப்படியானால் நான் சொன்னதைப் பொறுக்கவேண்டும். இன்னபடி பேச வேண்டுமென்று தெரியாமையால் சொல்லிவிட்டேன். இனிமேல் ஜாக்கிரதையாக இருப்பேன்.

இவ்வாறு சொல்லிச் செட்டியார் தம் வருத்தத்தைப் புலப்படுத்தினர்.

இளமைக் காலத்தில் சுவைத்துப் படித்த பிரபுலிங்க லீலையில் இவருக்கு மிக்க அன்பு இருந்தது. பிற்காலத்தில் சிவப்பிரகாச சுவாமிகளைப்பற்றிப் பேசும்போது, "கரும்புத் துண்டுகளைக் கணக்காக நறுக்கிக் கொடுத்து ஏமாற்றுவதுபோலச் சுவாமிகள் செய்திருக்கிறார். இப்போது அவர் வந்தால் நமஸ்காரம் செய்து, 'நாட்டு வருணனை நகர வருணனை முதலியவற்றை இன்னும் விரிவாகப் பாடி இருக்கக் கூடாதா? இரண்டு மூன்று பாடல்களில் சொல்லி நிறுத்தி விட்டீர்களே' என்று கேட்பேன்" என்பார்.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய சோணசைல மாலையை இவர் பாடம் கேட்டபோது தாமும் எழுசீரடி விருத்தத்தில் ஒரு மாலை பாடவேண்டுமென்ற ஆசை இவருக்கு உண்டாயிற்று. மாணாக்க நிலையில் இருப்பவர்களுக்கு எதைக் கண்டாலும் அதுமாதிரி பாடவேண்டுமென்ற ஆவல் உண்டாவது இயல்பு. இவர் திருச்செந்தூர் முருகக்கடவுள் விஷயமாக ஒரு மாலை இயற்றத்

தொடங்கி முப்பது செய்யுட்கள் பாடி நிறைவேற்றினார். அதில் உள்ள ஆசிரிய வணக்கம் வருமாறு:

"கந்தரத்து நீலங் கரந்தவர்க மீனாட்சி
சுந்தரவா சான்றாட் டுணைமலரைச் - சிந்தைமகிழ்ந்
துன்னுகவென் கண்கண் டுவக்க வணங்கமுடி
துன்னுகவாய் செய்க துதி."

[கந்தரம் - கழுத்து. சிந்தை உன்னுக. முடி வணங்கத் துன்னுக.]

இவ்வாறே திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள ஸ்தலங்களைப்பற்றிப் பதிகங்களும் இரட்டைமணிமாலைகளும் இவர் இயற்றினார்; இவற்றையன்றி அவ்வப்போது சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடியும் ஆசிரியர் கொடுத்த ஸமஸ்யைகளைப் பூர்த்தி செய்தும் இவர் இயற்றிய தனிப் பாடல்கள் பல.

அக்காலத்தில் பிள்ளையவர்களிடம் பல மாணாக்கர்கள் பாடம் கேட்டுவந்தனர். அவர்களுள் சிலருக்குச் செட்டியாரே சிறு நூல்களை முதலிற் பாடம் சொல்லிவந்தார். தமிழ் நூல்களை ஆசிரியர் வாயிலாகக் கேட்பதனாலும், தாமே சிந்தித்து ஆராய்வதனாலும் கிடைக்கும் அறிவு அந்நூல்களைப் பிறருக்குப் பாடம் சொல்வதனால்தான் பூரணமாகும். ஆதலின் செட்டியார் கற்றலாலும் கேட்டலாலும் பெற்ற பெரும் பயனைக் கற்பித்தலாலே பெருக்கிக் கொண்டார். உலக விஷயங்களை நன்கு அறிந்தவராதலின் அனுபவத்தினால் அறிந்த செய்திகளை உதாரணங்களாகவும் உவமைகளாகவும் சொல்லி நூற் பொருளைக் கேட்போர் மனம் எளிதிற் கவ்விக்கொள்ளும்படி பாடம் சொல்லும் ஆற்றல் இவரிடம் இருந்தது. அது வரவர வளர்ச்சிபெற்று விளங்கியது.

திரிசிரபுரத்தில் இருந்து படித்துவந்த காலத்தில் செட்டியாருக்கு விவாகமாயிற்று. அந்நகரில் இருந்த

விருத்தாசல செட்டியாருடைய குமாரியாகிய செல்லம்மா ளென்னும் பெண்மணியை இவர் மணந்துகொண்டார்.

அக்காலத்தில் அங்கே பட்டாளத்தாருக்காக ஒரு பள்ளிக்கூடம் இருந்தது. அதில் தமிழ்ப்பாடம் கற்பித்து வந்த ஆசிரியர் வேறு வேலைக்குப் போய்விட்டமையால் அவரிடத்திற்கேற்ற ஒருவர் வேண்டுமென்று அப்பள்ளிக் கூடத் தலைவர் ஆராய்ந்தார். தமிழ் சம்பந்தமான எந்த விஷயமும் அக்காலத்தில் பிள்ளையவர்களுக்குத் தெரியா மல் நடவாது. ஆதலின் பட்டாளத்துப் பள்ளிக்கூடத் தலைமையாசிரியர் அவரை அணுகிக் கேட்டபோது, அவர் தியாகராச செட்டியார் அவ்வேலைக்கு எவ்வகையாலும் தகுதியுடையவரென்று சொன்னார். உடனே செட்டியார் அவ்வேலையில் நியமனம் பெற்றார்.

அந்தப் பள்ளிக்கூடத்தில் இவர் வேலை பெற்றபோது இவருக்குச் சம்பளம் ரூபாய் பத்தே. அந்தப் பத்து ரூபாயை வைத்துக்கொண்டு மிகவும் சிக்கனமாக இவர் தம் மனைவியோடு வாழ்க்கை நடத்திவந்தார். இவருக்கு அக்காலத்தில் குடும்பத்திற்காகச் செலவழிந்தது ஐந்தே ரூபாயென்று இவர் சொல்லியிருக்கிறார்.

செட்டியார் ஆசிரியர் வேலையை ஒழுங்காகப் பார்த்து வந்தார். இயல்பாகவே தைரியமாகப் பேசும் இவர் பட்டாளத்தாருடைய பழக்கத்தால் பின்னும் அதிக மனோ தைரியமும் எதற்கும் அஞ்சாத இயல்பும் பெற்றார். ஓரளவு பிடிவாத குணமும் ஏற்பட்டது. பிள்ளையவர்க ளிடம் செட்டியார் வாதாடுவதுண்டு. அந்த வாதம் கடுமையாக வளர்ந்தால் அக் கவிஞர்பிரான், "பட்டா ளத்து வாத்தியாரென்பதைக் காண்பிக்கிறாயே!" என்று சொல்வார்.

பட்டாளத்தாருக்கு வன்மையான பழக்கங்களே அதிகமாக இருக்கும். அவர்களுடைய வாழ்க்கை நிலையும் பழக்க வழக்கங்களும் அவ்வாறு அமைந்துள்ளன. அவர்க

ருடைய உள்ளத்தில் தமிழ்ச்சுவையை ஏற்றுவதென்பது மிகவும் கடினமான காரியம். அந்தக் காரியத்தைச் செட்டியார் செய்தார். தமிழன்பையும் தெய்வ பக்தியையும் அவர்களிடம் விதைத்தார். இவரிடம் படித்த மாணாக்கர்கள் எல்லோரும் தமிழில் ஈடுபட்டார்களென்று சொல்ல இடமில்லாவிடினும், சிலரேனும் தமிழில் இன்பம் காணலாமென்ற திடமான அபிப்பிராயம் உடையவர்களானார்களென்பதில் தடையில்லை. பிற்காலத்தில் பல கிழவர்கள் செட்டியாரைக் கையுறைகளோடு வந்து கண்டு, தாங்கள் பட்டாளப் பள்ளிக்கூடத்திற் படித்த விஷயத்தையும் அக்காலத்தில் தங்கள் மனத்தில் ஊன்றிய தமிழன்பும் தெய்வபக்தியும் தங்கள் வாழ்க்கையில் எவ்வளவோ ஆறுதலளித்தன வென்பதையும் சொல்லிப் பாராட்டிச் செல்வார்கள். பாடம் சொல்வதில் சிறந்தவரென்ற புகழ் அப்பொழுதே தியாகராச செட்டியாருக்கு உண்டாயிற்று.

---

## 6. ஸ்ரீரங்கத்தில் ஆசிரியர்

அப்பள்ளிக்கூடத்தில் சில வருஷங்கள் இவர் ஆசிரியராக இருந்தபோது அவருடைய திறமையை அறிந்த கல்வித்துறை அதிகாரிகள் இவரை ஸ்ரீரங்கத்தில் அரசாங்கத்தாரால் நடத்தப்பெற்று வந்த தாலூகா பள்ளிக்கூடத்தில் இரண்டாம் ஆசிரியராக நியமித்தனர். 1857-ஆம் வருஷம் ஸெப்டெம்பர் மாதம் 12-ஆம் தேதியன்று ஸ்ரீரங்கத்தில் ஆசிரியர் வேலையை ஒப்புக்கொண்டார். அங்கே முதலில் இவருக்குப் பத்துரூபாய் சம்பளம் அளித்தார்களாயினும் அடுத்த வருஷத்தில் பதினைந்து ரூபாய் கிடைத்தது. இரண்டிரண்டு ரூபாயாகச் சம்பள உயர்வு பெறும் அக்காலத்தில் எடுத்தவுடனே ஐந்து ரூபாய் உயர்வு

இவருக்குக் கிடைத்தற்கு இவருடைய திறமைதான் காரணம்.

மாணாக்கர்களுக்கு எந்த முறையில் கற்பித்தால் அவர்கள் விரும்பிக் கற்றுப் பயன் அடைவார்களோ அதைச் செட்டியார் தம்முடைய அனுபவத்திலே தெரிந்துகொண்டு அதற்கு ஏற்றபடி நடந்துவந்தார். இவரது தோற்றம், தைரியம், சோர்வில்லாத பேச்சு, தமிழ்ப்புலமை ஆகிய இவையெல்லாம் மாணவர்கள் உள்ளத்திலேயே பயபக்தியை உண்டாக்கின. இவரிடம் மரியாதையும் இவரிடம் பாடம் கேட்பதில் ஒரு தனி விருப்பமும் அவர்களுக்கு ஏற்பட்டன.

இலக்கியங்களைப் பாடம் சொல்வதைக் காட்டிலும் இலக்கணங்களைப் பாடம் சொல்வது சிரமமான காரியம்; மாணாக்கர்களுக்கு இலக்கணமென்றால் வேப்பங்காயாக இருக்கும். சொல்லுகிறபடி சொன்னால் அந்த வேப்பங் காயையும் அவர்கள் உள்ளத்திலே செலுத்திவிடலாம். இந்தத் திறமை செட்டியாருக்கு நன்றாக இருந்தது. நன்னூல், காரிகை என்னும் இரண்டையும் தம் மாணாக்கர்களுக்கு இவர் கற்பித்தார். பள்ளிக்கூடத்தில் வைக்கப் பட்டிருந்த பாடம் இவருக்கு மிகவும் சாதாரணமாகத் தோற்றியது. "ஒரு மாதத்தில் படிக்கவேண்டியவற்றிற்கு ஒரு வருஷத்தையா வீணாக்குவது?" என்று சொல்லிப் பாடமாக உள்ளவற்றை விரைவில் சொல்லிவிட்டு அதன் பிறகு தமிழில் சுவையை உண்டாக்கும் செய்யுட்களையும் இலக்கணங்களையும் கற்பித்து வந்தார். மாணாக்கர்களிற் பலர் பள்ளிக்கூடத்திற் கற்றுக்கொள்வதோடு ஒழிந்த காலங்களில் இவர் வீட்டிற்கும் சென்று இவருக்கு வேண்டிய பணிவிடைகளைக் கவனித்துச் செய்துவிட்டு அங்கும் பாடம் கேட்டு வந்தனர்.

ஒரு வருஷத்தில் ஸ்ரீரங்கம் பள்ளிக்கூடத்திற்குக் கல்வி அதிகாரி ஒருவர் வழக்கம்போல் மேற்பார்வையிட வந்த

னர். அவர் தியாகராச செட்டியார் வகுப்பிற்கு வந்து மாணுக்கர்களைப் பரீட்சை செய்தார். அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பிள்ளைகள் திருத்தமாக விடையளித்தார்கள். அவர்கள் அதோடு நிற்கவில்லை. சில சமயங்களில் செய்யுளைப்பற்றிக் கேட்டால் குறித்த விஷயத்தைச் சொல்லிவிட்டு அச் செய்யுள் இன்ன வகையான செய்யுளென்றும், இன்ன அலங்காரம் அதில் அமைந்துள்ளதென்றும் சொன்னார்கள். எழுத்திலக்கணம் சொல்லிலக்கணம் சம்பந்தமான கேள்விகள் வந்தபோது சந்தர்ப்பத்திற்கேற்ற நன்னூற் சூத்திரங்களை எடுத்துச் சொன்னார்கள்.

அவர்கள்பால் அமைந்திருந்த தமிழறிவு அவர்கள் தகுதிக்குமேலே பலமடங்கு அதிகமாக இருப்பதை அதிகாரி உணர்ந்தார். தம்முடைய வினுக்களுக்கு விடை சொன்னபொழுது முதலில் அவருக்குச் சந்தோஷம் உண்டானாலும் தமக்கே விளங்காத பல விஷயங்களை அவர்கள் எடுத்துரைத்த போது அவர் பிரமித்துப் போனார். நியாயமாக அவர் அளவற்ற மகிழ்ச்சி அடைய வேண்டியவர். மிடுக்கான பேர்வழியான அந்த மனிதர் கோபத்தையே அடைந்தார். "இந்தப் பிள்ளைகளுக்கு வேண்டாத பாடங்களையெல்லாம் சொல்லிக்கொடுத்து ஏன் சிரமப்படுத்துகிறீர்கள்?" என்று செட்டியாரை அவர் கேட்டார்.

இவர் சிறிதேனும் அதற்கு அஞ்சவில்லை; "நீங்கள் சொல்வது ஆச்சரியமாக இருக்கிறதே! கற்பிக்கவேண்டிய பாடங்களைக் கற்பியாமல் இருப்பதல்லவோ குற்றம்? அதிகமாகக் கற்பிப்பது ஒரு குற்றமா? இவர்களுக்கு இந்த விஷயங்களைக் கற்றுக்கொள்வது சிரமமாக இருந்தால் இவ்வளவு திருத்தமாக விடை அளிப்பார்களா?" என்று அதிகாரியைக் கேட்கத் தொடங்கினர். அவர், 'இந்தப்

பண்டிதரை ஏமாற்ற முடியாது' என்று எண்ணிக் கோபத்தை அடக்கிக்கொண்டு போய்விட்டார்.*

அதிகாரியினுடைய அறியாமையையும் செட்டியாருடைய தைரியத்தையும் யாவரும் அறிந்து செட்டியாரைப் பாராட்டலானார்கள்.

பள்ளிக்கூடத்தில் மாணாக்கர்கள் வேறு பாடங்களைக் கற்று வந்தாலும் தமிழினிடத்தில் தனியான அன்புள்ளவர்களாயினர். செட்டியாரிடத்தில் அக்காலத்தில் படித்துத் தேர்ந்தவர்களிற் பலர் பிற்காலத்தில் நல்ல பதவியில் இருந்து விளங்கினார்கள். ஸ்ரீரங்கம் அரசாங்க வக்கீலாக இருந்த சிங்கபையங்கார், ஸால்ட் அஸிஸ்டண்டு கமிஷனர் கிருஷ்ணசாமி ஐயங்கார், கிருஷ்ணமாச்சாரியார், ராகவாச்சாரியார், குப்புசாமி ஐயர், நாதமுனி கிருஷ்ணையங்கார், வக்கீல் ரங்கசாமி ஐயர், கோபாலசாமி ஐயர் முதலிய பலர் நல்ல நிலையை அடைந்து சிறந்திருந்த பிற்காலத்திலும் தியாகராச செட்டியாரை மறவாமல் பாராட்டி வந்தனர்.

ஸ்ரீரங்கத்தில் இவர் இருந்த காலத்தில் அடிக்கடி திருச்சிராப்பள்ளி வந்து தம் ஆசிரியராகிய பிள்ளையவர்களைக் கண்டு பேசிச் சந்தேகங்களைத் தெளிந்துசெல்வார். அவர் தம் மாணாக்கர் தமிழறிவில் மேம்பட்டு விளங்குவதை உணர்ந்து மிக்க சந்தோஷம் அடைந்தார்.

சில வருஷங்களுக்குப் பிறகு தியாகராச செட்டியாருடைய சம்பளம் பதினைந்து ரூபாயிலிருந்து பதினெட்டு ரூபாயாக உயர்ந்தது.

---

* அக்காலத்தில் அவ்வகுப்பில் மாணாக்கராக இருந்தவரும், பிற்காலத்தில் திருச்சிராப்பள்ளியிலே வக்கீலாக விளங்கினவருமாகிய ஸ்ரீ ராகவாசாரியாரென்பவர் இந் நிகழ்ச்சியை எனக்குச் சொன்னார்.

இவர் அக்காலத்தில் ஸ்ரீரங்கத்திலேயே ஜாகை வைத்துக்கொண் டிருந்தார். தினந்தோறும் கொள்ளிடம் சென்று நீராடி அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வந்து திருவாசக பாராயணத்தைத் தவறுமல் செய்வார். அந்நூலில் இவருக்கு ஈடுபாடு மிகுதியாக இருந்தது. திருவாசகம் முழுவதுமே இவருக்குப் பாடம் உண்டு.

இவர் விடியற்காலத்தில் ஆற்றுக்குப் போகும் பொழுது பள்ளிக்கூடத்திற் படிக்கும் பிள்ளைகளிற் சிலர் உடன் செல்வார்கள்; இவர் கொண்டு செல்லும் ஊற்றுப் பட்டை, தோய்க்கும் கல், பாத்திரம் ஆகிய இவற்றையெல்லாம் வாங்கிக்கொள்வார்கள்; ஆற்றுக்குச் சென்ற பின் அங்கே வஸ்திரம் தோய்ப்பதற்கு ஒன்றும், ஸ்நானம் செய்வதற்கு ஒன்றும், வஸ்திரத்தை ஊறவைப்பதற்கு ஒன்றுமாக மூன்று ஊற்றுக்களைத் தனித்தனியே போட்டு இறைத்துக்கொடுப்பார்கள். ஆற்றிற்குச் செல்லும்பொழுதும் வரும்பொழுதும் நன்னூற் சூத்திரம், யாப்பருங்கலக் காரிகை மூலம் முதலியவற்றை மனப்பாடம் செய்யும்படி செட்டியார் அவர்களுக்குச் சொல்வதோடு பொருளும் சொல்லிக்கொடுப்பார்.

அக்காலத்தில் யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலர், சதாசிவப்பிள்ளை யென்பவருடன் கோயிலூரிலிருந்து திருச்சிராப்பள்ளிக்கு வந்து ஓர் இடத்தில் தங்கியிருந்தார். நாவலர் வந்திருப்பதை அறிந்த செட்டியார் அங்கே சென்று அவரைப் பார்த்துச் சம்பாஷணை செய்திருந்ததோடு திருச்சிராப்பள்ளியிலுள்ள திருக்கோயில்களுக்கும் அருகிலுள்ள தலங்களுக்கும் அழைத்துச் சென்று ஸ்வாமி தரிசனம் செய்வித்தார். செட்டி நாட்டில் உள்ள கண்டனூரிலிருந்த தனவைசியச் செல்வராகிய முத்துக்கறுப்பச் செட்டியாரென்பவர் நாவலர் அங்கே வந்திருந்தபோது அவரிடம் ஒரு வேண்டுகோள் செய்துகொண்டார். சாக்கோட்டை யென்று பெயரையுடைய

அளகாபுரியில் எழுந்தருளியிருக்கும் உமையம்மை விஷய மாக ஒரு பிள்ளைத்தமிழ் இயற்ற வேண்டுமென்று அச் செட்டியார் கேட்டுக்கொண்டார். நாவலருக்கு அப் பிரபந்தம் இயற்ற நேரமின்மையால் திரிசிரபுரம் வந்தி ருந்த காலத்தில் தியாகராச செட்டியாருடைய புலமையை யும் செய்யுளியற்றும் ஆற்றலையும் அறிந்து அவரையே அப் பிள்ளைத்தமிழை இயற்றி நிறைவேற்றும்படி சொன் ஞர். செட்டியார் அவ்வாறே செய்வதாக ஏற்றுக் கொண்டார். ஆறுமுக நாவலர் யாழ்ப்பாணம் சென்ற பிறகு, 'பிள்ளைக்கவியில் எத்துணைச் செய்யுள் ஆயின?' என்று செட்டியாருக்குக் கடிதங்கள் எழுதி வந்தார். நான் அவற்றைப் பார்த்திருக்கிறேன். செட்டியார் ஓய்ந்த நேரங் களில் அப்பிரபந்தத்தைப் பாடி முடித்தார்.*

ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அக்காலத்தில் வாட்போக்கிக் கலம்பகம் என்னும் ஒரு பிரபந்தம் இயற்றி ஞர். இரத்தினகிரியென வழங்கும் தலமாகிய வாட்போக்கி யில் அப்பிரபந்தத்தை அரங்கேற்ற வேண்டியிருந்தது. பிள்ளையவர்களுக்கு அங்கே சென்று அரங்கேற்றச் சந்தர்ப்பம் இல்லாமற் போயிற்று. ஆயினும் தம் மாணுக் கராகிய இவரை அனுப்பி அரங்கேற்றம் செய்து வரும் படி கட்டளையிட்டார். இவர் அவ்வாறே சில மாணுக் கர்களுடன் அங்கே சென்று அந்தத் தலத்தின் அடியார்

---

* அப்பிரபந்தம் பிற்காலத்தில் (பிரமாதி௵ தை௴) அச்சிடப்பெற்றது. அதன் முகப்புப் பக்கத்தில் 'சாக்கை யென்று வழங்குகிற அளகாபுரி உமையம்மை பிள்ளைத் தமிழ். இஃது கண்டனூர் அருணுசல செட்டியார் குமாரர் முத்துக் கறுப்பச் செட்டியார் கேட்டுக்கொள்ள யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்கள் கட்டளையின்படி திரிசிரபுரம் சி. தியாக ராச செட்டியாராற் செய்யப்பட்டது' என்பதைக் காணலாம்.

குழாங்களாகிய *பன்னிரண்டாம் செட்டிமார்களும் பிறரும் அளவற்ற மகிழ்ச்சியடையுமாறு கலம்பகத்தைப் பிரசங்கம் செய்து அரங்கேற்றினார்; எல்லோருடைய உபசாரங்களையும் பெற்றுத் தமக்கும் தம் ஆசிரியருக்கும் நற்புகழைச் சம்பாதித்துக்கொண்டு திரிசிரபுரம் வந்து சேர்ந்தார்.

அந்தக் கலம்பகத்தைப் பிள்ளையவர்கள் இயற்றி வந்த காலத்தில் செய்யுட்களை ஏட்டில் எழுதியவர் செட்டியாரே. அப்போது நடந்த செய்தி ஒன்றைச் செட்டியார் சொல்ல நான் கேட்டிருக்கிறேன்; "ஒரு நாள் கலம்பகச் செய்யுட்களை இரவில் பிள்ளையவர்கள் சொல்லச் சொல்ல எழுதிவந்தேன். எட்டுமணி வரையில் எழுதினேன். பதினாறு செய்யுட்கள் ஆயின. அப்போது விளக்கில் எண்ணெயில்லாமற் போயிற்று. எண்ணெயில் நனைந்து கிடந்த திரிகளை ஒன்றன் பின் ஒன்றாகத் தூண்டித் தூண்டி எரியவிட்டுக்கொண்டே மேலும் சில பாடல்களை எழுதினேன். அந்தத் திரியெல்லாம் எரிந்த பிறகு பேசாமல் ஏட்டையும் எழுத்தாணியையும் கட்டி வைத்து விட வேண்டியதாயிற்று" என்று பழங்கதையைக் கூறினார் இவர்.

---

* இத்தலத்திலுள்ள பொன்னிடு பாறையில் வணிகர் பதினொருவர் தம் வருவாயைப் பங்கிட்டுக்கொள்ளும்பொழுது பன்னிரண்டு பங்காக இருந்தது. பதினொரு பங்கு இடும்பொழுதெல்லாம் பன்னிரண்டு பங்குகளாகவே வந்தமையால் அந்தப் பன்னிரண்டாம் பங்கை இத்தலத்துச் சிவபெருமானுக்கு நித்திய நைமித்திகங்கள் செய்யும்பொருட்டு வழங்கலாயினர். அதனால் அவ்வணிகர்களுக்கும் அவர் வழிவந்தோருக்கும் பன்னிரண்டாம் செட்டிகளென்ற பெயர் உண்டாயிற்று.

"ஏன்? தீபத்தில் எண்ணெய் விட்டு எழுதுவது தானே?" என்றேன் நான்.

"எண்ணெய் இருந்தால் திரியை எரிப்பதற்கு நியாயம் இல்லையே! அந்தப் பண்டம் இல்லாததனால்தான் பிள்ளையவர்கள் உள்ளத்தில் கவிச் சுடர் கொழுந்து விட்டுப் பிரகாசித்தாலும் அதை ஏட்டில் ஏற்றிக்கொள்ள இயலவில்லை" என்று செட்டியார் விடை அளித்தார்.

---

## 7. "தண்ணீருங் காவிரியே"

தமிழ் நாட்டில் தம் பெயரை நிலை நிறுத்தியவர்களில் இராமநாதபுரம் ஸம்ஸ்தான மானேஜராக இருந்த ஸ்ரீபொன்னுசாமித்தேவர் ஒருவர். அந்த ஸம்ஸ்தானத்தின் நிர்வாகத்தை மிகச் சிறப்பாகவும் ஒழுங்காகவும் அவர் நடத்தி வந்தார்; சிறந்த மதியூகியாகிய அவர் ஸம்ஸ்தானத்தை நிர்வாகம் செய்து வந்த காலத்தில் அவரது அதிகாரத்தின் கீழே குடிகளும் வித்துவான்களும் நன்மை பெற்றனர். ஸம்ஸ்தானத்தின் செல்வ நிலையும் பெருமையும் உயர்ந்தன. மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவி நடத்தி வந்த ஸ்ரீ பாண்டித்துரைத் தேவருடைய தந்தையார் அவர்.

அவர் அருங்கலை விநோதர். மிகவும் அழகாகப் பிரசங்கம் செய்வார்; கேட்போர் மனத்தைக் கவரும் வண்ணம் செய்யுட்களுக்கு விரிவாக உரை கூறுவார்; சிலேடை நயம் அமையவும் சமயோசித சாதுரியம் புலப்படவும் பேசுவார்; ஏதேனும் ஒரு விஷயத்தை எடுத்துக்கொண்டு காரண காரியங்களுடன் வாதம் செய்வார்; செய்யுள் இயற்றுவார்.

நன்றாகப் படித்தவராகையினால் தரம் அறிந்து பாராட்டும் திறமை அவரிடம் அமைந்திருந்தது. தம்மிடம் வரும் வித்துவான்கள் இன்ன இன்ன துறையில்

வல்லவர் என்பதை அறிந்து அவரவர்களுக்கேற்ற கேள்வி களைக் கேட்டு அவர்களது கல்வியாழத்தைப் பார்ப்பார். திறமை மிக்க வித்துவான்கள் அவரால் பரீட்சிக்கப் பெறு தலை ஒரு கௌரவமாகவே கருதினர். அவர்பால் வரும் வித்துவான்கள் வைரமணிகளைப்போல் இருந்தனர். அவர் சாணைக்கல்லாக இருந்தார். அவ்வித்துவான்கள் அதன் பிறகு அதிகப் பிரகாசத்தை அடைந்தார்கள்.

பொன்னுசாமித் தேவர் ஸம்ஸ்தான காரியமாக ஒரு முறை சென்னைக்குப் பரிவாரங்களுடன் பிரயாணமானுர். அக்காலத்தில் அந்நகரத்திற்கு இருப்புப்பாதை ஏற்படா மையால் இடை யிடையே தங்கித் தங்கிச் செல்லவேண்டி யிருந்தது. இராமநாத புரத்திலிருந்து புறப்பட்டவர் இடையே திருச்சிராப்பள்ளியில் தங்கினுர். அப்பொழுது அவர் தியாகராச செட்டியாரைப் பார்க்க விரும்பினுர். செட்டியாரோ, பிள்ளையவர்களோ அந்தப் பிரபுவை அதற்கு முன்பு பார்த்ததில்லை: கேள்வியுற்றிருந்தார்கள்.

பொன்னுசாமித் தேவர் குறிப்பை அறிந்த ஒருவர் ஸ்ரீரங்கத்துக்கு வந்து தியாகராச செட்டியாரைப் பார்த் துப் பொன்னுசாமித் தேவர் திருச்சிராப்பள்ளிக்கு வந் திருப்பதையும் செட்டியாரைப் பார்க்கும் விருப்பம் அவ ருக்கு இருப்பதையும் சொன்னுர். செட்டியார் உடனே பெருமகிழ்ச்சியுடன் சென்று தேவரைக் கண்டு பேசி இன்புற்றுர். இருவரும் ஒருவருக்கொருவர் தம் தம் அறிவுத்திறத்தைப் புலப்படுத்தும் வண்ணம் சம்பாஷணை செய்தனர்.

அவ்வாறு பேசிக்கொண்டே இருக்கையில் பொன்னு சாமித் தேவர் மெல்லத் தியாகராச செட்டியாரை ஒரு வாதத்தில் ஈடுபடும்படி செய்தார். பாண்டிய நாடு, சோழ நாடு என்னும் இரண்டில் எது சிறந்ததென்ற விஷய

மாக இருவரும் வாதம் செய்யலாயினர். அருகில் பல இருந்து அவ்வாதத்தைக் கவனித்து வந்தனர்.

பொன்னுசாமித் தேவர் பாண்டியநாடே சிறந்ததென் பதற்குரிய நியாயங்களை எடுத்துரைக்கலானார்: "சிவ பெருமான், உமாதேவியார், முருகக்கடவுளென்னும் மூவரும் ஆட்சி புரிந்தது பாண்டிய நாடு. அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் சோமசுந்தரக் கடவுள் இயற்றுவதற்கு இடமானது இந்த நாடு. ஞானசம்பந்தர் சைவத்தை இந் நாட்டிலேதான் நிலைநிறுத்தினர். தமிழை வளர்த்த சங்கம் பாண்டி நாட்டில்தான் இருந்தது. தமிழ் நாடென்ற பெயரே பாண்டி நாட்டுக்கு உரியது. தமிழுக்கு இலக்கணம் வகுத்த அகத்தியர் எழுந்தருளிய பொதியமலை பாண்டி நாட்டைச் சார்ந்தது. வையை, தாமிரபர்ணி என்ற இரண்டு நதிகளும் பல மலைகளும் முத்தெடுக்கும் கொற்கைத் துறையும் உடையது இந் நாடு. திருமால் மச்சாவதார மெடுத்தது வையை நதி நீரிலென்று பாக வதத்தில் கூறியிருக்கிறது" என்பனபோன்ற பல கார ணங்களை அவர் சொன்னர்.

தியாகராச செட்டியார் சோழ நாட்டின் சிறப்புக்களை எடுத்துச் சொல்லலானர்: "சிவபெருமான் திருவாரூரில் அரசு புரிந்தார். முந்நூற்றறுபது லீலைகள் செய்தார். சைவர்களாலும் வைஷ்ணவர்களாலும் கோயிலென்று பாராட்டப் பெறுவனவாகிய சிதம்பரமும் ஸ்ரீரங்கமும் இந்நாட்டிலே உள்ளன. சோழர்கள் பல சிறந்த திருக் கோயில்களைக் கட்டி இந்நாட்டை அழகுபடுத்தி இருக் கின்றனர். சைவத்தை நிலைநிறுத்திய ஞானசம்பந்தர் திருவவதாரம் செய்தது இந்நாட்டிலேயே. கவிச் சக்கர வர்த்தியாகிய கம்பர் இந்நாட்டுக்கு உரியவரே. எல்லா வற்றிற்கும் மேலாகப் பொய்யாத காவிரியைத் தனக்கு அணிகலமாக உடையது சோழ நாடே" என்றும் பிறவா றும் சொல்லி வாதம் செய்தார்.

வாதம் மேலும் மேலும் வளர்ந்துகொண்டே வந்தது. ஒருவரும் சளைக்கவில்லை. நெடுநேரமாகிவிட்டமையின் ஒருவாறு வாதம் செய்வதை நிறுத்தித் தேவர் செட்டியாரோடும் வேறு சிலரோடும் காவிரிக் காட்சியைப் பார்க்கப் புறப்பட்டனர். போகும்போது வேறு பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டே சென்றனர். காவிரிக்குப் பாலம் போட்டு அப்போது சில வருஷங்களே ஆகியிருந்தன. புது வெள்ளம் வந்திருந்தமையால் நதி இரு கரையும் புரண்டோடியது. பாலத்தில் யாவரும் சென்று இடையில் ஓர் இடத்தில் நின்றுகொண்டனர். மாலைவேளை; இனிய காற்று வீசிக்கொண்டிருந்தது. காவிரியின் இருகரையிலும் கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் ஒரே பசுமையான தோப்புக்கள் இருந்தன. திரிசிராமலை தென்பக்கம் உயர்ந்து நின்றது. அந்தக் காட்சியிலே ஊன்றி மெய்ம் மறந்து நின்ற பொன்னுசாமித்தேவர், "என்ன காட்சி! என்ன அழகு! தமிழ் மூதாட்டியாகிய ஔவைப் பிராட்டியார் தெரியாமலா சொன்னார்!" என்று சொல்லி,

> "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
> மண்ணாவ துஞ்சோழ மண்டலமே—பெண்ணாவாள்
> அம்பர்ச் சிலம்பி அரவிந்த மேமலராம்
> செம்பொற் சிலம்பே சிலம்பு"

என்ற செய்யுளை வாயாரச் சொன்னார். அருகில் இருந்த தம் ஸம்ஸ்தானத்து அதிகாரிகள் சிலரிடம், "இக் காட்சியைப் பார்த்தீர்களா? என்ன ஆனந்தமாக இருக்கிறது!" என்று கூறி விம்மிதமுற்று நின்றார்.

அங்கே நின்றுகொண்டிருந்த செட்டியாருக்கு அந்தக் காட்சி தினந்தோறும் பார்த்துப் பழகியதுதானே? ஆதலின் அவர் அதில் கருத்தைச் செலுத்தவில்லை; ஆனால் பொன்னுசாமித் தேவர் தம்மையே மறந்து காவிரிக் காட்சியில் ஈடுபட்டிருப்பதை அவர் கவனித்தார். ஔவையார் பாடலைத் தேவர் சொல்லிப் பாராட்டியவுடன் செட்டியார்

அதுதான் சமயமென்று துணிந்து முன்னே வந்து கையைக் கொட்டி, "என் கட்சி ஜயித்தது! தங்கள் உள்ளத்தில் தோன்றிய உண்மை தானே வெளிப்பட்டு விட்டது. ஔவையார் கூறிய பாடலைத் துரையவர்களே ஒப்புக் கொண்ட பிறகு நான் செய்த வாதம் பலித்ததென்பதில் என்ன தடை?" என்றார்.

பொன்னுசாமித் தேவர் திரும்பிப் பார்த்தார். அவர் விழித்துக்கொண்டார். தம்மை அறியாமலே வியப்பு மிகுதியாற் பரவசமாகித் தாம் கூறியவற்றைச் செட்டியார் அனுகூலமாக்கிக்கொண்டாரென்று அறிந்தார்.

"என்ன சொல்லுகிறீர்கள்? நான் சொன்ன பாடல் என் கட்சிக்கல்லவா அனுகூலமாக நிற்கிறது?" என்று திடீரென்று மடையை மாற்றினார்.

செட்டியார், "எப்படி?" என்று கேட்டார்.

"அந்தப் பாட்டில் உள்ள ஏகாரங்கள் எதிர்மறைப் பொருளில் வந்தன. தண்ணீருங் காவிரியே அன்று; பொருநையாறல்லவோ? மிகத் தெளிவுள்ள நீரைப் பெற்ற அதுதான் சிறந்தது; இதோ பாருங்கள்: இந்த நீர் கலக்கமாகவல்லவோ இருக்கிறது. தார்வேந்தன் சோழனே? பாண்டியர்களே அன்றோ? ஐந்து நிலங்களையும் உடைய நாட்டை ஆளும் பெருமை அவர்களுக்குத்தானே உண்டு?"

தேவர் மேலும் விரித்துக்கொண்டே போனார். தோல்வியுற்ற வீரன் இருமடங்கு கோபத்துடன் எழுவது போல அவர் மிக்க வேகத்துடன் பேசலானார். செட்டியார் ஒன்றும் மறுத்துப் பேசவில்லை; "இந்த மாதிரி செல்வத்திலும் கல்வியிலும் சிறந்த பிரபுக்களைப் பார்ப்பது அருமையிலும் அருமை" என்று பாராட்டி அந்த வாதத்திற்கு ஒரு முடிவு கட்டினார்.

பொன்னுசாமித் தேவர் செட்டியாருக்குச் சில சம்மானங்களைச் செய்துவிட்டு மறுநாளே சென்னையை நோக்கிப் புறப்பட்டார்.

## 8. எழுத்துப்பேறு தந்த பேறு

இப்போது கும்பகோணத்தில் காலேஜாக இருக்கும் கல்வி நிலயம் ஆரம்பத்தில் மாகாணப் பள்ளிக்கூடம் (Provincial School) என்ற பெயரோடு உயர்தரப் பாட சாலையாக இருந்தது. அங்கே போர்ட்டர் துரையென்பவர் தலைமையாசிரியராக இருந்தார். அவருக்கு அடுத்தபடியாகத் தண்டலம் கோபால ராவ் ஆசிரியராக இருந்தார். கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகரின் குமாரரும் பிள்ளையவர்களின் மாணாக்கருமாகிய ஸ்ரீசாமிநாத தேசிகரென்பவர் அங்கே முதல் தமிழ்ப்பண்டிதராக இருந்து வந்தார். அவர் திருவனந்தபுரம் மகாராஜா காலேஜில் தமிழாசிரியர் உத்தியோகம் பெற்று அங்கே போய்விட்டார். அப்போது அவர் ஸ்தானத்திற்குத் தக்க பண்டிதர் ஒருவரும் உடனே அகப்படாமையால் சாமிநாத தேசிகர் சொல்லிவந்த பாடங்களிற் சிலவற்றை இரண்டாம் பண்டிதருக்குப் பிரித்துக் கொடுத்துவிட்டு எஞ்சின பாடங்களைக் கோபாலராவே சொல்லிவந்தார். அவர் தமிழில் நல்ல பயிற்சி உடையவர். நன்னூலையும் பிற நூல்களையும் அழுத்தமாகப் படித்தவர்.

ஒரு நாள் கோபாலராவ் காலேஜில் இலக்கண பாடம் நடத்திக்கொண்டிருந்தார். வழக்கப்படி முதல் நாள் நடந்த பாடத்தில் கேள்விகள் கேட்கத் தொடங்கினார். "எகர வினாமுச் சுட்டின் முன்னர்" என்ற சூத்திரத்திலும் அதன் உரையிலும் வினாக்களைக் கேட்டு வரும்போது ஒரு மாணாக்கனை, "செல்வுழிச் செல்க என்பதை எப்படிப் பிரிப்பது?" என்று கேட்டார். அவன், "செல் உழி செல்க" என்று பிரித்துச் சொன்னான்.

"வகரம் இடையில் வந்திருக்கிறதே, அதற்குப் பெயர் என்ன?" என்று மீட்டும் கேட்டார். அந்த மாணாக்கன் விடை கூறவில்லை. ஒவ்வொரு மாணாக்கனைக் கேட்டுவருகையில் பலர் விடை தெரியாமல் விழித்தனர்.

ஒரு மாணுக்கன் மாத்திரம், "செல்வுழியென்பதில் இடையே வந்த வகரம் எழுத்துப்பேறு. விண்வத்துக் கொட்கும்' என்பதில் விண், அத்து என்னும் இரண்டும் சேரும்போது இடையில் வந்த வகரமும் அத்தகையதே" என்று தைரியமாகச் சொன்ஞன்.

அவன் கூறிய விடையைக் கேட்டுக் கோபாலராவ் ஆச்சரியமடைந்து அவனை ஊன்றிப் பார்த்தார். வகுப்பிலே சொல்லிக்கொடுக்காத விஷயங்களையும் அவன் தெரிந்துகொண் டிருந்தான்.

"அந்த வகரத்தை உடம்படு மெய் என்று ஏன் சொல்லக் கூடாது?" என்று கோபாலராவ் கேட்டார்.

"உயிரீற்றின் பின் உயிர் வந்தால் இரண்டும் நின்ற வாறே சேராவாதலால் அவற்றை உடம்படுத்தற்கு வரும் யகர வகர மெய்களை மட்டும் உடம்படு மெய்யென்று சொல்வர். இது வேறு வகையில் தோன்றிய எழுத்தாதலின் எழுத்துப்பேறு என்றுதான் சொல்லவேண்டும்" என்று அவன் பின்னும் தெளிவாகச் சொன்ஞன்.

ஆசிரியருக்கு அளவற்ற உவகை உண்டாயிற்று.

"உன் பெயர் என்ன?" என்று ஆதரவுடன் கேட்டார் கோபாலராவ்.

"தேவாஜி ராவ்."

"நீ இந்தப் பள்ளிக்கூடத்தில் எவ்வளவு காலமாகப் படிக்கிருய்? இதற்கு முன் எங்கே யாரிடம் படித்தாய்?"

"இந்த வருஷந்தான் இங்கே வந்தேன். இதற்கு முன் ஸ்ரீரங்கம் பள்ளிக்கூடத்தில் தியாகராச செட்டியாரிடம் படித்தேன். அவரிடந்தான் நன்னூலைக் கற்றுக் கொண்டேன்" என்ருன்.

கோபால ராவ் ஏதோ ஒரு புதிய பொருளைக் கண்டு பிடித்தவரைப் போல உத்ஸாகமடைந்தார். போர்ட்டர் துரை, "ஒரு நல்ல பண்டிதரைத் தேர்ந்து இந்தப் பள்ளிக்

கூடத்தில் நியமிப்பது உங்கள் பொறுப்பு" என்று சொல்லியிருந்தமையால் அவர் அந்தக் கவலேயோடிருந்தார். தேவாஜி ராவ் மூலமாகத் தியாகராச செட்டியாரின் திறமையை அறிந்தவுடன் செட்டியாரையே வருவித்து அங்கே நியமிக்கவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு உண்டாகிவிட்டது.

அன்றே அவர் தியாகராச செட்டியாருக்கு ஒரு கடிதம் எழுதினார். "உங்களுடைய கல்வியாற்றலே நான் தெரிந்துகொண் டிருக்கிறேன். இந்தப் பள்ளிக்கூடத்தில் முதல் தமிழ்ப்பண்டிதர் வேலை காலியாக இருக்கிறது. அதற்கு உங்களை நியமிக்கலாமென்று நினைக்கிறேன். நீங்கள் ஒருமுறை இங்கே வந்தால் நேரில் விஷயங்களைப் பேசலாம்" என்று அக்கடிதத்தில் குறிப்பித்திருந்தார்.

செட்டியார் அந்தக் கடிதத்தைக் கண்டவுடன், 'இறைவன் திருவருள் இது' என்று நினைத்தார். தம்முடைய ஊருக்கு அருகில் தம் உறவினர்களுக்கு இடையில் இருந்தாலும் கும்பகோணத்துக்குப் போனால் பல வகையில் நன்மை உண்டாகுமென்பது இவர் நினைவு. இவருடைய ஆசிரியராகிய ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக விளங்கிய காலம் அது. அவர் திரிசிரபுரத்தில் இருந்த காலத்தில் அவரை அடிக்கடி பார்த்துப் பழகிச் செட்டியார் இன்புற்று வந்தார்; அவர் திரிசிரபுரத்தை விட்டுச் சென்றதுமுதல் அவருடைய பழக்கம் முன்போல அடிக்கடி நேராதது பெருங்குறையாகவே இருந்தது. கும்பகோணத்துக்குப் போனால் அதன் அருகிலுள்ள திருவாவடுதுறைக்கு வாரந்தோறும் சென்று தம் ஆசிரியரோடு பழகலாமென்றும், திருவாவடுதுறை யாதீனத்தின் பழக்கமும் ஏற்படுமென்றும் இவர் எண்ணினார். ஸ்ரீரங்கத்திலிருந்த பள்ளிக்கூடமும் அரசாங்கத்தாரால் நடத்தப் பெற்றதாயினும் கும்பகோணத்திலுள்ள கலாசாலையைப்

போலப் பெரிதன்றென்பதை இவர் அறிவார். அங்கே தம்முடைய அறிவும் சௌகரியங்களும் அபிவிருத்தி யடையுமென்பதை உணர்ந்து உடனே கும்பகோணத் திற்குச் சென்று கோபலராவைக் கண்டு பேசினார்.

நேரிலே கண்டு பேசியபொழுது கோபாலராவ் செட்டியாருடைய கல்வித்திறமையை நன்றாகத் தெரிந்து கொண்டார். செட்டியாரால் பள்ளிக்கூடத்திற்குப் பெருமையுண்டாகுமென்று அவர் நம்பினார். உடனே இவரைப் போர்ட்டர் துரையிடம் அழைத்துச் சென்று, "இவரே இந்தப் பதவிக்குத் தக்கவர்" என்று சொன்னார். போர்ட்டர் மிகவும் மகிழ்ந்து, "நான் மேலதிகாரிகளுக்கு எழுதுகிறேன். அவர்கள் உத்தரவிடும்போது நீங்கள் இங்கே வரலாம்" என்று சொல்லி இவருக்கு விடை கொடுத்தனுப்பினார்.

போர்ட்டர் துரை பள்ளிக்கூடங்களின் மேற்பார்வை அதிகாரிக்குப் பின்வரும் கருத்துள்ள ஒரு கடிதம் எழுதினார்.

"பள்ளிக்கூடங்களின் இன்ஸ்பெக்டராகிய ஸ்ரீமான் ஈ. வி. கால்டுவெல் அவர்களுக்கு,

இப்பொழுது ஸ்ரீரங்கம் தாலூகா பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராக இருக்கும் தியாகராச செட்டியார் சிறந்த தமிழ்ப் புலவரென்றும், நல்ல ஆசிரியரென்றும் கேள்வியுற்றிருக்கிறேன். சிலகாலத்திற்கு முன் ஸ்ரீகோபாலராவ் அவரைப் பரீட்சித்து வேலைக்குப் பூரணமான தகுதியுடையவரென்று அறிந்து கொண்டாரென்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீரங்கத்தில் அவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்வதில் ஏதாவது சிரமம் ஏற்பட்டால் இப்போது இங்கே உள்ள முன்ஷி அவ்வேலைக்கு முற்றும் தகுதியுடையவராதலின் அவரை அங்கே மாற்றலாம்.

டபிள்யு. ஏ. போர்ட்டர்,
தலைமை ஆசிரியர்"

கோபாலராவினுடைய நன்முயற்சி பலித்தது. எழுத்துப் பேறு, செட்டியார் கும்பகோணத்தில் உத்தியோகப் பேறு பெறக் காரணமாயிற்று. தியாகராச செட்டியார் கும்பகோணம் பள்ளிக்கூடத்தில் 1865-ஆம் வருஷம் ஜூலை மாதம் மூன்றுந்தேதி முதல் தமிழ்ப் பண்டிதராக நியமிக்கப் பெற்றார். இவர் கும்பகோணத்துக்கு வந்தது முதல் இவரது வாழ்க்கையில் ஒரு நல்ல தசை ஆரம்பமாயிற்று.

---

## 9. நண்பர்கள்

தியாகராச செட்டியார் கும்பகோணத்தில் அடியெடுத்து வைத்தது முதலே புகழும் பாக்கியமும் இவரைத் தேடிவந்து அடைந்தன என்றே சொல்ல வேண்டும். எல்லோரும் உத்தியோகத்தைத் தேடி அலைந்துகொண்டிருக்க, உத்தியோகம் இவரைத் தேடி வந்தது. கும்பகோணத்தில் எல்லோரும் புதியவர்களாக இருந்தாலும் கோபாலராவ் இவரிடத்தில் விசேஷ மதிப்புடையவராக இருந்ததே இவருக்குப் பெரிய பலமாயிற்று. 'முன்பு அறியாத ஒருவரை வலிய அழைத்துவிட்டோமே. இவர் தம் பெயரையும் நம் பெயரையும் காப்பாற்ற வேண்டுமே!' என்ற கவலை கோபாலராவுக்கு இருந்திருக்கலாம். ஆதலால் இவர், அடிக்கடி செட்டியார் பாடம் நடத்தும்போது அவருடைய வகுப்புக்குச் சென்று கவனிப்பார்; தனியே சந்திக்கும் காலங்களில் தமிழ் நூல்களில் நுணுக்கமாக உள்ள விஷயங்களைப்பற்றிய கேள்விகளைக் கேட்பார். பாடம் சொல்லவேண்டிய செய்யுட்களையும் எங்ஙனம் போதிக்க எண்ணியுள்ளாரென்பதையும் விசாரிப்பார். பண்டமில்லாதவராக இருந்தால் கோபாலராவ் இவ்வாறு செய்துவந்த சோதனைக்குப் பயந்து ஒரு வாரங்கூட நிலைத்திராமல் வேலையை விட்டுவிட்டுப் போயி

ருப்பார். செட்டியார் நன்ருகப் படித்தவராதலின் கோபாலராவினுடைய சோதனைகளில் நல்ல வெற்றி பெற்ருர். 'இத்தகைய அறிவாளியின் மனத்தில் நல்ல எண்ணம் உண்டாக்க வேண்டும்' என்ற விருப்பத்தால் இவர் கோபாலராவின் மனம் உவக்கும்படி தம் புலமைத் திறத்தை வெளிப்படுத்தி வந்தார். கோபாலராவ் நாளுக்கு நாள் செட்டியாருடைய கல்வியை உணர்ந்து மிக்க திருப்தி அடைந்தார். அடிக்கடி கலாசாலைத் தலைவராகிய போர்ட்டர் துரையினிடம் இவருடைய தகுதியை எடுத்துச் சொல்லிவந்தார்.

இவர் பாடம் சொல்லிக்கொடுத்தபோது மாணுக்கர்களுடைய தகுதியறிந்து கற்பித்தார். அதனுல் அவர்கள் இவர்பால் அன்புடையவர்களாயினர். அதற்குமுன் தமிழ் வகுப்பில் மாணுக்கர்களுக்கு அதிக ஊக்கம் இராது. அவர்கள் போக்கை அறிந்து செட்டியார் அவர்களை வசப்படுத்தினுர். அவர்கள், 'மற்ற உபாத்தியாயர்களைப் போல இவரும் ஒருவர்' என்று எண்ணுமல் பயபக்தியோடு இவர்பால் நடந்து வரலாயினர்.

முதலில் சக்கரபாணிப் பெருமாள் கோயிலின் தெற்கு வீதியில் தென்சிறகில் வசதியான வீடொன்றை வாடகைக்குப் பேசி அதில் இவர் இருந்து வந்தார். தினந்தோறும் தவருமல் சிவ பூஜை செய்து வருபவராதலின் அதற்கு வேண்டிய பத்திர புஷ்பச் செடிகளை அவ் வீட்டின் பின்புறத்தில் வைத்துப் பயிர் செய்தார். அவை உடனே உபயோகப்படாமையின் அந்நகரில் பத்திர புஷ்பங்கள் கிடைக்கும் இடங்களுக்குச் சென்று சென்று எடுத்து வந்து பூஜை செய்தார்.

இவ்வாறு பத்திரபுஷ்பங்களுக்காக இவர் தினந்தோறும் வெளியிடங்களில் அலைந்து வருவதை அறிந்தவராகக் குளத்தங்கரை ரங்கசாமி ஐயங்காரென்ற கனவான் தம்முடைய தோட்டத்திலுள்ளவற்றை

வேண்டியமட்டும் எடுத்து உபயோகித்துக்கொள்ளலா மென்று இவரிடம் சொன்னுர். அவரது தோட்டம் செட்டியார் குடியிருந்த வீட்டிற்கு அருகில் இருந்தது. தாம் செய்யும் சிவ பூஜைக்கு அந்த ஸ்ரீ வைஷ்ணவர் பத்திர புஷ்பங்களை உதவ முன்வந்தது இவருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. அது முதல் இவர் அத்தோட்டத்தில் வேண்டிய பத்திர புஷ்பங்களை எடுத்துப் பூஜை செய்து இன்புற்ருர்.

தியாகராச செட்டியாருக்கு நாளடைவில் கும்பகோணத்திலுள்ள கனவான்களில் பலர் நண்பராயினர். 'கும்பகோணம் கலாசாலையில் நூதனமாக வந்திருக்கும் பண்டிதர் மிகப் பெரிய வித்துவான். அவர் மிக அருமையாகப் பாடம் சொல்கிருர்' என்ற புகழ் எங்கும் பரவியது. அயலூர்களிலிருந்து கும்பகோணத்திற்கு வரும் வித்துவான்களும் தமிழன்புடைய பிறரும் செட்டியாரிடம் வந்து இவருடைய பழக்கத்தைச் செய்துகொண்டு போயினர். இங்ஙனம் இவருக்கு அன்பரானவர்கள் பலர்.

அந்நகரத்தில் கடலங்குடித் தெருவில் கா. சாமி ஐயரென்ற வக்கீல் ஒருவர் இருந்தார். அவர் செட்டியாருடைய நண்பர்களில் ஒருவர்; வடமொழியிலும் தமிழிலும் பயிற்சியுள்ளவர்; நல்ல பூஸ்திதியுடையவர்.

ஒரு சமயம் தம் கையிலிருந்த பணம் செலவாகி விட்டமையால் செட்டியார், 'ஒரு வண்டி நெல் அனுப்ப வேண்டும்; அடுத்த மாதம் சம்பளம் வந்தவுடன் பணம் கொடுத்துவிடுவேன்' என்று சாமி ஐயருக்கு எழுதி அனுப்பினுர். அவர் உடனே நெல்லை அனுப்பி விட்டார். ஒரு வண்டி என்பது இருபது கலம் கொண்டது.

அடுத்த மாதம் சம்பளம் வாங்கியவுடன் செட்டியார் நெல்லுக்குரிய தொகையைச் சாமி ஐயரிடம் கொண்டு போய்க் கொடுத்தபோது, அவர் அதை வாங்க மறுத்தார். "நீங்கள் நெல் வேண்டுமென்று கேட்டபோது நான் அள

வற்ற சந்தோஷத்தை அடைந்தேன். உங்களுக்கு என்றைத் தினம் அந்த நெல்லை அனுப்பினேனே அன்றே அதைச் சிவார்ப்பணம் செய்துவிட்டேன். சிறந்த தமிழ் வித்துவானும் சிவபக்த சிரோமணியுமாகிய உங்களுக்கு உபயோகப்படும்படி அனுப்புவதற்கு ஒரு சந்தர்ப்பம் நேர்ந்ததை என் பாக்கியமென்றே எண்ணுகிறேன். இந்த ஊரிலும் அயலூர்களிலும் உங்களுக்கு வேண்டியவர்கள் பலர் இருக்கும்போது என்னிடம் கேட்டது எனக்கு ஒரு பெருமையை உண்டாக்கியது" என்று அவர் சொன்னார்.

யாரிடத்தும் ஒரு பொருளை உபகாரமாகப் பெற்றுக் கொள்ளும் வழக்கம் செட்டியார்பால் இல்லை. ஆதலின், "முதல் முதலில் உங்களிடம் நெல் வாங்கும்போது விலையில்லாமல் பெறுவது நியாயமன்று. எனக்கு உங்கள் ஆசீர்வாதத்தால் ஒரு குறைவும் இல்லை. நீங்கள் நெல்லை முன்பு அனுப்பிவிட்டுப் பின்பு பணம் வாங்கிக்கொள்வதே பெரிய உபகாரம். என்னைத் தர்மசங்கட நிலைமைக்கு உள்ளாக்க வேண்டாம். இதைப் பெற்றுக்கொள்ள வேண்டும்" என்று இவர் எவ்வளவோ வற்புறுத்திச் சொல்லியும் அவர் அதைப் பெற்றுக்கொள்ளவில்லை. செட்டியார் பணத்தைத் திருப்பிக் கையில் கொணர்ந்து விட்டார்.

---

## 10. ஆசிரியரோடு பழகுதல்

கும்பகோணத்திற்கு வந்து வேலை ஒப்புக்கொண்ட சில நாட்களுக்குப் பின் செட்டியார் மாயூரம் சென்று மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைக் கண்டு தாம் கும்பகோணத்திற்கு வந்து வேலை பார்ப்பதைச் சொன்னார். பிள்ளையவர்கள் அடிக்கடி இவரைச் சந்திக்கலாமென்று சந்தோஷமடைந்தார். அதுமுதல்

செட்டியார் வாரந்தோறும் மாயூரம் சென்று தம் ஆசிரிய ரைப் பார்த்து ஸல்லாபம் செய்து இன்புற்று வரலானார்.

ஒரு சமயம் பிள்ளையவர்களுடன் திருவாவடுதுறை சென்று அங்கே ஆதீனத்தலைவராக இருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிகரையும் அப்பொழுது சின்னப்பட்டத்திலிருந்த மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரையும் தரிசித்து இன்புற்றார். மடத்தின் அமைப்பையும் அங்குள்ள வரையறைகளையும் தினந்தோறும் நடைபெறும் பூஜை, அன்னதானம், வித்தியாதானம் முதலியவற்றையும் கண்டு ஆச்சரியமடைந்தார். அந்த இடத்தின் பழக்கத்தால் நல்ல பயன்களை அடையலாமென்று எண்ணி மகிழ்ந்தார்.

மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் சிறந்த அறிவாளியாதலின் செட்டியாரைக் கண்டு பழகின முதல் நாளிலேயே இவருடைய தமிழறிவின் ஆழத்தை உணர்ந்து கொண்டார். பிள்ளையவர்களிடத்தில் அவருக்கு அளவற்ற மதிப்பும் கருணையும் உண்டு. அப்புலவர் பெருமானுடைய மாணாக்கர்களுள் சிறந்தவரென்பதும், ஒரு சிறந்த கலாசாலையில் தமிழாசிரியராக விளங்குபவரென்பதும் சேர்ந்து தேசிகர் உள்ளத்தில் செட்டியார்பால் நன்கு மதிப்பை உண்டாக்கின. அதனால் செட்டியார் சந்தர்ப்பம் கிடைக்கும்போது திருவாவடுதுறைக்குச் சென்று ஆதீனத் தலைவர்களோடு சம்பாஷித்து வரும் வழக்கமும் ஏற்பட்டது.

அக்காலத்தில் கும்பகோணத்தில் இருந்த சைவப் பிரபுக்கள் சிலருடைய வேண்டுகோளுக்கு இணங்கிப் பிள்ளையவர்கள் அந்நகரத்திற்கு வந்து தங்கிக் கும்பகோண புராணத்தைத் தமிழில் இயற்றத் தொடங்கினர். அந் நகரில் பேட்டைத் தெருவிலுள்ள திருவாவடுதுறை மடத்தில் தம் பரிஜனங்களோடு தங்கியிருந்தார். இவ்வாறு ஒரு சந்தர்ப்பம் நேர்ந்ததுபற்றித் தியாகராச செட்டியார் உள்ளம் பூரித்தார். கலாசாலைக்குச் சென்ற

நேரம் போக மற்ற நேரங்களிலெல்லாம் தம் ஆசிரியரிடம் சென்று அவர் சொல்லும் புராணச் செய்யுட்களை எழுதுவதும், தமக்குத் தமிழ் நூல்களில் உண்டான சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவதும் போன்ற காரியங்களைச் செய்து வந்தார்.

ஒரு நாள் பிள்ளையவர்களைச் செட்டியார் கலாசாலைக்கு அழைத்துச் சென்றார். அக்கவிஞரை நாற்காலியில் அமரச் செய்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். மாணுக்கர்களுக்கு அடிக்கடி பிள்ளையவர்களுடைய பெருமையை இவர் எடுத்துச் சொல்வது வழக்கம். அவ்வாறு காதால் கேள்வியுற்றிருந்த அப்புலவர்பிரானை நேரே பார்த்தபோது பிள்ளைகளுக்கு ஆனந்தம் உண்டாயிற்று. செட்டியார் அவரை நமஸ்காரம் செய்தது கண்டு அவர்கள் ஆச்சரியமுற்றார்கள்.

பிள்ளையவர்கள் அவ்வகுப்பிலுள்ள ஒரு *பையனைப் பார்த்து. "ஏதேனும் ஒரு செய்யுள் சொல்லப்பா" என்று கேட்டார். உடனே அவ்விளைஞன்,

"கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்ற
மாதோடு மன்னன் வரச்சண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர்"

என்ற பாடலை மெல்லப் பொருள்விளங்கும்படி சொன்னான்.

"அச்செய்யுள் எந்த நூலில் உள்ளது?" என்று தமிழ்க் கவிஞர் கேட்டார்.

"நளவெண்பாவில் இருக்கிறது."

"எந்தச் சந்தர்ப்பத்தில் வருகிறது?"

---

*இவர் இளையான்குடி எஸ். ராமசாமி ஐயரென்பவர்; பிற்காலத்தில் டைப்ரிஜிஸ்டிரார் உத்தியோகம் பெற்று வாழ்ந்தார்.

"நள மகாராஜன் தான் இழந்த நாட்டை மீட்டும் பெற்றுத் தமயந்தியுடன் தன் நகரத்தை அடைந்தபோது நடிகள் சந்தோஷமடைந்ததாக உள்ள சந்தர்ப்பத்தில் வருகிறது."

"கடவுள் வணக்கமாக ஒரு பாடலைச் சொல்லாமல் இந்தப் பாடலை நீ சொன்னதற்குக் காரணம் என்ன?" என்று அக்கவிஞர் கேட்டார். 'அதுதான் ஞாபகத்திற்கு வந்தது' என்று அவன் சொல்வானென்று அவர் எதிர் பார்த்திருக்கலாம். அவனோ அவர் உள்ளம் குளிரும்படி விடை அளித்தான்: "தாங்கள் இங்கே வந்தது எங்கள் மனத்தில் நிறைந்த இன்பத்தை உண்டாக்கியது. அந்த இன்பம் இப்படி இருக்கிறதென்று தெரிவிப்பதற்காகவே இதைச் சொன்னேன்" என்று அவன் கூறினவுடன் எல்லா மாணாக்கர்களும் தங்கள் கரகோஷத்தால் அக்கருத்தை ஆமோதித்தார்கள். "தியாகராசு, பிள்ளைகளை நன்றாகப் பழக்கியிருக்கிறாய்" என்று சொல்லிப் பிள்ளையவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்.

பிறகு செட்டியாரைப் பாடம் நடத்தும்படி சொல்லி அவர் அங்ஙனம் நடத்தும்போது கேட்டு உவந்து பாராட்டிவிட்டுச் சென்றார்.

கும்பகோண புராண அரங்கேற்றம் நடைபெற்ற போதும், பிள்ளையவர்கள் இயற்றிய வேறு பிரபந்தங் களிற் சில அரங்கேற்றம் பெற்றபோதும் தியாகராச செட்டியார் இருந்து பல வகையில் பிள்ளையவர்களுக்குத் துணை புரிந்தார். அக்காலங்களில் சில விஷமிகள் அரங் கேற்றத்திற்கிடையே ஆட்சேபங்களை எழுப்பித் தடை விளைவித்தனர். அப்போதெல்லாம் செட்டியார் அவ்வாட் சேபங்களுக்குத் தக்கபடி விடை கூறியதோடு அங் ஙனம் செய்தவர்களை எல்லோரும் பரிகசிக்கும்படி அவர்க ளுடைய அறியாமையை வெளிப்படுத்தினார். பிள்ளையவர் கள் மிக்க பொறுமையோடு விடை அளிப்பதையும்

செட்டியார் அதோடு நில்லாமல் அந்த விஷமிகளைக் கேள்விகள் கேட்டுக் கலங்க வைப்பதையும் கண்ட ஜனங்கள், "யானைக்கேற்ற அங்குசம் இவரே' என்று செட்டியாரைப் பாராட்டினார்கள். தடை எழுப்பினவர்கள் தம் வாயிழந்து மதியிழந்து மறைந்தனர்.

---

## 11. 'திருநகரின் புறம்பு'

கும்பகோணம் துரைத்தனக் கலாசாலையில் தியாகராசசெட்டியாருக்கு வர வர மதிப்பு உயர்ந்தது போலவே சம்பளமும் உயர்ந்து வந்தது. உயர்தரக் கலாசாலையாக இருந்து அது காலேஜானபோது தியாகராச செட்டியாரே முதல் தமிழ்ப் பண்டிதராக இருந்தார். அப்போது இவருடைய கல்வித்திறமை மிகுதியாகப் பயன் படலாயிற்று. 1866-ஆம் ஆண்டு இவருடைய சம்பளம் 25 ரூபாயாக உயர்ந்தது. 1871-இல் 35 ரூபாயாகவும், 1872-இல் 45 ரூபாயாகவும் ஆயிற்று. 4-7-1875 முதல் ஐம்பது ரூபாய் சம்பளம் பெறலானார். ஐந்து வருஷங்கள் ஐம்பது ரூபாய் வாங்கிப் பிறகு உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றுக்கொண்டார். இவருடன் இருந்த புரொபஸர்களுக்கு உள்ள மதிப்பு இவருக்கும் இருந்தது. ஆசிரியர்களுள் பெரும்பாலோருடைய புகழும் கௌரவமும் காலேஜிலும் அதைச் சார்ந்தவர்களிடத்திலும் மாத்திரம் பரவியிருந்தன. தியாகராச செட்டியாருடைய புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவலாயிற்று. அக்காலத்தில் சென்னை முதலிய மற்ற இடங்களிலுள்ள கல்லூரிகளில் தமிழ்ப் பண்டிதராக இருந்தவர்கள் யார் யாரென்பது சிலருக்கே தெரியும்; கும்பகோணம் காலேஜில் தமிழாசிரியராகத் தியாகராச செட்டியார் இருந்து வந்ததோ யாவருக்கும்

தெரிந்திருந்தது. இயற்கை அறிவு, கம்பீரமான குணம், பிள்ளையவர்களுடைய பழக்கம், திருவாவடுதுறை மடத்துச் சார்பு ஆகிய இவையே இவருடைய பெருமை அங்ஙனம் பரவுவதற்குக் காரணங்களாக அமைந்தன.

மற்ற ஆசிரியர்களோடு பழகுகையில் அவர்கள் கூறும் அரிய விஷயங்களைத் தெரிந்து இவர் மகிழ்வார்; தம் கருத்துக்கு ஒவ்வாதனவாக இருந்தால் உடனே கண்டித்துவிடுவார். வடமொழி நூல்களிலுள்ள அரிய செய்திகளை யாரேனும் எடுத்துச் சொன்னால் அவற்றைக் கேட்டு இன்புற்று அவரைப் பாராட்டுவார்.

ஒரு நாள் இரவு செட்டியார் கும்பகோணம் கடைவீதி வழியே போய்க்கொண்டிருந்தார். அப்போது ஒரு திண்ணையில் வயோதிக அந்தணர் ஒருவர் இருந்து ஏதோ புராணப் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார். செட்டியார் அங்கே நின்று திண்ணையிலிருந்த சிறிய கூட்டத்தையும் ஓர் ஓரமாக ஒரு சுவரின்மேல் சாய்ந்துகொண்டு வீற்றிருந்த அந்த வயோதிகரையும் கவனித்தார்.

அங்கே மின்மினிபோன்ற விளக்கொன்று எரிந்துகொண்டிருந்தது, அதன் வெளிச்சத்தில் கிழவருடைய முகமும் அவர் நெற்றியில் அணிந்திருந்த விபூதியும் பளிச்சென்று தெரிந்தன. அவர் மூக்குக்குக் கண்ணாடி அணிந்திருந்தார். அந்தக் கண்ணாடியும் கிழவரைப் போலவே பருவம் முதிர்ந்து பல வருஷங்களாக உபயோகப்பட்டு வந்தது. அக்கண்ணாடியின் இரண்டு பக்கங்களிலும் கயிறுகளைக் கோத்து அவற்றைப் பின்புறத்தில் குடுமியிலே அவர் கட்டியிருந்தார். அவர் குனிந்து குனிந்து சுவடியைப் பார்ப்பதும் பிறகு நிமிர்ந்து நிமிர்ந்து பிரசங்கம் செய்வதுமாக இருந்தார். அப்படி நிமிர்ந்து வாயைத் திறந்தபோது அதில் இருந்த பற்களிற் பல முன்பே விடை பெற்றுக் கொண்டனவென்று தெரிந்தது.

அவர் ஒரு வெள்ளைக் கம்பளியை மேலே போர்த்திருந்தார். கழுத்தில் ருத்திராக்ஷம் அணிந்திருந்தார். மதுரை ஸ்தலத்தின் பெருமையையும் ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் இயற்றியருளிய திருவிளையாடல்களையும் விரித்துச் சொல்லும் ஹாலாஸ்ய மாஹாத்மியம் என்னும் புராணத்தை அவர் பிரசங்கம் செய்து வந்தார்.

நாள்தோறும் அதை வாசித்துப் பிரசங்கம் செய்வதும், வருபவர்கள் உண்டிப் பெட்டியில் போடும் தம்படி, காலணா, அரையணாக்களைச் சேர்த்து அந்தச் சிறு தொகையைக் கொண்டு ஜீவனம் செய்வதும் அவருடைய வழக்கமாக இருந்தன. அந்த நிலையிலே அவருக்கு ஒரு விதமான திருப்தி இருந்தது.

சிவபக்தி நிரம்பிய வாக்கியங்களை அவர் சொன்னதை முதலில் செட்டியார் கவனித்தார். இவர் அப்படியே பின்னும் சிறிது நேரம் நின்று கேட்கலானார். அப்பொழுது ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் ஒரு பிராமணனுடைய மனைவியின் கொலைக்குக் காரணம் இன்னதென்று தெரியாது மயங்கிய பாண்டியனுக்கு உண்மையை விளக்கிய வரலாற்றைச் சொல்லும் பாகம் நடந்து வந்தது. அவளைக் கொன்றவன் ஒரு வேடனே என்று ஐயுற்று அவனைச் சிறையில் வைத்துவிட்டுப் பாண்டியன் சோமசுந்தரக் கடவுளை அடைந்து பணிந்து தனக்கு உண்மையை விளக்கியருள வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டான். மதுரைப் பெருமான் அவன் வேண்டுகோளுக்கு இரங்கி அசரீரியாக, "இந்த நகரத்திற்குப் புறம்பே ஒரு வணிகத் தெரு இருக்கிறது. அங்கே ஒரு கலியாணம் நடைபெறுகிறது. அவ்விடத்திற்குச் சென்று கவனித்தால் உண்மை விளங்கும்" என்று தெரிவித்தருளினார். அரசன் அவ்வாறே அந்தணனுடன் சென்று மறைந்திருந்து கவனித்த போது அங்கே மணமகனின் உயிரைக் கவர வந்திருந்த

யமதூதர் இருவர் தம்முள் பேசிக்கொள்ளும் பேச்சு இறைவன் திருவருளால் அரசன் காதிலும் அவனுடன் சென்றிருந்த அந்தணன் காதிலுமே விழுந்தது.

"ஒரு வியாதியும் இல்லாத பிராமணப் பெண்ணின் மேல், மரத்திலே சிக்கியிருந்த அம்பு காற்றால் அலைப்புண்டு விடுபட்டுப் பாய அவள் உயிர் நீங்கும்படி செய்ததுபோல, வாத்திய கோஷத்தால் மருண்ட மாடு அறுத்துக்கொண்டு மணமகனை முட்டி உயிர் போக்கும்படி செய்யலாம்" என்று அத்தூதர் பேசிக்கொண்டிருந்தனர். பின்பு அவ்வாறே நிகழ்ந்தது. அரசன் உண்மையை உணர்ந்து சிறைப்படுத்திய வேடனை விடுவித்தான். குற்றமற்றவனைச் சிறை செய்து தண்டிக்கும் பழி பாண்டியனைச் சாராவண்ணம் அப்பழிக்கு அஞ்சி உண்மையை ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் உணர்த்தியமையின் இவ்வரலாறு பழியஞ்சின திருவிளையாடல் என்று வழங்கலாயிற்று. சோமசுந்தரக் கடவுளுக்கும் பழியஞ்சிச் சொக்கர் என்று ஒரு திருநாமம் உண்டாயிற்று.

ஒவ்வொரு சுலோகமாகச் சொல்லி அர்த்தத்தையும் விளக்கிக்கொண்டு வந்தார் பௌராணிகர். செட்டியார் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தை நன்றாகப் படித்தவர். அது ஹாலாஸ்ய மாஹாத்மியத்தின் மொழிபெயர்ப்பாக உள்ளது. அதனால், கிழவர் விஷயங்களைச் சொல்லச் சொல்லச் செட்டியார் திருவிளையாடற் புராணச் செய்யுட்களை நினைவுறுத்திக்கொண்டும், அவற்றின் பொருளையும் பௌராணிகர் சொல்வதையும் மனத்தால் ஒப்பு நோக்கிக்கொண்டும் நின்றார். பின்பு அம்முதியவர் சில நயங்களை எடுத்துச் சொன்னார். அவற்றைச் செட்டியார் கேட்டு மகிழ்ந்தார்.

ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் அசரீரியின் மூலம் பாண்டியனுக்குக் கட்டளையிட்ட செய்தியைச் சொல்லும்

சுலோகம் வந்தது. செட்டியார் திருவிளையாடற் செய்யுளை ஞாபகப்படுத்திக்கொண்டார்.

"திருநகரின் புறம்பொருசார் குலவணிகத் தெருவின்கண்
ஒருமனையில் மணமுளதங் கந்தணனோ டொருநங்கை
வருதியுன துளநதேரு மாற்றமெலாந் தேற்றுதமென்
றிருவிசும்பி னகடுகிழித் தெழுந்ததால் ஒருவாக்கு"

என்பதே அச்செய்யுள்.

கிழவர் பொருள் சொன்னார்; பிறகு அந்தச் சுலோகத்திற்கு விசேஷ அர்த்தம் சொல்லத் தொடங்கினார்: "இங்கே, மதுராபுரியின் எல்லைக்கு வெளியே உள்ள இடத்தில் இந்தக் கல்யாணம் நடக்குமென்று அசரீரி சொன்னதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மதுராபுரியின் எல்லைக்கு உள்ளே யென்று ஏன் சொல்லி யிருக்கக் கூடாது?" பௌராணிகர் சிறிது நிறுத்தினார். கேட்பவர்களுடைய மனத்துக்குச் சிறிது வேலை கொடுத்து அவர்களைத் திகைக்க வைத்துப் பிறகு விஷயத்தை விளக்குவது பிரசங்கிகளுடைய வழக்கம். கிழவர் அந்த முறையில் தேர்ந்தவர். அந்தக் கேள்வியை அங்கிருந்த ஒவ்வொருவரும் தம்மைத் தாமே கேட்டுக்கொண்டனர். தெருவிலே நின்றபடியே கவனித்துக்கொண் டிருந்த செட்டியாரும் அந்தக் கேள்வியைக் கேட்டுக்கொண்டார். அவர் அதற்குரிய விடையை யோசிப்பதற்குள் அந்தத் திண்ணைப் பிரசங்கியாரிடமிருந்தே விடை வந்துவிட்டது. "கருணையே ஸ்வரூபமான ஸ்ரீ சோமசுந்தர மூர்த்தியும் ஸ்ரீ மீனாக்ஷியுமுள்ள திவ்யஸ்தலம் மதுராபுரி. அது பூலோக சிவலோகமென்னும் பெருமை வாய்ந்தது. தருமதேவதை குதூகலமடையும்படி ஆண்டு வரும் பாண்டிய ராஜன் இருக்கும் ராஜதானி அது. அந்த எல்லைக்குள் யமபாதையோ யமதூத ஸஞ்சாரமோ இல்லை. இந்தச் சம்பவம் அகால மிருத்யு தோஷமாகையால் நிச்சயமாக அந்த எல்லைக்குள் நடக்கக்

கூடாதது. ஆகையால்தான் மதுராபுரியின் எல்லைக்கு வெளியே என்று சொல்லப்பட்டிருக்கிறது."

அங்கிருந்தவர்கள் கேட்டு விம்மிதமடைந்தனர். செட்டியார் நின்றபடியே, "ஆ! ஆ! என்ன அருமை! என்ன ரஸம்!!" என்று தம்மை மறந்து சொன்னார். உடனே அந்தத் திண்ணைக்கே போய் உட்கார்ந்துகொண்டார். 'வறுமையும் முதுமையும் போராடும் போர்க்களமாக உள்ள இந்த உருவத்தில் எவ்வளவு அறிவு செறிந்திருக்கிறது!' என்று கிழவரைக் கண்டு இரங்கினார். அதுமுதல் தினந்தோறும் அந்தப் புராணப் பிரசங்கத்தைக் கேட்டு அவ்வப்போது தம்மால் இயன்ற உதவியை அப்பௌராணிகருக்கு இவர் செய்து வந்தார்.

---

## 12. 'கழுக்காணிக் கண்ணன்'

செட்டியார் குடியிருந்து வந்த இடத்திற்கு அருகில் திவ்யப்பிரபந்தத்திலும் அதன் வியாக்கியானங்களிலும் வைஷ்ணவமத கிரந்தங்களிலும் தேர்ச்சி பெற்ற ஸ்ரீ வைஷ்ணவப் பெரியார் சிலர் இருந்தனர். வியாக்கியானங்களினால் பல அரிய விஷயங்கள் தெரியவருமாதலின் இவர் அடிக்கடி அவர்களிடம் சென்று சில சில விஷயங்களைக் கேட்டு மகிழ்ந்து பாராட்டி வருவார். இவர் தீவிரமான சைவராயினும் தமிழின் நயத்தை எவ்வாறெல்லாம் தெரிந்துகொள்ளலாமோ அவ்வாறு தெரிந்துகொள்வதில் எப்போதும் ஆர்வம் உள்ளவராக இருந்தார். சில சமயங்களில் அவர்கள் மிகவும் அதிகமாக நயம் சொல்லும்போது இவர் கேட்டு உள்ளுக்குள்ளே நகைப்பதும் உண்டு.

ஒரு நாள் செட்டியார் தம் வீட்டுத் திண்ணையில் சிலருக்குப் பாடம் சொல்லிக்கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ வைஷ்ணவப் பெரியாரொருவர் அந்த வழியே சென்றார். செட்டியாரைக் கண்டதும் அவர் நின்றார். உடனே

இவர் எழுந்து அஞ்சலி செய்து, "எழுந்தருள வேண்டும்" என்று அழைத்து அங்கே இருக்கச் செய்து மற்றவர் களுடன் தாமும் உட்கார்ந்தார்; "இப்பொழுது சிஷ்யர்கள் பாடங்கேட்டு வருகிறார்களா? என்ன நடந்து வருகிறது?" என்று அப்பெரியாரைக் கேட்டார்.

அவர் அப்போது நடைபெறுவது இன்னதென்று சொல்லிப் பிறகு, "என்னவோ நடக்கிறது! பெரியவர்கள் அணு அணுவாகச் சோதித்து மிகவும் ரஸமாக எழுதி யிருக்கிறார்கள். அங்கங்கே மகா அற்புதமாக அவர்கள் அருளியிருப்பதைக் கவனித்தால் அவர்கள் தெய்வாம்ச மென்றே நினைக்க வேண்டி வருகிறது. அந்த ரசத்தைக் கிர ஹித்து அனுபவிப்பவர்கள் குறைவு; கேட்பவர்கள் உங் களைப் போன்ற வித்துவான்களாக இருந்தால் எவ்வளவோ மகிழ்ச்சி அடைவார்கள்! எனக்கும் எவ்வளவோ உத்ஸா கம் உண்டாகும்!" என்று சொல்லிவிட்டு இரண்டு நிமிஷம் மௌனமாக இருந்தார். அவர் தம் மனத்துக் குள்ளே ஏதோ ஓர் அருமையான விஷயத்தை ஞாபகப் படுத்திக்கொண்டு இன்புற்றார். மறுபடியும் பேசத் தொடங்கினார்.

"இன்று பாருங்கள்: ஓர் அபூர்வமான பதப் பிரயோ கத்தை நான் எடுத்துச் சொல்லி அதன் ரஸத்தை விளக் கிக் காட்டினேன். அதைக் கேட்டு ஆச்சரியத்தால் குதித் துக் கூத்தாட வேண்டாமா? எல்லோரும் கேட்டுவிட்டுச் சும்மா உட்கார்ந்திருந்தார்கள். என்ன அருமையாக, அழகாக, ஸூக்ஷ்மமாகச் சொல்லியிருக்கிறார்கள்!"

அவர் விஷயம் இன்னதென்று தெரிவிக்காமலே தாம் மாத்திரம் ரஸத்தை அனுபவித்துப் பாராட்டினார்.

"எந்தப் பதத்தின் சாரத்தைத் தாங்கள் பாராட்டு கிறீர்கள்? அதைச் சற்றுத் தெரிவிக்க வேண்டும்" என்று செட்டியார் பணிவாக விண்ணப்பம் செய்துகொண்டார்.

வைஷ்ணவர் திடீரென்று உச்சஸ்வரத்தில், "கழுக் காணிக் கண்ணன்" என்று சொல்லிவிட்டு மௌனமாக இருந்தார்.

'இதில் என்ன ரஸம் இருக்கிறது? இதற்கு அர்த்தம் என்ன?' என்று எல்லோரும் யோசித்தார்கள்.

"இப்படி ஓர் ஆசாரியர் சாதித்திருக்கிறார். ஸாமான்ய மானவர்களுக்கு இதன் தாத்பர்யம் விளங்காது. என்ன அழகு! என்ன அழகு!" என்று மீண்டும் ரஸானுபவத்திலே அவர் ஆழ்ந்துவிட்டார்.

"அந்தப் பதத்தின் அர்த்தத்தையும் ரஸத்தையும் கிருபை செய்து விளக்கவேண்டும்" என்று செட்டியார் கேட்டுக்கொண்டார்.

"நான் திடீரென்று சொல்லமாட்டேன். நீங்களே யோசித்துச் சொல்லுங்கள், பார்க்கலாம். ஒரு விஷயம் மாத்திரம் சொல்லிவிடுகிறேன். அதைக் கொண்டு கண்டு பிடிக்க முடிகிறதா, பாருங்கள். பெருமாளுக்குக் கமலாக்ஷன், பத்மாக்ஷனென்று திருநாமம் வழங்குவது தெரியுமா?"

"தெரியும்."

"கழுக்காணிக் கண்ணனென்பதும் அந்தத் திரு நாமமும் ஒன்றுதான், நான் சொல்லிவிட்டேன். இப்போது உங்கள் ஸாமார்த்தியத்தால் ரஸத்தைத் தெரிந்து சொல்லுங்கள்."

செட்டியாருக்கும் பிறருக்கும் ஆச்சரியம் வளர்ந்ததேயொழிய விஷயம் விளங்கவில்லை.

"ஸ்வாமி, இப்படி எங்களைப் பரீட்சை செய்யக் கூடாது. சீக்கிரம் அந்த ரகஸ்யத்தை வெளிப்படுத்த வேண்டும்" என்று செட்டியார் வேண்டிக்கொண்டார்.

"இலக்கண இலக்கியப் படிப்பு வேறு; ஸம்பிரதாயப் படிப்பு வேறு" என்று சொல்லி அங்குள்ளவர்களை அவர்

பெருமிதத்தோடு பார்த்தார். "ஒருவருக்கும் விளங்க வில்லையே?" என்று கேட்டார். எல்லோரும், "இல்லை" என்றார்கள்.

"சிறந்த தமிழ் வித்துவானாக உள்ள உங்களிடத்தில் எனக்கு அளவற்ற பிரீதி உண்டு. ஆகையால் உங்களை உத்தேசித்து இந்த ரகஸ்யத்தைச் சொல்கிறேன்; கேளுங்கள்" என்ற பீடிகையுடன் அவர் ஆரம்பித்தார்; "கழுக்காணியென்பதற்கு உலக்கையென்று அர்த்தம். அந்த உலக்கையை வேங்கை மரத்தால் செய்வார்கள். வேங்கையென்பது புலிக்கும் பெயர். புலிக்குப் புண்டரீகமென்றும் ஒரு பெயர் உண்டு. புண்டரீகமென்பது தாமரை. கழுக்காணி உலக்கையாகி உலக்கை வேங்கையாகி வேங்கை புலியாகிப் புலி புண்டரீகமாகிப் புண்டரீகம் தாமரையாகிறது. கழுக்காணிக் கண்ணனென்பதற்குப் பத்மாக்ஷனென்று அர்த்தம். என்ன அழகு பாருங்கள்!" என்று சொல்லி நிறுத்திவிட்டு எல்லோரையும் கவனித்தார். அவர்கள், 'குதித்துக் கூத்தாடவேண்டும்' என்று எதிர்பார்ப்பவரல்லவா அவர்?

செட்டியார், "அடடா! நிரம்ப ஆச்சரியம்! இப்படி அர்த்தம் பண்ண எந்த வித்துவானுக்கும் தோன்றாது. கழுக்காணிக்கண்ணனெங்கே? பத்மாக்ஷன் எங்கே? தங்களைப்போன்றவர்களுக்குத்தான் அவற்றின் சம்பந்தமும் ரஸமும் தெளிவாக விளங்கும்" என்று இருபொருள் படும்படி பேசினார். அந்தப் பொருளை வித்துவான்கள் சொல்ல இயலாதென்பது உண்மைதானே?

"உங்களுக்கு அதன் அருமை தெரிகிறது. மற்றவர்களுக்குத் தெரியவில்லையே" என்று சொல்லித் திருப்தியோடு அவர் அகன்றார்.

"உலக்கைக்கும் தாமரைக்கும் பொருத்தம் கண்டு பிடிப்பது பெரிய அற்புதந்தான்" என்று சொல்லிச் சொல்லிச் சிரித்தார் செட்டியார்.

## 13. வந்த வரவு

செட்டியாருக்கும் மாணாக்கர்களுக்கும் இடையே இருந்த தொடர்பு அதிசயமானது. மாணாக்கர்களுக்கு இவரிடம் அன்பு உண்டு; அதோடு பயமும் உண்டு; அந்தப் பயம் வெளிப்படையாகத் தோற்றாது. ஒரு குடும்பத்தில் தகப்பனாரும் பிள்ளைகளும் பழகுவது போல அவர்கள் பழகினார்கள். குற்றத்தை அழுத்தந் திருத்தமாகக் கண்டிப்பதற்குச் செட்டியார் சிறிதும் தயங்க மாட்டார். குணம் இருந்தால் பாராட்டுவதிலும் குறைவு இராது.

பி. ஏ. வகுப்பில் ஒரு நாள் பாடம் நடந்து வந்தது. கம்பராமாயணத்தில் சடாயு உயிர் நீத்த படலத்தில் சில செய்யுட்கள் பாடமாக இருந்தன. குற்றுயிராகக் கிடக்கும் சடாயுவை இராமலக்ஷ்மணர்கள் காண்கின்றனர். அவர்கள் சடாயுவின் நிலைக்கு இரங்க அவன் அவர்கள் நிலைக்கு இரங்குகிறான். அப்போது,

> "வஞ்சனையால் வந்த வரவென்ப தென்னுடைய
> நெஞ்சகமே முன்னே நினைவித்த தானாலும்
> அஞ்சொல் மயிலை அருந்ததியை நீங்கினிரோ
> எஞ்சலிலா ஆற்ற லிருவீரும்"

என்று சடாயு கூறினான். இந்தச் செய்யுளைப் பாடம் சொல்லுகையில் செட்டியார் சிறிது யோசனையில் ஆழ்ந்தார். 'இராவணன் சீதையை எடுத்துச்சென்ற நிகழ்ச்சி வஞ்சனையால் நிகழ்ந்தது' என்பது முதலடியில் சொல்லப்பட்டிருக்கிறது. 'இங்கே வஞ்சனையால் வந்தது என்று சொன்னால் போதுமே. வந்த வரவு என்று சொல்லவேண்டிய அவசியம் என்ன? வரவு என்பதற்கு இந்த இடத்தில் ஏதாவது அர்த்தம் சொல்லலாமா?' என்று இவர் சிந்தித்தார்.

இவர் யோசிப்பதைக் கவனித்த மாணுக்கர்கள் பேசாமல் இருந்தார்கள். அப்பால் சில நிமிஷங்களுக்குப் பின் சுப்பையா என்ற மாணுக்கர் மெல்ல எழுந்து நின்ருர். தியாகராச செட்டியார் புஸ்தகத்திலிருந்த பார்வையை மாற்றி அவரை நோக்கினுர். அம்மாணுக்கர் மிக்க பணிவோடு, "இந்த இடத்தில் வரவு என்பதற்குத் துன்பம் என்று அர்த்தம் பண்ணலாமோ?" என்று சொன்ஞர். செட்டியாருக்குப் பளிச்சென்று ஒரு புதிய மகிழ்ச்சி உண்டாயிற்று. அவர் சொன்ன பொருள் மிகவும் பொருத்தமாக இருக்குமென்று எண்ணினுர். "பேஷ்; நன்ருக இருக்கிறது, அப்பா. 'வஞ்சனையால் வந்த துன்பம்' என்று அர்த்தம் சொல்வது பொருத்தமாகவே தோன்றுகிறது. உறுதல் என்ற பொருளையுடைய ஊறு என்னும் சொல் துன்பத்தைக் குறிக்கிறது. உறுதலும் வருதலும் ஒன்றென்றே சொல்லலாம். ஆகையால் ஊறு என்ற சொல்லுக்குத் துன்பமென்று பொருள் செய்வது போல வரவு என்பதற்கும் அந்தப் பொருளையே சொல்லலாம். கம்பர் இட்டது சட்டம்; அவர் போனது வழி. உன்னுடைய அறிவைப் பாராட்டுகிறேன். உன்ஞல் இந்த அர்த்தம் புதிதாகத் தெரிந்தது" என்று சொல்லிவிட்டுத் தம் புஸ்தகத்தில் உடனே அந்தப் பாட்டுக்கு அருகில் பென்ஸிலால், 'வரவு - துன்பம். இது சுப்பையா சொன்னது' என்று எழுதிக்கொண்டார்.

பிற்காலத்தில் அந்தப் புஸ்தகத்தை நான் பார்த்த போது அந்தக் குறிப்பைக் கண்டு, "இப்படி ஏன் எழுதியிருக்கிறீர்கள்?" என்று கேட்டேன். செட்டியார் இந்த வரலாற்றைச் சொன்ஞர். அந்தச் சுப்பையாவென்பவர் பிற்காலத்தில் புதுக்கோட்டையில் ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருந்து விளங்கினுர்.

---

## 14. வெறுப்புப்பாயிரம்

எந்த நூலாயினும் பலரிடம் சிறப்புப்பாயிரங்கள் பெற்று அவற்றோடு அதனை வெளியிடுதல் முற்காலத்து வழக்கம். அவை அதிகமாக இருப்பதை ஒரு பெரிய கௌரவமாக நினைத்து வந்தார்கள். ஒரு நூலுக்கு அதனிடத்துள்ள பொருட் சிறப்பால் மதிப்பு இருக்குமோ, இராதோ அது வேறு விஷயம். தக்க வித்துவான்கள் சிறப்புப்பாயிரம் அளித்துவிட்டார்களானால் அந்த நூல் எல்லோராலும் மதிக்கப் பெறுவதாகும்.

நூல் இயற்றியவர் தக்க பண்டிதராக இருக்க வேண்டுமென்பது அவசியமன்று; பெரிய மனிதர்களுடைய பழக்கம் அவருக்கு இருந்தால் போதும். அவர்களைக் கொண்டு அங்கங்கே உள்ள வித்துவான்களிடம் சிறப்புப்பாயிரம் வாங்கச்செய்து சேர்ப்பார்கள். நூலாசிரியரை முன்னே பார்த்திராத வித்துவான்கள்கூட இடையே வந்து வற்புறுத்தும் கனவான்களுக்காகச் சிறப்புப்பாயிரம் தருவார்கள். நூல் செய்தவர் அந்த நூலை இயற்றும் விஷயத்தில் தாம் மேற்கொள்ளும் உழைப்பை விட அதிக உழைப்பை அதற்குச் சிறப்புப்பாயிரம் பெறுவதற்கு மேற்கொள்ளுவார். சில சமயங்களில் சில பாடல்களால் அமைந்த நூலுக்குப் பல பாடல்கள் சிறப்புப்பாயிரமாக இருப்பதுண்டு.

பெரிய வித்வான்கள் சிறப்புப்பாயிரங்களைத் தகுதி அறிந்து அமைப்பார்கள். 'இன்னார் இன்ன நூலை இன்னார் கேட்க இயற்றினார்' என்று மாத்திரம் சிலருடைய நூல்கள் விஷயத்திற் சொல்வார்கள். வேறு சிலருடைய விஷயத்தில் சிறப்புப்பாயிரமே ஒரு தனி நூலென்னும்படி சொற்சுவை பொருட்சுவை தோன்ற அமைப்பார்கள். வில்லிபுத்தூராழ்வார் பாரதத்திற்கு முன்னே உள்ள சிறப்புப்பாயிரமும், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சிறப்புப்பாயிரங்களிற் பலவும், அவ

ருடைய மாணாக்கர்கள் அவர் முறையைப் பின்பற்றி இயற்றிய சில சிறப்புப்பாயிரங்களும் இவ்வகைக்கு உதாரணங்களாகும்.

இவ்வாறு அக்காலத்தில் சிறப்புப்பாயிரம் வாங்கும் முயற்சி அதிகமாக நிகழ்ந்தமையால் அதைச் சிறப்புப் பாயிர காலம் என்று சொல்லலாம்.

சிறப்புப்பாயிரம் பெறும் முயற்சியில் ஈடுபட்டவர்களுடைய ஜபம் தியாகராச செட்டியாரிடம் பலியாது. செட்டியார் யாரிடமும் கண்டிப்பாகப் பேசுவார். செய்யுள் நன்றாக இல்லையானால் அந்த விஷயத்தை ஒளிமறைவில்லாமல் வெட்டென்று சொல்லிவிடுவார். ஆகையால் உண்மையான வித்துவான்களே சிறப்புப் பாயிரம் வேண்டுமென்று அவரை அணுகுவார்கள்.

இதற்கு மாறாக ஒருநாள் ஐயாத்துரை என்பவர் சிறப்புப்பாயிரத்துக்காகச் செட்டியாரிடம் வந்தார். அவர் முன்பே பல முறை செட்டியாரிடம் வந்து முயன்றும் இவர் சம்மதியாமையால் போய்விட்டார். அவர் ஓர் அந்தாதி இயற்றியிருந்தார். இலக்கண இலக்கியங்களை ஆராய்ந்து மிகவும் சிரமப்பட்டு அந்தப் பிரபந்தத்தைச் செய்ததாகச் செட்டியாரிடம் சொல்லி எப்படியாவது ஒரு சிறப்புப்பாயிரச் செய்யுள் வேண்டுமென்று மன்றாடினார். அதில் உள்ள குறைகளைக் கண்டு செட்டியார் கொடுக்கவில்லை. பிறகு ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் சென்று அவர் மனம் உருகும்படி பேசி ஒரு பாடல் கேட்டார். ஏழைகளிடத்தில் மிக்க கருணையுள்ள அப் புலவர்பிரான் மனமிரங்கி ஒரு செய்யுள் செய்து கொடுத்தார். அந்த வித்துவானுக்கு உத்ஸாகம் கட்டுக்கடங்காமல் பெருகியது. 'இதைக் காட்டித் தியாகராச செட்டியாரிடமும் சிறப்புப்பாயிரம் வாங்கிவிட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பது' என்ற உறுதி பூண்டு கும்பகோணத்திற்கு வந்தார்.

செட்டியாரைப் பார்த்து, "நான் எவ்வளவோ வித்துவான்களிடம் சிறப்புப்பாயிரம் வாங்கியிருக்கிறேன். உங்களுக்குத்தான் மனம் இரங்கவில்லை. உங்கள் சிறப்புப் பாயிரம் இல்லாவிட்டால் எனக்குப் பெருங் குறையாகவே இருக்கும். இந்தப் பிரபந்தத்தில் குற்றம் இருக்கலாம். தாங்கள் சொல்லுகிறபடி அவற்றைத் திருத்திக்கொள்ளுகிறேன். எப்படியாவது ஒரு பாடல் செய்து தந்து என்னை ஆதரிக்கவேண்டும்" என்றார்.

"அவ்வளவு வித்துவான்கள் கொடுத்திருக்கிறார்களே; பின்னும் என்னுடையது எதற்காக?" என்று கேட்டார் செட்டியார்.

"அப்படிச் சொல்லக்கூடாது. பெரிய வித்துவான்கள் கொடுத்திருக்கிறார்களென்பது வாஸ்தவந்தான். உங்கள் குருவாகிய மகாவித்துவான் பிள்ளையவர்களே கொடுத்திருக்கிறார்கள்; ஆதலால் தாங்களும் கொடுக்க வேண்டும்."

"என்ன உண்மையாகவா? எங்கே அதைக் காட்டும்" என்று பரபரப்புடன் செட்டியார் கேட்டார். வித்துவான் எடுத்துக் காட்டினார்.

செட்டியாருக்குப் பிள்ளையவர்களுடைய கருணையின் மேல் கோபம் வந்தது. சிறிது நேரம் யோசித்தார். "சரி, இதோ ஒரு பாடல் சொல்லுகிறேன்; எழுதிக்கொள்ளும். நீர் நல்ல இலக்கணப்பயிற்சி உடையவரானால் இந்தச் செய்யுளில் அருமையான இலக்கணப் பிரயோகங்கள் இருப்பதைக் காணலாம்" என்று சொல்லிவிட்டுப் பின் வரும் செய்யுளைச் சொன்னார்:

"ஐயாத் துறையென்பா னந்தாதி யொன்றினிது
செய்யாக் கொடுத்தான் திரைப்புவிக்கே—மெய்யாக
மேலோர்செய் அந்தாதி மேன்மை விளங்கிடப்பன்
னூலோராப் புல்லறிவி னால்."

இந்தப் பாடலை வித்துவான் எழுதிக்கொண்டு வாசித்தார்.

"விஷயம் விளங்குகிறதா?" என்று கேட்டார் செட்டியார்.

"ஒருவாறு விளங்குகிறது. பின் இரண்டடிகளில் தான் சந்தேகம்......"

"தெரியுமே; அங்கே உள்ள இலக்கணப் பிரயோகம் உமக்கு விளங்கவில்லைபோல் இருக்கிறது. சரி, பாட்டு முழுவதுக்குமே அர்த்தம் சொல்கிறேன், கேளும்" என்று இவர் ஆரம்பித்தார்.

"ஐயாத்துறை யென்பான்-ஐயாத்துறை என்று சொல்லப்படுபவன். இங்கே, என்பான் என்பதற்கு, என்று சிறப்பிக்கப்படுபவனென்பது அர்த்தம். பழைய உரைகளில் ஊரெனப்படுவது உறையூரென்று உதாரணம் காட்டியிருப்பதை நீர் படித்திருக்கலாமே!"

வித்துவான் படித்தாரோ படிக்கவில்லையோ சந்தோஷத்தினால் பல்லை இளித்துக்கொண்டே, "ஆமாம்" என்றார்.

"அந்தாதி ஒன்று-ஓர் அந்தாதிப் பிரபந்தத்தை. ஒன்று என்பதைக் கவனியும். மற்ற எல்லாவற்றைக்காட்டிலும் சிறந்து தனியே புகழ்பெற்று நிற்பது; ஆகையால் ஒன்று என்று சொல்லப்பட்டது."

"நன்றாயிருக்கிறது" என்று தலையை அசைத்தார் நூலாசிரியர்.

"இனிது செய்யாக்கொடுத்தான் திரைப்புவிக்கே: திரைப்புவிக்கு-கடல் புடைசூழ்ந்த உலகத்திற்கு உபகாரமாக, இனிது செய்யா-இனிமையாகச் செய்து, கொடுத்தான்-வழங்கினான். உம்முடைய செய்யுள் உலகமெல்லாம் பரவிப் புகழுடைவதற்கு ஏற்றதென்பதைத் திரைப்புவிக்கே என்ற பாகம் குறிப்பிக்கின்றது. செய்யா என்பது செய்து என்ற அர்த்தத்தில் வரும் வினையெச்சமென்பது தெரியுமல்லவா?"

"ஆமாம், தெரியுமே" என்றார் வித்துவான்.

"மெய்யாக-உண்மையாக. மேலோர் செய் அந்தாதி மேன்மை விளங்கிட-பெரியோர்கள் இயற்றிய அந்தாதி களின் சிறப்பெல்லாம் இந்த அந்தாதியிலே விளங்கும்படி. பல அந்தாதிகளில் உள்ள பலவகை நயங்களும் இதில் உள்ளன என்பது கருத்து. இவ்வளவு சிறப்புப் போதாதா?"

"எல்லாம் உங்கள் பேரன்பு. உங்கள் வாக்கின் பெருமையை நான் சொல்ல வேண்டுமா?" என்று குதூ கலத்தோடு வித்துவான் சொன்னார்.

"பன்னூல் ஓரா-பல நூல்களை ஆராய்ந்து, புல்-அதனாற் பொருந்திய, அறிவினால்-கல்வியறிவினால். ஓரா என்பது செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். புல்லறிவு வினைத்தொகை. தெரிந்ததா?"

"தெரிந்தது."

"ஆகவே இந்தப் பாட்டினால் உம்முடைய நூலா ராய்ச்சியையும் அறிவையும் சிறப்பித்துப் பாராட்டி யிருக்கிறேன்" என்று செட்டியார் தம் பிரசங்கத்தை முடித்தார்.

அந்த வித்துவான் சந்தோஷத்தால் பூரித்துப்போனார். பாவம்! அந்தச் செய்யுளை விஷமமாகச் செய்துகொடுத்த தாக எண்ணமுடியாதபடி செட்டியார் பொருள் சொல்லி அவரை மயக்கி அனுப்பிவிட்டார். அந்தப் பாட்டுச் சிறப் புப்பாயிரமாக இராமல் வெறுப்புப்பாயிரமாக இருப்பதை அந்த மனிதர் உணரவே இல்லை.

ஐயாத்துரை மறுநாளே திருவாவடுதுறைக்கு வந்து செட்டியார் அளித்த செய்யுளைப் பிள்ளையவர்களிடமும் அவருடைய மாணக்கர்களிடமும் காட்டி மகிழ்ந்தார். நாங்கள், செட்டியார் வேண்டுமென்று அவ்வித்துவானைக் குறைவாகச் சொல்லியிருத்தலை அறிந்து உள்ளுக்குள்ளே சிரித்தோம். வித்துவானிடம் ஒன்றும் சொல்லவில்லை. அந்த வாரம் சனிக்கிழமையன்று செட்டியார் மடத்திற்கு

வந்தார். பிள்ளையவர்களிடம், "யார் வந்து கேட்டாலும் சிறப்புப்பாயிரம் கொடுத்துவிடுகிறீர்கள். எனக்கு அது கழுத்தறுப்பாக முடிகிறது. எந்த மடையனாவது தப்புந் தவறுமாக எதையாவது பாடிக்கொண்டுவந்து சிறப்புப் பாயிரம் வேண்டுமென்று கேட்கிறான். நான் கண்டிப்பாக மறுத்துவிடுகிறேன். உடனே இங்கே ஓடிவந்து உங்க ளிடம் அழுது புலம்பிக் கேட்கிறான். நீங்கள் சிறப்புப் பாயிரம் கொடுத்துவிடுகிறீர்கள். அவன் அதைப் பெற்றுக்கொண்டு சும்மா போகிறானா? அதை எடுத்துக் கொண்டு என் முகத்துக்கு நேரே நீட்டி, 'உங்கள் குருவே கொடுத்திருக்கிறபோது நீங்கள் பிரமாதப்படுத்திக் கொள்கிறீர்களே' என்கிறான். 'அரவுயர்த்தோன் கொடுமையினும் முரசுயர்த்தோய் நினதருளுக் கஞ்சி னேனே' என்று பீமன் சொன்ன வார்த்தையை நான் சொல்லவேண்டியிருக்கிறது. உங்கள் கருணை என்னைத் தர்மசங்கடத்திற்கு உள்ளாக்குகிறது" என்று படபடப் பாகப் பேசினார்.

"அது கிடக்கட்டும்; ஐயாத்துரைக்கு நீ என்ன, அப்படிப் பாடிக் கொடுத்தாய்?" என்று பிள்ளையவர்கள் கேட்டார்கள்.

"பின்னே என்ன செய்வது? அவன் அதில் இருக்கிற விஷயம் இன்னதென்று தெரியாமலே உத்ஸாகத்தோடு வாங்கிக்கொண்டு போய்விட்டான். நாளைக்கு யாராவது அந்தப் பாட்டின் உண்மைப் பொருளைச் சொன்னால் பிறகு என் பக்கமே திரும்பிப் பார்க்கமாட்டான்" என்று விடை யளித்தார் செட்டியார்.

"அந்தப் பாட்டினால் அவரை எப்படித் திருப்திப் படுத்தினாய்?" என்று ஆசிரியர் கேட்டார்.

செட்டியார் தாம் அவருக்குச் சொன்னபடி பொரு ளைச் சொல்லிக் காட்டினார். அருகில் எல்லாவற்றையும் கேட்டுக்கொண் டிருந்த நாங்கள், "அதன் உண்மைப்

பொருளையும் உங்கள் வாயாலேயே சொல்லிவிடுங்கள்'' என்று வேண்டிக்கொண்டோம். அவர் சொல்லத் தொடங்கினார்:

''ஐயாத்துரை என்பான்-ஐயாத்துரை யென்னும் அநாமதேயப் பேர்வழி, அந்தாதி ஒன்று-அந்தாதி ஒன்றை, இனிது செய்யா-இனிமையாகச் செய்யாமல் (பல குற்றங்களுடன் இயற்றி), திரைப்புவிக்கே கொடுத்தான்-இந்த மண்ணில் போடுவதற்குக் (தகுதியானபடி) கொடுத்தான், மெய்யாக-உண்மையாக, மேலோர் செய் அந்தாதி மேன்மை விளங்க-இந்த நூலின் சிறுமையாலே முன்னோர்கள் இயற்றிய அந்தாதிகளின் மேன்மை நன்றாகப் புலப்படும்படி, பன்னூல் ஓராப் புல் அறிவினால்-பல நூல்களை ஆராயாத புன்மையான அறிவினால். படிக்காத மூடன்; அவன் பிரபந்தம் மண்ணிலே எறியத்தான் ஏற்றது என்பது கருத்து.''

இப்படிச் சொல்லி முடித்தவுடன் முன்னே அவர் சொன்ன அர்த்தத்துக்கும் இதற்கும் எவ்வளவு மாறுபாடு உள்ளதென்பதை அறிந்து விழுந்து விழுந்து சிரித்தோம்.

---

## 15. கிருஷ்ணசாமிக் கவிராயர்

புதுச்சேரியில் சவராயலு நாயகரென்ற கிறிஸ்துவத் தமிழ் வித்துவான் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டவர். அப்புலவர் திலகரிடம் மாறாத விசுவாசமுடையவர். தியாகராச செட்டியாருக்கு நண்பர். கிறிஸ்துவ சமயச் சார்பாக உள்ள தேம்பாவணி முதலிய தமிழ் நூல்களைப் பிரசங்கம் செய்து தக்க ஊதியமும் புகழும் அடைந்து சுகமாக வாழ்ந்து வந்தார். புதுச்சேரியிலுள்ள கவர்னர், அரசாங்க அதிகாரிகள், மற்றக் கனவான்கள் ஆகிய யாவருடைய மதிப்புக்கும் உரியவராக அவர் விளங்கினார்.

அவர் அவ்வப்போது பல தமிழ்ச் செய்யுட்களையும் கிறிஸ்துவ மதசம்பந்தமான பிரபந்தங்கள் சிலவற்றையும் இயற்றியிருக்கிறார். அவற்றை யெல்லாம் தொகுத்து ஒரு புஸ்தகமாக வெளியிட எண்ணிய அவர் தம்மைப்பற்றிப் பிறர் பாராட்டிய பாடல்கள் முதலியவற்றையும் தொகுத்து அதில் சேர்த்து அமைக்க நினைத்தார். புதிய சிறப்புப் பாடல்கள் பலவற்றையும் அங்கங்கேயுள்ள புலவர்களுக்கு எழுதிச் சேகரிக்கத் தொடங்கினார். பிள்ளையவர்களுக்கும் தியாகராச செட்டியாருக்கும் எழுதி அவர்களுடைய மாணாக்கர்களிடமிருந்தும் செய்யுட்களை வாங்கி அனுப்பவேண்டுமென்று தெரிவித்திருந்தார்.

அவரது கடிதத்தைக் கண்ட செட்டியார் முதலில் சற்றுப் பராமுகமாக இருந்தார். பின்பு பிள்ளையவர்கள் சில பாடல்களை இயற்றி அனுப்புவது தெரிந்து தாமும் சில செய்யுட்களை இயற்றினார். அன்றியும் தம்மிடம் அப்போது பாடங் கேட்டுக்கொண் டிருந்த மாணாக்கர்களையும் பாடச் சொன்னார். அவர்களிற் சிலர் இயற்ற முடியாமல் வருந்துவதைக் கண்டு தாமே அவர்களுடைய பெயரால் பாடல்களை இயற்றி அளித்தார்.

அவரிடம் அக்காலத்தில் தனியே வீட்டில் பலர் தமிழ்ப்பாடம் கேட்டு வந்தனர். அவர்களுள் கிருஷ்ணசாமி என்பவர் ஒருவர். அவர் நல்ல தேகவலிமை உடையவர். ஆயினும் மந்தமான அறிவினர். ஒரு நாள் செட்டியார் வீட்டிற்கு நான் சென்றபோது அவர் பாடம் கேட்டுக் கொண்டிருந்தார். ஏதோ ஒரு விஷயத்தைச் செட்டியார் எடுத்துச் சொன்னபோது அந்த மாணாக்கர் அதை நன்றாகத் தெரிந்துகொள்ளவில்லை. திருப்பிக் கேட்கையில் தட்டுக் கெட்டுத் தடுமாறினார். செட்டியார் மாணாக்கர்களுள் திருஷ்டிபரிகாரமாக அவர் இருப்பதை உணர்ந்து கொண்டேன். பின்பு செட்டியாரைத் தனியே சந்தித்த காலத்தில், "இவர் புத்திவன்மையைக் காட்டிலும் தேக

வன்மை மிகுதியாகப் பெற்றவரென்று தோற்றுகிறது" என்றேன்.

"ஆம். நீங்கள் அதைக் கண்டுகொண்டீர்களா?" என்று சிரித்துக்கொண்டே இவர் கூறினார்.

"இவரை எதற்காக நீங்கள் அங்கீகரித்துப் பாடம் சொல்கிறீர்கள்?"

"யாராவது விஷமிகள் வந்தால் இவனைப் பார்த்தாலே பயந்து நடுங்கிப் போய்விடுவார்கள். அதற்காக இப்படியும் ஒரு பேர்வழி இருக்கட்டுமென்று வைத்திருக்கிறேன்" என்றார்.

சவராயலு நாயகரைப் பாராட்டித் தம் மாணாக்கர்களின் பெயரால் செட்டியார் பாடல்களை இயற்றியபோது கிருஷ்ணசாமி என்பவரும், "என் பெயரும் வரும்படி செய்ய வேண்டும்" என்று பலமுறை வேண்டிக்கொண்டார். அவர் பெயரால் சில செய்யுட்கள் பாடவேண்டுமென்பதுதான் அவர் கருத்து. செட்டியார், "ஆகா, அப்படியே செய்துவிடுகிறேன்" என்று சொல்லி அவருக்காக இரண்டு செய்யுட்கள் இயற்றினார். அந்தப் பாடல்கள் சவராயலு நாயகரைப் பாராட்டுவதோடு அமையாமல் கிருஷ்ணசாமியின் நிலைமையையும் எடுத்துக் காட்டின. "சிறந்த உபகாரியாகிய சவராயலு நாயகரைப் படைத்து ஒரு பயனுமில்லாத என்னையும் கடவுள் ஏன் படைத்தார்?" என்ற கருத்துடைய அவ்விரண்டு செய்யுட்களும் வருமாறு:

"பொன்னைப் படைத்துக் கவிவாணர்
யார்க்கும் புரிந்துதவ
உன்னைப் படைத்துச் சவரா
யலுவென்னு மொப்பில்பெயர்
தன்னைப் படைத்த மகிபா
வொருபயன் றானுமிலா

என்னைப் படைத்த வொருவன்
நடுநிலை யேய்ந்தவனே.''

[புரிந்து உதவ - விரும்பிக் கொடுக்க. ஒருவன் - கடவுள். ஏய்ந்தவன்-பொருந்தியவன்.]

"தேனே யெனச்சுவி சொல்லவு
மக்கவிச் செய்யபொருள்
தானே விரித்துரை கூறவு
மேற்றவர் தம்மைப்பிறர்
கோனே யெனச்செய வுஞ்சவ
ராயலுக் கோவிருக்க
யானே பிறந்து பயனென்னை
யோபுக லாயிழையே.''

[ஏற்றவர்-யாசித்தவர். பிறர் கோனே எனச் செயவும்-கண்ட பிறரெல்லாம் அரசனே என்று மயங்கிக் கூறும்படி செல்வ முள்ளவராகச் செய்யவும்.]

இந்த இரண்டு பாடல்களும் மற்றவற்றோடு புதுச்சேரிக்குச் சென்றன. 1869-ஆம் வருஷம் பதிப்பிக்கப் பெற்ற, "புதுவை வித்துவான் ம-ா-ா-ஸ்ரீ செ. சவராயலு நாயகரால் இயற்றப்பட்ட பாடற்றிரட்டு'' என்னும் புஸ்தகத்தில் 47-ஆம் பக்கத்தில் 'தஞ்சைமாநகரம் ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணசாமிக் கவிராயரவர்கள் இயற்றியது' என்ற தலைப்பின் கீழ் அமைக்கப்பட்டன. புஸ்தகம் வந்தபோது, கிருஷ்ணசாமி தம்மைக் கவிராயராக்கித் தம் பெயரையும் அவ்வளவு புலவர்களுடைய பெயர்களோடு வெளிவரச்செய்த செட்டியாரது செயலை மனத்துள் போற்றிப் பாராட்டிச் சந்தோஷமடைந்தார். பாவம்! அவற்றில் தம்முடைய அறிவீனமும் தோற்றுவது அவருக்கு விளங்கவே இல்லை.

---

## 16. ஒரு வித்துவான் தொடுத்த வழக்கு

பிழையென்று தெரிந்தவற்றைப் பிழை யென்று வெளிப்படையாகச் சொல்லிக் கண்டிப்பதற்குச் செட்டியார் சிறிதும் அஞ்சார். இதனால் இவரைச் சிலர் அகங்காரியென்றும் பிறரை மதியாதவரென்றும் எண்ணுவதுண்டு. ஒரு சமயம் ஒருவர் கும்பகோணம் ஸ்ரீ நாகேசுவரஸ்வாமி கோயிலில் எழுந்தருளி யுள்ள பெரியநாயகியம்மைமீது ஒரு பிள்ளைத்தமிழ் இயற்றி இவரிடம் சிறப்புப்பாயிரம் பெறுவதற்காக வந்தார். வந்தவர் அப்பிரபந்தத்தைப் படித்துக் காட்டினார். செய்யுளியற்றுவதிலும் தமிழ் மரபிலும் நல்ல பயிற்சி இல்லாதவரானமையால் அந்நூற் செய்யுட்களில் பலவகையான குறைகள் இருந்தன. சொல்முடிபு, பொருள் முடிபுகள் ஒழுங்காக இல்லை. செய்யுளோசை பல இடங்களில் தவறாக இருந்தது. சந்தப் பாடல்களென்று எண்ணி அமைத்திருந்த செய்யுட்களில் முறைப்படி சந்தம் அமையவில்லை. பிள்ளைத்தமிழ் பாடுவதற்குச் செய்யுள் செய்வதில் நல்ல பழக்கம் இருக்கவேண்டும். ஏதோ மனம் போனபடி பாடிக் கொண்டு வந்திருப்பதை உணர்ந்த செட்டியாருக்கு அவர் பால் மிக்க கோபம் வந்தது.

"முன்பு சிறிதேனும் செய்யுள் செய்யும் பழக்கம் உமக்கு இருந்ததாகத் தெரியவில்லை" என்று செட்டியார் சற்றுக் கடுமையான தொனியில் சொன்னார்.

"உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று அந்த மனிதர் கேட்டார்.

எதிர்த்துக் கேள்வி கேட்டதால், செட்டியார் உள்ளுக்குள்ளே அடக்கிவைத்திருந்த கோபம் பீறிக்கொண்டு கிளம்பியது: "எப்படித் தெரியுமென்று கேட்கிறீர்? இந்தப் பாடல்களைப் பார்த்தாலே தெரிகிறதே. நல்ல நூல்களைப் படித்திருந்தால் இந்தமாதிரி பிழைகளுடன்

செய்யுள் இயற்றும் தைரியம் உமக்கு உண்டாயிராதே. பழைய பிரபந்தங்களைப் படித்துப் பார்த்துப் பிறகு வேண்டுமானால் புதிய பிரபந்தங்கள் இயற்ற முன்வரலாம். நீர் பிரபந்தம் இயற்றவில்லையென்று யார் குறையுற்றார்கள்? இதற்கு நான் சிறப்புப்பாயிரம் கொடுக்க மாட்டேன். இந்தப் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு போய்விடும்'' என்று கண்டிக்கத் தொடங்கினார்.

வந்தவர் சும்மா இராமல் செட்டியாருக்குப் பின்னும் கோபத்தை மூட்டும் வார்த்தைகளைக் கூறலானார்; "நீங்கள் பிரபந்தம் இயற்றுவதில்லையா? நீங்கள் பாடவில்லையென்று யார் குறைப்பட்டார்கள்? உங்கள் பாட்டில் பிழை ஒன்றுமே இல்லையோ? உங்களுக்கு மிஞ்சி வித்துவானே இல்லையென்று நினைத்துக் கொண்டீர்களோ? இந்தக் காலேஜில் உத்தியோகம் பார்க்கும் பலத்தினால் இவ்வளவு தூரம் பேசுகிறீர்கள். வேறு எங்கேயாவது இருந்தால் உங்களை யார் மதிக்கப் போகிறார்கள்?'' இவ்வாறு அவர் பின்னும் செட்டியாரை அவமதித்துப் பேசினார். செட்டியாருக்குக் கோபம் மூண்டால் அதை யாராலும் பொறுக்க முடியாது. இருவருக்கும் வாக்குவாதம் பலமாயிற்று. வந்தவர் செட்டியாரைத் தூஷிக்க, இவர் வந்தவரைக் கண்டிக்க இந்தச் சண்டை பெரிதாகி விட்டது. செட்டியாருடைய மாணாக்கர்கள் விலக்கிவிட்டு வந்தவரை மெல்ல வெளியே அனுப்பினார்கள். செட்டியாரும் எழுந்து உள்ளே சென்றுவிட்டார்.

இந்தச் சண்டை நேர்ந்த சில நாட்களுக்குப் பிறகு அந்தப் பிள்ளைத்தமிழாசிரியர் செட்டியாரிடம் படித்துப் பிரிந்துபோன ஒரு மாணாக்கனுடைய தூண்டுதலால் இவர் மீது மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஒரு வழக்குத் தொடர்ந்தார். செட்டியார் தம்மைத் தூஷித்து அவமானம் செய்ததாக வழக்குக் கொணர்ந்து அதற்குரிய சாட்சிகளையும் வக்கீல்கள் இருவரையும் ஏற்படுத்தினார்.

வழக்கு விசாரணைக்கு வந்தது. செட்டியார் சார்பில் கடலங்குடி கா. சாமி ஐயர் என்னும் வக்கீல் வாதித்தார். அப்போது மாஜிஸ்டிரேட்டாக இருந்தவர் நாராயணசாமி ஐயரென்பவர். வாதியின் கட்சி விசாரணை ஆன பிறகு பிரதிவாதியின் கட்சி விசாரணை ஆரம்பமாயிற்று. தம்மை அநாவசியமாகத் தூஷணை செய்து கோபத்தை உண்டாக்கினமையால் தாமும் கண்டிக்க நேர்ந்ததென்று செட்டியார் சொன்னார்.

செட்டியாருடைய இயல்பை நன்கறிந்த மாஜிஸ்டிரேட் தனியே வாதியை அழைத்து, "நீர் அநாவசியமாகச் செட்டியார் வீட்டுக்குச் சென்று அவர் கோபத்தை எழுப்பினதால்தான் அவர் உம்மை அவமதிக்க நேர்ந்தது. ஆகையால் அவர் செய்தது குற்றமல்ல. அவருக்குக் கோபம் உண்டாக்கிய உம்மேல்தான் குற்றம் இருக்கிறது. செட்டியார் உம்மேல் வழக்குத் தொடர நியாயம் உண்டு. ஆகையால் இந்த வழக்கைத் தொடர்ந்து நடத்தாமல் நிறுத்திக்கொள்கிறீரா? அல்லது உம்மைக் குற்றவாளியாக்கும் நிலைக்குக் கொண்டுவரப் போகிறீரா?" என்று சொன்னார்.

வாதிக்குப் பயம் உண்டாயிற்று. "உடும்பு போனால் போகிறது; கையை விட்டால் போதும்" என்பது போன்ற நிலைக்கு வந்துவிட்டார் அவர். பேசாமல் வழக்கை 'வாபீஸ்' பெற்றுக்கொண்டார்.

செட்டியாரிடத்தில் இயல்பாகவே அச்சம் கொண்டிருந்த அரைகுறை வித்துவான்கள் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு இவரிருக்கும் தெருவின் வழியாகப் போவதற்குக் கூட அஞ்சினர்.

---

## 17. தம்பிரான் இயல்பை மாற்றியது

திருமபுரம் ஆதீனத்தில் பண்டார சந்நிதிகளாக இருந்த ஸ்ரீ சச்சிதானந்த தேசிகரிடம் காஷாயமும் தீக்ஷை

யும் பெற்ற பரமசிவத் தம்பிரானென்பவர் நல்ல தமிழ்ப் பயிற்சியுள்ளவர்; வடமொழியிலும் ஓரளவு தேர்ச்சி பெற்றவர். பாடஞ் சொல்வது, உபந்நியாசம் செய்வது முதலியவற்றிலும் சமர்த்தர். ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடத்தும் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களிடத்தும் முக்கியமான சில தமிழ் நூல்களை அவர் பாடம் கேட்டார். அவர் அடிக்கடி திருவாவடுதுறைக்கு வந்து ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரைத் தரிசித்துச் சில மாதங்கள் தங்கி ஸல்லாபம் செய்துவிட்டுச் செல்வார். பிள்ளையவர்கள் காலத்துக்குப் பின் அவர் வரும் சமயங்களில், ஆதீனத்தில் படித்துக்கொண்டிருந்த மாணாக்கர்கள் தமக்கு ஏதேனும் சந்தேகம் இருந்தால் அவரிடம் கேட்டுத் தெளிந்துகொள்வது வழக்கம். நானும் அவ்வாறு கேட்டிருக்கிறேன்.

சுப்பிரமணிய தேசிகரிடத்தில் ஈடுபாடுடைய அவர் அப்பெரியார் விஷயமாக ஒரு மும்மணிக்கோவை இயற்றி அரங்கேற்றினார். அந்நூலுக்குச் சிலர் சிறப்புப்பாயிரம் வழங்கினர். எல்லாவற்றையும் சேர்த்து அச்சிட ஏற்பாடாயிற்று. அப்போது சுப்பிரமணிய தேசிகர், "தியாகராச செட்டியாரவர்களுக்கும் இந்தச் செய்யுட்களைப் படித்துக் காட்டிச் சிறப்புப்பாயிரம் பெற்றால் நன்றாக இருக்கும்" என்று சொல்லி, மடத்தில் படித்துக்கொண்டிருந்த என்னை அனுப்பினார். நான் அந்தப் பிரபந்தத்தையும் சிறப்புப்பாயிரங்களையும் எடுத்துக்கொண்டு கும்பகோணம் சென்று செட்டியாரிடம் படித்துக் காட்டினேன்.

மரியாதைக்கோ ஸம்பிரதாயத்திற்கோ குணமானாலும் குற்றமானாலும், "சரி சரி" என்று தலையையாட்டும் பேர்வழி அல்லர் இவர். ஒவ்வொரு செய்யுளையும் நான் படித்து வரும்போது சுவையுள்ள பகுதிகளைக் கேட்டுப் பாராட்டினார்; குற்றமென்று தோற்றியவற்றைக் கண்டித்தார். சிறப்புப்பாயிரப் பாடல்களையும் படித்துக் காட்டினேன். அவற்றைப்பற்றியும் தம் அபிப்பிராயத்

தைத் தெரிவித்தார். திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த பழனிக்குமாரத் தம்பிரானென்பவர் இயற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுட்களில் மிகுதியாகக் குற்றம் கூறினார்; 'இன்னபடி இருந்தால் நலமாக இருக்கும்' என்று சில திருத்தங்களைச் சொன்னார். நான் அவற்றைத் தனியே குறித்துக் கொண்டேன்.

ஒரு பாட்டின் முதலடியாகிய,

"துறவுக்கோர் துறவான பனசையுறை ராமலிங்க
முனிவன் சொல்லால்"

என்பதில் வழக்கப்படி ஐந்தாவது சீரில் மோனை இல்லை. செட்டியார் அதனை எடுத்துக்காட்டியபோது நான், "ஆறாஞ் சீரில் 'சொல்லால்' என்பதில் மோனை இருக்கிறதே" என்றேன். "இந்த மாதிரி அறுசீர் விருத்தங்களில் மோனை ஐந்தாம் சீரில் இருந்தால்தானே அழகாக இருக்கும்? நெற்றியில் திலகம் வைத்துக்கொள்ள வேண்டுமென்றால் புருவமத்தியில் வைத்துக்கொள்ளாமல் பொட்டில் வைத்துக்கொண்டு, 'இதோ திலகம் வைத்துக்கொண்டிருக்கிறேன்' என்று சொன்னால் நன்றாக இருக்குமா? பார்ப்பவர்கள் ஒப்புக்கொள்வார்களா? பழனிக்குமாரத் தம்பிரான் ஐயா அவர்களிடம் படித்தவராதலின் அவர் பாட்டு நன்றாக இருக்கவேண்டுமே என்று கவலைப்படுகிறேன்" என்றார். எல்லாவற்றையும் படித்துக் காட்டிய பிறகு நான் திருவாவடுதுறைக்குப் போய்ச் சுப்பிரமணிய தேசிகரிடம் செட்டியார் கூறியவற்றையெல்லாம் சொன்னேன். அவர் சொன்ன திருத்தங்களைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்களில் மாணாக்கர்கள் அமைத்துக்கொண்டார்கள். பழனிக்குமாரத் தம்பிரானுக்கு மட்டும் செட்டியார் கூறிய திருத்தங்களெல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ள மனம் இல்லை. அதோடு செட்டியார் மீது கோபம் வேறு உண்டாயிற்று.

அப்பால் தம்பிரான் எங்களிடம், "செட்டியாருக்குக் கர்வம் தலைக்கேறியிருக்கிறது. இனிமேல் அவரைக் கண்டால் ஓர் ஆட்டம் ஆட்டிவிடுகிறேன். அவரைத் தலை கவிழும்படியாகச் செய்கிறேன்" என்று சொல்லிக் கொண்டிருந்தார். இந்தத் தீர்மானத்தின்மேல், செட்டியார் மடத்துக்கு வரும் காலங்களில் எது கூறினாலும் தம்பிரான் இவரைக் கண்டிப்பதோடு மதியாமலும் இருந்தார்.

இந்த வேறுபாட்டை இவர் கவனித்தாலும் ஆதீனத்தைச் சார்ந்தவரென்ற எண்ணத்தாலும், துறவியென்பதாலும் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு பொறுமையாக இருந்துவந்தார். வேறு யாரேனுமானால் உடனே கண்டித்துவிடுவார்.

ஒரு நாள், பலர் கூடியிருந்த சபையில் செட்டியார் பேசுங்காலத்தில் இவர் பேசும் விஷயங்களில் ஒவ்வொன்றையும் எதிர்த்துப் பழனிக்குமாரத் தம்பிரான் பேசுவாராயினர். அதுவரையில் கோபத்தை அடக்கிக்கொண்டிருந்த செட்டியார் தம்பிரானுக்குத் தக்கபடி 'சூடு' கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்தார். "சாமி! நான் எது சொன்னாலும் அங்குத்தி மறுத்துப் பேசவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நான் என்ன செய்யமுடியும்! ஒரு தந்திரம் செய்யலாமென்று தோற்றுகிறது. இனிமேல் 'அங்குத்தியைப் போல் செய்யுள் செய்கிற சாமர்த்தியம் யாருக்கும் இல்லை' என்று சொல்வேன். 'எனக்கு அதில் நல்ல பழக்கம் இல்லை' என்று அங்குத்தி சொல்லும். 'நல்ல குணசாலி' என்று சொல்வேன். 'என்னைப் போன்ற துர்க்குணி இல்லை' என்று அங்குத்தி சொல்லக்கூடும்."—இவ்வாறு செட்டியார் மேலும் மேலும் சொல்லிக்கொண்டே போனார். கேட்டவர்கள், "தெனாலிராமன் கதையைப்போல அல்லவா ஆரம்பித்துவிட்டார்?" என்று சொல்லி வியந்தார்

கள். தம்பிரானுக்கே நாணம் உண்டாகி விட்டது. சிரித்துக்கொண்டு, "என்ன? செட்டியார்வாள். இப்படி ஆரம்பித்துவிட்டீர்களே! இனி உங்கள் வழிக்கு வருகிற தில்லை" என்று சொல்லிவிட்டார்.

---

## 18. ஒரு வக்கீலின் நன்னூற் பதிப்பு

அக்காலத்தில் ஹைகோர்ட்டு வக்கீலாக இருந்த ஒரு கனவான் நன்னூலைப் புதுமாதிரியாகப் பதிப்பித்து வெளியிட்டார். அதில் 200-க்கு மேற்பட்ட சூத்திரங்களை விலக்கிவிட்டுச் சுருக்கமாகச் சிறிய அளவில் பதிப்பித்தனர். நன்னூல் முழுவதும் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு அநாவசியமென்பதும், அவர்களுக்குத் தாம் தொகுத்து வெளியிட்ட சூத்திரங்களே போதுமென்பதும் அவர் அபிப்பிராயம். அவர் தம்முடைய நண்பர்களிடம் தம் கருத்தைச் சொல்லவே தமிழைப்பற்றி ஒன்றும் தெரியாத அவர்கள் அவர்பாலுள்ள மதிப்பினால், "மிகவும் நல்ல காரியம்!" என்று பாராட்டினார்கள்.

புத்தகம் வெளிவந்தவுடன் அந்த வக்கீல் அதைத் தம் நண்பர்களுக்கும் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கும் அனுப்பிப் பாடமாக வைக்க முயற்சி செய்யவேண்டுமென்று எழுதினார். அவருடைய கௌரவத்தை உத்தேசித்துப் பலர் தம் பள்ளிக்கூடங்களில் பாடமாக வைத்தனர். அந்தப் பதிப்பின் சம்பந்தமாகப் பலர் வக்கீலைப் பாராட்டவும் தொடங்கினர்.

அந்த நன்னூற் பதிப்பாசிரியர் அப்பதிப்பில் ஒரு பிரதியைக் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தலைமை ஆசிரியருக்கு அனுப்பிப் பல பாடசாலைகளில் பாடமாக வைக்கப் பெற்றிருக்கிறதென்றும் அந்தப் பள்ளிக்கூடத்திலும் வைக்கவேண்டுமென்றும் எழுதினார். கும்பகோணத்தில் உள்ள பள்ளிக்கூடங்களில் தமிழ்ச் சம்பந்த

மாக எந்த விஷயம் வந்தாலும் தியாகராச செட்டியார் கவனத்துக்கு வருவது வழக்கம். இவர் அங்கீகாரம் அளித்தால்தான் அந்தக் காரியத்தைச் செய்யத் துணி வார்கள்.

செட்டியார் பார்வைக்கு அந்த நன்னூற் பதிப்பும் வந்தது. இவர் அதைப் புரட்டிப் பார்த்தார். ஏதோ சிறிது தமிழறிவை வைத்துக்கொண்டு பதிப்பித்த வெளி யீடென்று இவர் கண்டு, "இது பாடமாக வைக்கத் தக்கதன்று" என்று சொல்லிவிட்டார். அதனால் அந்தப் புத்தகம் டவுன் ஹைஸ்கூலில் பாடமாக வைக்கப்பட வில்லை. மற்றப் பள்ளிக்கூடங்களிலும் அதனை ஒருவரும் ஏற்றுக்கொள்ளவில்லை. தியாகராச செட்டியார் அதை அங்கீகரிக்கவில்லை என்ற செய்தி கும்பகோணத்தைச் சார்ந்த ஊர்களிலும் பரவியது. அங்கங்கே உள்ள பள்ளிக்கூட ஆசிரியர்களும் அதைப் பாடமாக வைக்கத் துணியவில்லை. இப்படி, கும்பகோணத்திலும் அதைச் சார்ந்த இடங்களிலும் அந்தப் பதிப்பு உபயோகமாகாமல் இருப்பதையும் அதற்குச் செட்டியாரே காரணமென் பதையும் பதிப்பாசிரியராகிய வக்கீல் அறிந்துகொண்டார்.

ஒரு சமயம் அந்த வக்கீல் கும்பகோணம் கோர்ட்டுக்கு வர நேர்ந்தது. அப்படியே காலேஜிற்கும் வந்தார். காலேஜில் ஆங்கில ஆசிரியராக இருந்த சுந்தரராவென் பவர் அவரோடு படித்தவர். காலேஜைப் பார்வையிடுபவர் போல் அவ்வக்கீல் சுந்தரராவோடு ஒவ்வொரு வகுப் பாகச் சென்று பார்த்தார்; தமிழ் வகுப்புக்கும் போனார்.

அங்கே தியாகராச செட்டியார் தமிழ்ப் பாடம் நடத்திக்கொண் டிருந்தார். இவரை நேரே பார்த்துக் கண்டிக்க வேண்டுமென்ற அபிப்பிராயம் வக்கீலுக்கு இருந்தது. ஆனால் செட்டியார் சொல்லிக்கொண் டிருந்த பாடத்தைக் கவனித்தபோது, 'இவர் ஆச்சரியமான

திறமையுடையவராக இருக்கிறாரே! இவரை எப்படி நாம் கேட்பது?' என்று எண்ணிப் பேசாமல் போய்விட்டார்.

பாடம் முடிந்ததும் சுந்தரராவ் ஒவ்வொரு நாளும் வீட்டுக்குப் போகும்போது தம் வண்டியில் செட்டியாரையும் அழைத்துக்கொண்டு செல்வது வழக்கம். அன்றும் அப்படியே செட்டியாரையும் தம் நண்பராகிய அந்த வக்கீலையும் ஏற்றிக்கொண்டு புறப்பட்டார்.

வண்டி போய்க்கொண் டிருந்தது. சுந்தரராவ் அவ்விருவரையும் ஒருவருக்கொருவர் பழக்கம் செய்து வைத்தார். பிறகு, "இவர்கள் புதிய முறையில் சுருக்கமாக ஒரு நன்னூல் பதிப்பித்திருக்கிறார்கள்" என்று செட்டியாரிடம் சொன்னார். செட்டியார் வீணாக அதைப்பற்றிப் பேசவேண்டாமென்று சும்மா இருந்துவிட்டார்.

ஆனால் அந்தக் கனவானுக்குச் சிறிது தைரியம் உண்டாயிற்று. தம்முடைய நண்பர் அருகில் இருக்கிறாரென்ற எண்ணத்தால் செட்டியாரைப் பார்த்து, "என்ன ஐயா! நான் மிகவும் சிரமப்பட்டு ஆராய்ந்து வெளியிட்ட நன்னூலைப் பாடமாக வைக்கக்கூடாதென்று நீங்கள் சொல்லிவிட்டீர்களாமே! அதில் என்ன குற்றம் கண்டீர்கள்?" என்று சிறிது அதிகாரத் தொனியோடு கேட்டார்.

தூங்குகிற புலியை வாலுருவிவிட்டால் அது சும்மா இருக்குமா? "ஓ, அப்படியா! அந்த நன்னூலை நீங்களா பதிப்பித்தீர்கள்? அதில் 200 சூத்திரங்களை விலக்கி விட்டீர்களே; என்ன காரணம்?" என்று கேட்டார் செட்டியார்.

வக்கீல்: நன்னூல் முழுவதும் பிள்ளைகளுக்கு எதற்காக வேண்டும்? அவர்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள எவ்வளவு சிரமப்படுகிறார்கள்? அது தெரிந்து அவசியமானவற்றை வைத்துக்கொண்டு மற்றவற்றை நீக்கிப் பதிப்பித்தேன்.

செட்டியார்: பள்ளிக்கூடப் பிள்ளைகள் விஷயம் உங்களுக்கு எப்படித் தெரியும்? எங்கேயாவது பாடம் சொல்லியிருக்கிறீர்களா? கடினமானதென்று நினைத்தால் விளங்கும்படி சொல்லிக் கொடுக்கவேண்டுமே யல்லாமல் விலக்கிவிடலாமா? இலக்கணமே கடினந்தான். அதற்காக அதைத் தள்ளிவிடுவதா? நீங்கள் இருநூறு சூத்திரங்களை அநாவசியமென்று விலக்கினீர்களே; அந்தச் சூத்திரங்களிற் பல மிகவும் அவசியமென்பதை நான் நிரூபித்துக்காட்டுகிறேன். உதாரணங்களை யெல்லாம் வெட்டிக் குலைத்துப் போட்டிருக்கிறீர்களே! முழு உருவமும் இருந்தால்தானே இன்ன விஷயத்திற்கு இன்ன காரணத்தால் உதாரணமென்பது விளங்கும்?

பேச்சு வளர்ந்தது; இருவருக்கும் கோபம் உண்டாயிற்று. பதிப்பிலுள்ள குற்றங்களையெல்லாம் செட்டியார் ஒவ்வொன்றாக எடுத்து வீசினார். கனவான் விடை சொல்லமுடியாமல் விழித்தார்.

கனவான்: இதில் இல்லாத விஷயங்களை உபாத்தியாயர் எடுத்துச் சொல்லி விளக்கமாட்டாரா?

செட்டியார்: அப்படியானால் உபாத்தியாயரிடம் எல்லாவற்றையுமே விட்டுவிடலாமே; இந்தப் பதிப்பு எதற்கு?

கனவான் திண்டுமுண்டாடினார்; எதையோ நினைத்துக்கொண்டு, "நான் என்ன பண்டிதனா?" என்று கேட்டார். பண்டிதராயிருந்தால் இப்படியென்று அவர் கருதியது அக்கேள்வியிலே தொனித்தது.

அதுவரையில் பதிப்புக் குற்றங்களை மாத்திரம் சொல்லிக் கண்டித்து வந்த செட்டியார் இதைக் கேட்டவுடன் அதிகக் கோபம் கொண்டார்; "உம்மை யாரையா பண்டிதரென்றது? நீர் பண்டிதரல்ல, உமக்கு இந்தப் புஸ்தகத்தைத் தொடக்கூட யோக்கியதை இல்லையென்று தானே நான் சொல்லுகிறேன்? தமிழ்ப் பண்டிதனென்

ருல் கிள்ளுக்கீரையா? நீர் பண்டிதரிடம் ஏன் வருகிறீர்? பண்டிதனல்லவென்று சொல்லிக்கொள்வதில் கௌரவம் காணும் உமக்கும் தமிழுக்கும் என்ன சம்பந்தம்?" என்று கடுமையாகப் பேசலானார்.

கனவானுக்கு மீசை துடித்தது; "என்னை இன்னா ரென்று தெரியாமற் பேசுகிறீரே!" என்று உரத்த குரலில் கூறினார்.

செட்டியாரரா பயப்படுகிறவர்! "உம்மை நன்றாகத் தெரிந்துகொண்டுதான் பேசுகிறேன். உம் கடிகாரச் சங்கி லிக்கும் சட்டைக்கும் மீசைக்கும் பயப்படமாட்டேன் நான். வண்டியை விட்டுக் கீழே இறங்கும். ஓரிடத்தில் இருந்து பேசுவோம். உம்முடைய அறியாமையை இன் னும் தெளிவாக வெளிப்படுத்துகிறேன்" என்று சீறினார்.

எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டிருந்த சுந்தர ராவ் விஷயம் மிஞ்சிவிட்டதை அறிந்து அந்தக் கனவா னைப் பார்த்து, "போதும்; இனி இதைப்பற்றி வாதம் செய்வதை நிறுத்திவிடுங்கள். படித்தவர்களோடு நாமெல் லாம் வாய் கொடுக்கலாமா? இவர்களுடைய பெருமையை நீங்கள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. இவர்களால் எங்கள் காலேஜுக்கே கௌரவம். நாமெல்லாம் ஒன்றா கப் படித்தவர்களல்லவா? தமிழில் உங்களுக்கு விசேஷ அறிவு எப்படி இருக்கமுடியும்? கிரமமாகப் பாடம் கேட் டுத் தமிழிலேயே ஊறிப்போனவர்களுக்குமுன் நாம் எம் மாத்திரம்? தமிழ் விஷயத்தில் துணிவாக ஒரு காரியத் தைச் செய்யவோ, ஒரு கொள்கையை உண்டாக்கவோ நாம் யார்?" என்று சொல்லிவிட்டுச் செட்டியாரையும் சமாதானப்படுத்தினார்.

இந்த விவாதத்தைப் பற்றிச் சுந்தரராவ் அடிக்கடி சொல்லிச் செட்டியாரின் தைரியத்தைப் பாராட்டுவார். செட்டியாரும், "தமிழில் இரண்டு புஸ்தகத்தைப் படித்து

விட்டுத் தங்களை ஸ்தோத்திரம் செய்யும் நாலுபேர்க ளோடு சேர்ந்து ஆரவாரம் செய்து தமிழுக்கே புகலிடம் தாமே என்று அட்டகாசம் செய்கிற இத்தகைய பிராணி களை அடக்கத்தான் வேண்டும்'' என்று அடிக்கடி சொல்லு வார்.

---

## 19. ஆசிரியரும் மாணுக்கரும்

ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடத்தில் தியாக ராச செட்டியாருக்கு இருந்த பக்தி இணையற்றது. சில நாட்கள் இவரோடு பழகினுல் மாத்திரம் இது தெரிய வராது. ஆசிரியரும் மாணுக்கரும் நண்பர்களைப் போலவே பழகிவந்தனர். பிள்ளையவர்களின் கவிப் போக்கிலே ஈடுபட்டு அனுபவித்து அதன் அருமையை உணர்ந்து வாயாரப் பாராட்டுவார் செட்டியார். பிள்ளையவர்களை ஐயாவென்றே அழைப்பது இவர் வழக்கம்.

அப்புலவர்பிரான் இயற்றிய திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் கலம்பகம் அச்சிடப்பெற்ற காலத் தில் மதுரை இராமசாமிப் பிள்ளை என்பவர் அதனைச் செட்டியாரிடம் கொண்டுபோய்க் காட்டினுர். அதில் முகப்புப் பக்கம் இல்லை. "இது யார் இயற்றியது?" என்று செட்டியார் இராமசாமிப் பிள்ளையைக் கேட்டார்.

"மடத்து அடியார்களில் ஒருவர் செய்தது" என்ருர் பிள்ளை.

செட்டியார் படித்துப் பார்த்தார். அந்த நூலின் நடையிலிருந்து அது தம் ஆசிரியரால் இயற்றப் பெற்ற தென்று இவர் தெரிந்துகொண்டார். "என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்களோ! ஐயா அவர்கள் வாக்கு என்று தெளி வாகத் தெரிகிறதே!" என்று இராமசாமிப் பிள்ளையிடம் சொன்னுர்.

"அதற்கு ஏதாவது அடையாளம் இருக்கிறதா? துணிவாகச் சொல்ல முடியுமா?" என்று அவர் கேட்டார்.

"அடையாளமா! ஆதீனத்துச் சம்பிரதாயங்களை இவ்வளவு நன்ருகத் தெரிந்து அமைக்கக் கூடியவர்கள் வேறு யாரையா இருக்கிருர்கள்?"

"மடத்தைச் சார்ந்த தம்பிரான்களுக்கு அந்தச் சம்பிர தாயம் தெரியாதா? எவ்வளவோ முதியவர்கள் இருக் கிருர்களே; அவர்களுக்குத் தெரியாதா?"

"தெரியலாம். ஐயாவைவிட அதிகமாகக்கூடத் தெரிந் திருக்கலாம். ஆனல் அந்தச் சம்பிரதாயத்தை இந்த மாதிரி கற்பனை செய்து செய்யுட்களிற் பொருத்தி அமைக்கத் தெரிய வேண்டுமே."

"வேறு யாரும் அப்படிச் சொல்ல இயலாதா?"

"சொல்லலாம். சொல்லுகிற முறையிலே பிள்ளை யவர்களுக்கென்று தனிச் சிறப்பு ஒன்று உண்டு. நமக்கு வேண்டியவர்களை முகச் சாயலிலிருந்து நாம் தெரிந்து கொள்ளுகிருேமல்லவா? அழகுள்ள இருவர் முகச்சாய லில் மூக்கு, கண், வாய் எல்லாம் ஒரே மாதிரி இருக்கின் றன. இரண்டு முகங்களிலும் அழகு இருக்கிறது. ஆனலும் நாம் பார்த்துப் பழகிய முகத்தைச் சட்டென்று தெரிந்து கொள்ளுகிருேம். இன்ன காரணத்தால் இந்த முகம் இன்னருடையது என்று வரையறுத்துப் பேச முடியுமா? அது கண்ணுக்கும் கருத்துக்கும் சம்பந்தப்பட்ட விஷயம். கவிநடையும் அத்தகையதே. பிள்ளையவர்கள் வாக்கிலே பழகிய காதுக்கு இந்த நூலைக் கேட்கும்போது அவர்களு டைய வாக்குத்தான் இந்த நூல் என்பது தெரிந்துவிடும்."

இராமசாமிப் பிள்ளை அதற்குப் பிறகு ஆட்சேபிக்க வில்லை; உண்மையை ஒப்புக்கொண்டார்.

மற்ருெரு முறை பிள்ளையவர்கள் சுப்பிரமணிய தேசி கர் விஷயமாக, "துங்கஞ் சார்தரு" என்ற இங்கிலீஷ் நோட்டு மெட்டில் அமைந்த கீர்த்தனத்தை இயற்றி

என்னைக்கொண்டு தேசிகர் முன்னிலையில் பாடச் செய்தார்கள். இசையுடன் அதை நான் பாடியபோது யாவரும் கேட்டுச் சந்தோஷித்தனர்.

பின்பு பிள்ளையவர்களும் நானும் கும்பகோணத்துக்கு ஒரு முறை போயிருந்தபோது செட்டியார் வீட்டில் தங்கினேம். அந்தச் சமயத்தில் பிள்ளையவர்கள் செட்டியாரிடம், "தியாகராசு, சாமிநாதையர் சந்நிதானத்தின் விஷயமாக ஒரு கீர்த்தனம் செய்திருக்கிறரே; நீ கேட்டாயா?" என்று சொல்லி அந்தக் கீர்த்தனத்தைப் பாடிக் காட்டும்படி எனக்குக் கட்டளையிட்டார். நான் மெல்ல இசையுடன் பாடினேன்.

"இவர் பாட்டு எப்படி இருக்கிறது?" என்று ஆசிரியர் கேட்டார்.

"இவர் பாடுவதற்குச் சொல்லவேண்டுமா, என்ன? இசையில் இவர் சமர்த்தரென்று எனக்கு முன்பே தெரியுமே."

"நான் அதைச் சொல்ல வரவில்லை. கீர்த்தனம் எப்படி இருக்கிறது, எதுகை மோனை எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றனவென்று கேட்கிறேன்."

செட்டியார் பிள்ளையவர்கள் முகத்தை விழித்துப் பார்த்தார்; "என்ன சொல்லுகிறீர்கள்! இந்தப் பாட்டு இவர் இயற்றியதா? இல்லவே இல்லை. நான் நிச்சயமாகச் சொல்கிறேன்; நீங்கள் பாடின பாட்டு இது" என்றார்.

"என்ன அப்பா அப்படிச் சொல்லுகிறாய்? இசைப் பழக்கமுடைய இவர் இப்படிப் பாடமாட்டாரா? இவருடைய சக்தியை இன்னும் நீ தெரிந்துகொள்ளவில்லைபோல் இருக்கிறதே!"

"இவருக்குச் சக்தி இல்லையென்று யார் சொன்னார்கள்? உங்களுக்கும் எனக்கும் தெரியாத இசையிலே இவர் வல்லவரென்பதை நான் நன்றாக அறிவேன். ஆனால்

இந்தப் பாட்டு இவர் இயற்றியதே அன்று. எங்கே வேண்டு மானாலும் சொல்லுகிறேன்.''

ஒருவர் ஆட்சேபிக்கத் தொடங்கினால் செட்டியா ருக்கு அதிக வேகம் பிறந்துவிடும். தொனி அதிகமாகும். பேச்சிலே கடுமை தோன்றும். அந்த நிலைக்கு வராமல் இருப்பதற்கு முன்னே நான் இடைமறித்து, "ஐயா அவர்கள் செய்ததுதான் இது" என்று உண்மையைச் சொல்லிவிட்டேன்.

பிள்ளையவர்கள் வாக்கில் யாரேனும் பொறாமையினால் குறைகூறத் தொடங்கினால் அவரைக் கேள்விகள் கேட்டுக் கலங்க அடித்துவிடுவார் செட்டியார். தம்முடைய ஆசிரி யர் வாக்கு, 'தங்கந் தங்கமாக' இருப்பதாக அடிக்கடி சொல்லிப் பாராட்டுவார்.

இவ்வாறு இருந்தாலும் சில விஷயங்களில் பிள்ளை யவர்களைத் தியாகராச செட்டியார் கண்டிப்பதும் உண்டு. எல்லோருக்கும் விளங்காத ஸ்தல விஷயங்களைச் செய்யுட் களில் அமைத்துப் பாடுவதை இவர் கண்டிப்பார். திரிபு யமகமாக உள்ள அந்தாதிகள் வரவரக் கடினமாக இருப்ப தாகச் சொல்லுவார். "நீங்கள் இயற்றும் பாடல்கள் படிப்பவர்கள் உள்ளத்திற் புகுந்து கவர்ச்சியை உண்டு பண்ண வேண்டும். எவ்வளவு தரம் யோசித்தாலும் விளங்காதபடி சொற்பிரயோகங்கள் இருந்தால் உங்கள் நூலை யார் படிப்பார்கள்? அப்படி எங்கேயாவது இரண் டோரிடத்தில் கடினமான பிரயோகம் இருந்தால் உடனே அதற்கு அடியில் ஒரு குறிப்பு எழுதிவிட வேண்டும். தமிழ் நாட்டில் தமிழன்பு உடையவர் யாராக இருந்தாலும் படித்து இன்புறும்படி இருக்க வேண்டும். இல்லாவிட்டால் எங்கெங்கே புஸ்தகம் போகிறதோ அங்கெல்லாம் நீங்களும் பாடம் சொல்லப் போய்க்கொண் டிருக்க வேண்டும். இது சாத்தியமான விஷயமா?" என்று இவர் கண்டிப்பதை நான் பல முறை கேட்டிருக்கிறேன்.

ஒரு வருஷம் எப். ஏ., வகுப்புக்குத் தமிழ்ப் பாடமாக இருந்த ஒரு வசன புத்தகத்தில் 'தான் கெட்டதல்லாமல் சந்திர புஷ்கரிணியையும் கெடுத்ததுபோல' என்ற பழமொழி வந்திருந்தது. அதன் பொருள் ஒரு பண்டிதருக்கு விளங்கவில்லை. பள்ளிக்கூடத்துத் தமிழாசிரியர்கள் சிலர் விடுமுறைக் காலங்களில் பிள்ளையவர்களிடம் வந்து தங்கள் சந்தேகங்களைத் தெளிந்துகொண்டுபோவது வழக்கம். அப்படியே அந்தப் பண்டிதரும் பிள்ளையவர்களிடம் வந்தபோது அந்தப் பழமொழியைச் சொல்லி, "இதில் சொல்லப்பட்ட வரலாறு என்ன?" என்று வினவினார்.

பிள்ளையவர்களுக்கு அந்த விஷயம் தெரியாது. "தெளிவாகத் தெரியாது" என்று அவர் சொல்லவே, பண்டிதர், "யோசித்துச் சொல்லுங்கள். உங்களுக்கே தெரியாதென்றால் வேறு யாரிடம் போய்க் கேட்பது?" என்று மன்றாடினார். அந்தக் கவிஞர் சிறிது நேரம் யோசித்துவிட்டு ஏதோ ஒரு வகையாகச் சொல்லலானார்:

"சந்திர புஷ்கரிணியென்பது ஸ்ரீரங்கத்திலுள்ள ஒரு தீர்த்தம். அது திருவானைக்காவைச் சார்ந்த நவ தீர்த்தங்களுள் ஒன்றாக இருந்தது. திருவானைக்காப் புராணத்தால் இதனை அறியலாம். திருவானைக்காக் கோயிலில் இருந்த அதிகாரி ஒருவன் சிவ கைங்கரியங்களைச் சரியாகச் செய்யாமல் இருந்தான். அவனை ஆலய நிர்வாகிகள் வேலையிலிருந்து நீக்கிவிட்டனர். அவன் உடனே வைஷ்ணவனாகி ஸ்ரீரங்கம் கோயிலில் உத்தியோகம் பெற்று வசிக்கலானான். பிறகு அவன் பெருமுயற்சி செய்து அந்தத் தீர்த்தத்தையும் ஸ்ரீரங்கத்து ஆலயத்தோடு சேர்த்துக் கொண்டான். அவன் அவ்வாறு செய்த வரலாற்றை உட்கொண்டு இந்தப் பழமொழி எழுந்தது."

பண்டிதருக்கு அளவற்ற திருப்தி உண்டாகிவிட்டது. அவர் சைவராதலின், "மிகவும் அழகான கதை; அருமை

யான பொருள்'' என்று பாராட்டிக்கொண்டே போய் விட்டார்.

பிறகு ஒரு நாள் செட்டியார் திருவாவடுதுறை மடத்திற்கு வந்தார். பிள்ளையவர்கள் இவரைப் பார்த்து, மேலே குறிப்பிட்ட பழமொழியில் சுட்டப்பெறும் வரலாறு என்னவென்று கேட்டார்.

''ஏன்? யாராவது காலேஜ் உபாத்தியாயர் உங்களிடம் வந்து கேட்டாரோ? நீங்கள் என்ன சொன்னீர்கள்?'' என்று சிரித்துக்கொண்டே வினவினார் செட்டியார்.

பிள்ளையவர்கள் நிகழ்ந்தவற்றைச் சொன்னார். கேட்ட செட்டியார், ''தெரியாததைத் தெரியாதென்று சொல்லி விடாமல் ஏன் இவ்விதம் கற்பித்துச் சொன்னீர்கள்? நாளைக்கு அந்த மனுஷன் பிள்ளைகளிடத்தில் இந்தக் கதையை இப்படியே ஒப்பித்துவிட்டுப் பிள்ளையவர்கள் சொன்னார்களென்றல்லவோ சொல்லிவிடுவான்? யாராவது விஷயம் தெரிந்தவர் கேட்டால் உங்களுக்கு அபக்கியாதி வராதா?'' என்று சொன்னார்.

''என்னவோ சொல்லிவிட்டேன். அந்தப் பண்டிதர் என்னை மிகவும் வற்புறுத்தினார். சொல்லாவிட்டால் போகமாட்டாரென்று தோற்றியது. அதன் உண்மையான வரலாறுதான் என்ன? சொல்.''

''ஸ்ரீரங்கம் கோயிலில் இருந்த சமையற்காரன் ஒருவன் ஒரு தாசியை வைத்திருந்தான். கோயிற் பிரசாதத்தை அவளுக்குச் சுடச் சுடக் கொண்டுபோய்க் கொடுப்பான். அந்த வழக்கப்படி ஒரு நாள் சட்டியரணையென்னும் பொங்கலை எடுத்துக்கொண்டு போனான். வழியில் சந்திர புஷ்கரிணியில் இறங்கிக் குளிக்க எண்ணி அதன் கரையில் வைத்தான். சூடு ஆறுவதற்குமுன் கொடுக்க வேண்டுமே என்ற எண்ணத்தால் அவசர அவசரமாக இறங்கும்போது படி வழுக்கிவிட்டுப் புஷ்கரிணியில் விழுந்து இறந்துவிட்டான். கோயிலார் மறுநாட் காலையில்

பிரேதத்தை அப்புறப்படுத்தி அத்தீர்த்தம் கெட்டுப் போனதற்கு வருந்திப் புஷ்கரிணிக்கும் கோயிலுக்கும் சம்புரோக்ஷணை செய்து, பின்பே பூஜை நடத்தினார்கள். அந்தச் சமையற்காரன் பண்ணின காரியத்தை எண்ணி உண்டானது இந்தப் பழமொழி'' என்று செட்டியார் விளக்கினார்.

செட்டியாருடைய அறிவுத்திறமையை அறிந்த பிள்ளையவர்கள் தாம் இயற்றும் ஒவ்வொரு நூலையும் இவருக்குக் காட்டுவது வழக்கம். செட்டியார் சொல்லும் யோசனைகளை அங்கீகரித்துக்கொண்டு ஏற்ற திருத்தங்களையும் செய்வார். எந்தப் புராண அரங்கேற்றம் நடந்தாலும் செட்டியாரை அருகில் வைத்துக்கொண்டு நடத்துவார். இவ்வாறு ஆசிரியரும் மாணாக்கரும் ஒருவர் பெருமையை மற்றொருவர் அறிந்து அன்பு பூண்டு விளங்கினார்கள்.

ஒரு சமயம் செட்டியார் திருவாவடுதுறைக்கு வந்திருந்தார். பிள்ளையவர்கள் பலவகையான மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லிவந்த காலம் அது. அப்புலவர்பிரான் செட்டியாரைப் பார்த்து, "இந்தப் பிள்ளைகளின் தொந்தரவு பொறுக்க முடியவில்லை. நீ நிறையச் சம்பளம் வாங்கிக்கொண்டு காலேஜில் சுகமாக இருக்கிறாய். பிள்ளைகள் தொந்தரவு இராது'' என்று கூறினார். உடனே செட்டியார், "அப்படியல்ல; காலேஜ் மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லுவதில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. தாங்கள் வந்து அங்கே பாடம் சொல்வதானால் பிள்ளைகள் உங்களை அப்படியும் இப்படியும் ஆட்டி வைத்துவிடுவார்கள். இங்கே சொல்வதுபோல் சுலபமானதன்று'' என்று சொன்னார். ஆசிரியருக்கு இவர் சொன்ன வார்த்தை திருப்தியாகத் தோற்றவில்லை. உடனிருந்த நாங்களும், 'செட்டியார் இப்படிச் சொல்வது நன்றாக இல்லையே' என்று எண்ணினோம்.

மற்றொரு முறை செட்டியார் திருவாவடுதுறைக்கு வந்திருந்தபோது திருவிளையாடற் புராணப் பாடம் நடந்துகொண் டிருந்தது. வலைவீசிய படலம் கேட்டு வந்தோம். செட்டியார் வந்து அங்கே அமர்ந்தார். இடையே ஒரு கடினமான பாடல் வந்தது. அப்போது எங்கள் ஆசிரியர் செட்டியாரைப் பார்த்து, "தியாகராசு, இதற்கு நீ பொருள் சொல்; நான் சற்று வெளியே போய் வருகிறேன்" என்று சொல்லிப் புறத்தே சென்றார். அவர் குறிப்பறிந்து நானும் உடன் சென்றேன்.

படித்துக்கொண் டிருந்த மாணாக்கர்கள் பல நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்கள். பிள்ளையவர்களைத் தெய்வம்போல மதிப்பவர்கள். செட்டியார் கர்வம் பிடித்தவரென்ற எண்ணம் சிலருக்கு இருந்து வந்தது. இவர் திருவிளையாடற் பாடலுக்கு உரை சொல்லத் தொடங்கும்போது, 'இவர் அகப்பட்டுக்கொண்டார். இந்தச் சந்தர்ப்பத்தில் இவரை விட்டு விடாமல் மட்டந்தட்ட வேண்டும்' என்று அவர்கள் நிச்சயித்துக்கொண்டனர். இவர் உரை சொல்லிவரும்போது ஒவ்வொரு விஷயத்திலும் ஒவ்வோர் ஆக்ஷேபணையை எழுப்பிக் கேள்வி கேட்கத் தொடங்கினர். அவர்களுள் பழனிக் குமாரத் தம்பிரானும் சண்பகக் குற்றாலக் கவிராயரும் அதிகமாகக் கேள்விகள் கேட்டார்கள். செட்டியார் சிறிது கலக்கத்தை அடைந்தார்.

அப்போது அயலில் வந்து கவனித்துக்கொண் டிருந்த பிள்ளையவர்கள் மெல்ல என்னிடம், "மடத்தில் படிக்கிற பிள்ளைகளுக்குப் பாடம் சொல்வது கஷ்டமென்பதைத் தியாகராசு இப்போதாவது தெரிந்துகொண்டிருப்பானா?" என்று சொல்லிவிட்டு அங்கே வந்தார். மாணாக்கர்களைப் பார்த்து, "என்ன, தர்க்கம் செய்துகொண்டே இருக்கிறீர்களே! சும்மா இருங்கள். தியாகராசு நல்ல புத்திமான்.

அவனருமை எனக்கல்லவோ தெரியும்?" என்று சொல்லிக் கையமர்த்தினர்.

மற்றொரு சமயம் கும்பகோணத்தில் இவர் வீட்டிற்கு ஆசிரியர் வந்திருந்தபோது இவர், "உங்களிடம் நான் இறுமாப்போடு பேசினதற்கு ஏற்ற தண்டனையை அடைந்துவிட்டேன். காலேஜ் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லச் சிறிது சாதுரியமும், கதை சொல்லும் திறமையும், அதிகார தோரணையும் வேண்டும். ஆனால் மடத்திலே உள்ள மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லுவதற்கோ பரந்த அறிவும், தெளிவான நூலாராய்ச்சியும் வேண்டும். அதிகாரமும் படாடோபமும் அங்கே செல்லா. இதை நான் அன்று நன்றாகத் தெரிந்துகொண்டேன்" என்று சொன்னார்.

செட்டியார் உண்மையை உணர்ந்துகொண்டு அதை வெளிப்படையாகச் சொன்னதுபற்றி எனக்கு மிக்க சந்தோஷம் உண்டாயிற்று.

---

## 20. 'காலம் கெட்டுப்போச்சு'

ஒரு நாள் ஏதோ ஒரு காரியமாகத் திருவாவடுதுறையிலிருந்து கும்பகோணத்திற்குப் போனேன். பிள்ளையவர்கள் இல்லாத காலம் அது. வழக்கம்போலத் தியாகராச செட்டியாரை அப்போது பார்க்கும் பொருட்டுச் சென்றேன். இவர் இடைகழியில் சயனித்தபடியே ஏதோ ஒரு புத்தகத்தைப் பார்த்துக்கொண் டிருந்தார். அச்சமயம் மணி மூன்று இருக்கும். இவர் என்னைக் கண்டவுடன், "எப்போது வந்தீர்கள்? சௌக்கியமா?" என்பனபோன்ற கேள்விகளைக் கேளாமல் திடீரென்று, "காலம் கெட்டுப்போச்சு" என்றார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. 'நம்மைப்பற்றித்தான் ஏதாவது சொல்லப் போகிறாரோ! நம்மை அறியாமல் ஏதேனும் குற்றம்

செய்துவிட்டோமோ!' என்ற எண்ணம் எனக்கு உண்டா யிற்று. "ஐயா அவர்கள் இறந்துபோன பிறகு எங்கே பார்த்தாலும் வித்துவான்கள் கிளம்பிவிட்டார்கள். தங்க ளுக்குச் சமானம் ஒருவரும் இல்லையென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். புத்தகங்களைத் தப்புத் தப்பாக எழுதிவிடுகிறார்கள். நாலுபேர் பரிகசிப்பார்களே என்ற பயமில்லை" என்று இவர் சொல்லிக்கொண்டு வந்தார். நான் பின்னும் விஷயந் தெரியாத மயக்கத்திலே நின்று கொண்டிருந்தேன்.

செட்டியார் என்னை உட்காரச்சொல்லித் தம் கையி லிருந்த புத்தகத்தை என்னிடம் கொடுத்து, "இதைப் பாருங்கள். இது யாப்பிலக்கணம். மாணாக்கர்களுக்குச் சுலபமாக விளங்க வேண்டுமென்று ஒருவன் எழுதியிருக் கிறான். முதலில் படித்துப் பாருங்கள். செய்யுளுக்கு அங்கம் எட்டு என்று இருக்கிறது. யாப்பருங்கலக் காரி கையில் எழுத்து முதல் பாவினம் வரையில் எட்டு விஷயங் கள் சொல்லப்படுகின்றன அல்லவா? அதைப் பார்த்து எட்டு என்று தெரிந்துகொண்டான். ஆனால் எட்டும் செய்யுளுக்கு அங்கமாகுமா என்று யோசிக்கவில்லை. அந்த எட்டில் பா ஒன்று ஆயிற்றே; செய்யுளுக்குச் செய்யுள் அங்கமாகுமோ? ஆரம்பத்திலேயே இப்படி இருக்கும் போது போகப் போக எப்படி இருக்கிறதோ! காலம் சுத்த மாகக் கெட்டுப்போச்சென்று தெரியவில்லையா?" என்று கூறினார்.

"இதைப்பற்றி நாம் ஏன் கவலைப்படவேண்டும்?" என்று நான் மெல்லச் சொன்னேன்.

"என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? யாப்பருங்கலக் காரிகை பிள்ளைகளுக்கு விளங்காதென்றுதானே இதை எழுதினான்? இது பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு உப யோகமாகவேண்டும், தனக்குப் பேரும் பணமும் வர வேண்டுமென்பதுதானே இதை எழுதியவன் கருத்து?

இப்படித் தப்பாக இருந்தால் இதை நம்பிப் படிப்பவர்கள் எப்படி உருப்படுவார்கள்? அச்சிலே வந்துவிட்டால் அதைக் கௌரவமாக நினைக்கும் சாதுக்கள் உலகத்தில் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? நாளைக்கு யாராவது ஒருத்தன் வந்து, 'இதை உங்கள் பள்ளிக்கூடத்தில் உள்ள பிள்ளைகளை வாங்கிக்கொள்ளச் செய்யவேண்டும்' என்று தொந்தரவு செய்வான். அவன் தலையில் கிழித்துப்போட்டு, 'போய்விட்டு வா' என்று சொல்ல வேண்டுமென்பதுதான் என் கருத்து'' என்றார்.

---

## 21. பரீக்ஷகர் வேலையில் வெறுப்பு

கும்பகோணத்தில் ஒரு ஹைஸ்கூலில் தமிழ்ப் பண்டிதர் ஒருவரை நியமிக்கவேண்டியிருந்தது. பலர் அவ் வேலைக்கு விண்ணப்பம் செய்துகொண்டார்கள். பள்ளிக் கூட நிர்வாக சபையார் அவர்களையெல்லாம் பரீக்ஷை செய்வதற்காக மூவரை நியமித்தனர். தியாகராச செட்டியார், பி. ஏ. பட்டம் பெற்ற ஓர் ஆசிரியர், ஒரு ஸிவில் கோர்ட்டு வக்கீல் என்னும் மூவருமே அவர்கள். மற்ற இருவரும் செட்டியாரிடம் படித்தவர்கள். இந்த விஷயம் செட்டியாருக்குத் தெரிந்தபோது இவருக்குத் திருப்தி உண்டாக வில்லை; 'தமிழ்ப் பண்டிதருடைய தகுதியைப் பரிசோதிப் பதற்கு இவர்கள்பால் என்ன சக்தி இருக்கிறது?' என்று எண்ணினார். நிர்வாக சபையாரின் நிர்ப்பந்தத்தினால் பரீக்ஷகராக இருக்க உடன்பட்டார்.

பலர் விண்ணப்பம் அனுப்பியிருந்தனர்; செட்டியார் ஒரு பரீக்ஷகரென்று கேள்வியுற்றதும் அஞ்சி அவர்களிற் பலர் வாராமலே நின்றுவிட்டனர். கடைசியில் மூவர் நேரே வந்து சேர்ந்தனர். பரீக்ஷை ஆரம்பமாயிற்று. செட்டியாரும் மற்றவர்களும் வந்தவர்களைக் கேள்வி கள் கேட்டனர். மற்றவர்கள் தாங்களும் கேட்ட

தாகப் பேர் பண்ணினார்கள். வந்த மூவரில் இருவர் தகுதியில்லாதவரென்று விலக்கப்பட்டனர். மற்றொருவரும் தக்க விடை கூறவில்லை. பரீக்ஷகர்களுள் செட்டியாரைத் தவிர மற்ற இருவரும் அவரையே நியமித்துவிடலாமென்று சொன்னார்கள். "பிழையாக விடை அளித்தவரை எப்படி நியமிப்பது? இப்படிச் செய்வதாக இருந்தால் பரீக்ஷையென்று ஒன்று ஏன் வைக்கவேண்டும்? திருவுளச் சீட்டுப் போட்டு ஒரு மனிதரைத் தெரிந்தெடுத்து நியமித்துவிடலாமே!" என்று செட்டியார் கூறினார்.

"நீங்கள் கேட்டவை கடினமான கேள்விகள். இவருக்கு இருக்கும் அறிவு ஒரு பள்ளிக்கூடத்தில் பாடம் சொல்வதற்குப் போதுமானது. கடினமாக இராமல் கொஞ்சம் கருணை காட்டவேண்டும்" என்று மற்ற இருவரும் சொன்னார்கள்.

"நன்றாயிருக்கிறது உங்கள் கருணை! பள்ளிக்கூடத்தில் தமிழ்ப்பாடம் சொல்வதைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? நீங்கள் என்னிடம் தமிழ் வாசித்தவர்களல்லவா? உங்களுக்குத் தமிழில் எவ்வளவு பழக்கம் உண்டென்பது எனக்குத் தெரியாதா? இந்தச் சொற்ப அறிவை வைத்துக் கொண்டு தீர்மானம் செய்ய வந்துவிட்டீர்களே!" என்று வெறுப்போடு செட்டியார் கண்டிக்கத் தொடங்கினார்.

முடிவில் அந்த மனிதரையே பண்டிதராக நியமித்து விட்டார்கள். அதிகப்படியான 'வோட்'டின் பலத்தால் அவர் நியமனம் பெற்றார். இதைக் கண்டு செட்டியார், "என்ன பைத்தியக்கார உலகம் இது! படிப்பில்லாதவர்களெல்லாம் விதாய கர்த்தர்களாக வந்துவிடுகிறார்கள். நாலு பேர் சேர்ந்து கூச்சல் போட்டால் காரியம் ஜயித்துவிடுகிறது. படிப்புக்கு மதிப்பே இல்லை. சே! இனி இந்த மாதிரி பரீக்ஷகர் வேலையே நமக்கு வேண்டாம்" என்று தீர்மானம் செய்துகொண்டார்.

---

## 22. உரைநயம்

தியாகராச செட்டியாரோடு சம்பாஷணை செய்யும் போது பலவிதமான சுவைகளை அனுபவிக்கலாம். உலகத்தாருடைய பேதைமைச் செயலை இவர் எடுத்துச் சொல்லுகையில் கேட்போர் விழுந்து விழுந்து சிரிக்காமல் இருக்க முடியாது. செல்வச் செருக்கும் முற்றக் கல்லாத அறியாமையும் உள்ள பிறர் செய்யும் பிழைகளை இவர் கண்டித்துப் பேசும்போது வெகுளிச்சுவை வெளிப்படும். சில முக்கியமான சந்தர்ப்பங்களில் யாவருக்கும் அஞ்சாமல் இவர் தம் கருத்தை வெளிப்படுத்துவார்; அப்போது இவர் வார்த்தைகளில் வீரம் தோற்றும்.

இவர் பேச்சில் தமிழறிவின் நயம் புலப்படும். அக்கால வித்துவான்கள் பேசும்பொழுது சிலேடை அமையும்படி பேசுவதும் அதைக் கேட்பவர்கள் சந்தோஷிப்பதும் வழக்கம். இவரும் சமயோசிதமாகச் சிலேடை நயம் பொருந்தப் பேசுவார்.

ஒரு நாள் பிள்ளையவர்கள் இவர் வீட்டிற்கு வந்திருந்த போது அவருடைய தவசிப்பிள்ளை பூஜைக்கு வேண்டியவற்றை ஏற்பாடு செய்துகொண்டிருந்தான். அவன் செட்டியாரிடம் வந்து, "பூசைக்குப் பால் வேண்டும்" என்று சொல்ல இவர், "ஆமாம், பூசைக்குப் பால் வேண்டுவதுதான்" என்றார். (பூசை - பூனை.)

ஒருவர் தாம் இயற்றிய குஞ்சரம் என்னும் புத்தகத்தைச் செட்டியாரிடம் கொடுத்து அதைப் பார்த்து அபிப்பிராயம் சொல்லவேண்டுமென்று வேண்டினார். சில நாள் கழித்து அவர் மீண்டும் வந்து, "புத்தகத்தைப் பார்வையிட்டீர்களா? தங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார். இவர், "புத்தகத்தை அபூர்வ குஞ்சரமென்று சொல்லவேண்டும்" என்று சொல்லவே நூலை எழுதியவர் மிக்க சந்தோஷத்தை அடைந்து சென்றார். அந்தப்

புத்தகம் பிழைகள் மலிந்ததென்று செட்டியார் முன்பு சொல்லிக்கொண் டிருந்ததைக் கேட்ட சிலர் அப்பொழுது இவர் சொல்லியதைக் கேட்டு, 'என்ன இது! செட்டியார் இப்படி முன்னுக்குப்பின் முரண்பாடாகச் சொல்லுகிறாரே; இது நன்றாயில்லையென்று நம்மிடம் சொல்லிவிட்டு அவரிடம் அபூர்வமாக இருக்கிறதென்று சொல்லுகிறாரே' என்று எண்ணினர். பிறகு செட்டியாரிடம் கேட்டபோது இவர், "நான் இப்பொழுது மட்டும் இது நல்ல புத்தகம் என்று சொல்லிவிட்டேனா என்ன? ஒரு காலும் இது நல்ல புத்தகம் ஆகாது. நான் சொன்னதை நீங்கள் சரியாகக் கவனிக்கவில்லைபோல் இருக்கிறது" என்றார்.

சந்தேகமடைந்தவர்களுக்குப் பின்னும் ஆச்சரியமே உண்டாயிற்று; 'பொய் வேறு சொல்லுகிறாரே' என்று கருதி, "நீங்கள் புத்தகம் அபூர்வமாக இருக்கிறதென்று சொல்லவில்லையா?" என்று கேட்டார்கள்.

"அப்படி நான் சொல்லவில்லையே; இதை அபூர்வ குணாகரமென்று சொல்லவேண்டும் என்றல்லவா சொன்னேன்?"

"அப்படிச் சொல்லலாமா?"

"என் கருத்தை நீங்கள் தெரிந்துகொள்ளாமல் பேசுகிறீர்கள். அ என்னும் எழுத்தைப் பூர்வத்தில் (முன்னே) உடைய குணாகரமென்பதே நான் கருதியது. அகுணாகரம் அல்லது குணமற்றவைகளுக்கு இருப்பிடமென்று சொல்ல வேண்டியதை நான் மறைத்துச் சொன்னேன். இதை அவரும் உணர்ந்து கொள்ளவில்லை; நீங்களும் தெரிந்து கொள்ளவில்லையே."

கேட்டவர்கள் செட்டியாருடைய சாதுரியத்தை வியந்தனர்.

மற்றொரு நாள் நானும் வேறு சிலரும் செட்டியாரோடு பேசிக்கொண் டிருந்தோம். அப்பொழுது ஒரு

பெரிய செல்வர் இவரைப் பார்க்க வந்தார். அவர் பார்த்துப் பேசிக்கொண் டிருந்தபோது, செட்டியார் அவரை எங்களுக்குப் பழக்கம் செய்வித்துவிட்டு, "இவர்களுக்கு லக்ஷ்மீகடாக்ஷம் நன்முக அமைந்திருக்கிறது. சமுத்திரம் போன்ற செல்வமுடையவர்கள் இவர்கள்" என்ருர். அந்தக் கனவான் அது கேட்டு உள்ளுக்குள்ளே பொங்கும் மகிழ்ச்சியைத் தம் புன்னகை வெளிப்படுத்த, "அப்படியெல்லாம் ஒன்றும் பிரமாதமாக இல்லை. ஏதோ சாமான்யமாக உண்டு" என்று சொல்லித் தம்முடைய அடக்கத்தைப் புலப்படுத்திக்கொண்டார்.

செட்டியார், "இலக்கணத்தில் மேற்கோளாக வரும் 'உவர்க்கட லன்ன செல்வரும் உளரே' என்பதற்கு இவர்கள் இலக்கியம். இவர்களை நினைத்துத்தான் அவர்கள் பாடினர்களோ என்றுகூடத் தோற்றுகிறது" என்று மேலும் விளக்கிச் சொன்னர்.

செட்டியாருடைய குறிப்பை நாங்கள் அறிந்து கொண்டோம்; உள்ளே கிளுகிளுத்தோம். ஆனல் அவரோ தம்மைச் செட்டியார் புகழ்வதாகவே எண்ணி மகிழ்ந்தார்.

'கடல் பெரிதாக இருந்தாலும் அதன் உப்பு நீர் மக்கள் பருகப் பயன்படாததுபோல அளவற்ற செல்வமுடையவராக இருந்தாலும் பிறருக்குப் பயன்படாமல் வைத்திருக்கும் செல்வர்களும் உலகத்தில் இருக்கிருர்கள்' என்பது செட்டியார் சொன்ன வாக்கியத்துக்கு அர்த்தம். கனவான் அதன் பொருள் முழுவதையும் உணரும் சக்தியில்லாதவர்; தம் செல்வப்பெருமையைச் செட்டியார் பாராட்டுவதாகவே எண்ணினர்.

அந்தப் பிரபு பேசிவிட்டுச் சென்ற பின்பு நாங்கள் செட்டியாரைப் பார்த்து, "இவரை என்ன இப்படி மறைமுகமாகத் தூஷித்தீர்களே?" என்று கேட்டோம்.

"விஷயம் உங்களுக்கெல்லாம் தெரியவேண்டுமென்று தான் சொன்னேன். பரம்பரையாக உள்ள சொத்துப் போதாதென்று இவர் சேர்த்து வருகிறார். ஒரு காசுகூடத் தர்மம் செய்வதில்லை. தாமாவது வேண்டியதை வாங்கி அனுபவிக்கிறாரா என்றால் அதுவும் இல்லை" என்று இவர் சொன்னார்.

"அப்படி இவர் செய்கிறாரென்று எப்படித் தெரியும்?"

"இவர் ஒற்றைமாட்டு வண்டியொன்று வைத்திருக் கிறார். அதை இவரே ஓட்டுவார். அதில் ஏறிக்கொண்டு இவர் ஒருநாள் வீதிவழியே போனார். அப்போது எதிரே ஒருத்தி முள்ளங்கிக் கிழங்கு விற்றுக்கொண்டு வந்தாள். அவளிடம் ஒரு கொத்து விலைக்கு வாங்கின ஒரு பெண்மணி இலைக்கொத்தை முறித்து எறிந்துவிட்டுக் கிழங்கை மாத் திரம் எடுத்துக்கொண்டு போனாள். வண்டியிலே போய்க் கொண்டிருந்த அந்தப் பரம லுப்தசிகாமணி திடீரென்று கீழே குதித்தார். அந்தத் தழையைத் தின்னவந்த ஓர் ஆட்டை அடித்து ஓட்டிவிட்டு லபக்கென்று அதை எடுத் துத் தம் வண்டிப் பெட்டியில் வைத்து மூடி அதன் மேல் உட்கார்ந்தார்.

"இவர் அப்படி முள்ளங்கித் தழையைப் பெட்டிக்குள் வைத்துக்கொண் டிருந்தபோது நான் பார்க்க நேர்ந்தது. அப்போது ஏதோ காரியமாக அந்தப் பக்கம் நான் போய்க்கொண் டிருந்தேன். இவரைக் கண்டவுடன் நின்று, "சௌக்கியமா? இந்தத் தழை ஏதாவது மருந்துக்கு வேண்டுமோ?" என்று கேட்டேன்.

"'மருந்தா! இதைப் பிண்ணாக்குடன் சேர்த்துச் சமைத் தால் எவ்வளவு நன்றாக இருக்கும் தெரியுமா? யாரோ பைத்தியக்காரி இதன் அருமை தெரியாமல் ஒடித்தெறிந்து விட்டுப்போனாள். என் கண்ணில் பட்டது. நானா விடுபவன்?' என்று சொல்லி இவர் வேகமாகத் தம் வண்டியை ஓட்டத் தொடங்கினார். அந்தத் தழையில் நானும் பங்குக்கு வந்து

விடுவேனே என்ற பயத்தால்தான் அவ்வளவு வேகமாகப் போய்விட்டாரோ என்னவோ!"

இதைக் கேட்டு நாங்கள் எப்படிச் சிரிக்காமல் இருக்க முடியும்?

காலேஜில் பாடம் சொல்லும்போது மாணுக்கர்களுடைய உள்ளத்தை வசீகரிக்கும் முறையில் விஷயத்தை விளக்குவார். 'புத்தகம் இருக்கிறது; உரை இருக்கிறது; பார்த்துக்கொள்ளலாம்' என்று எண்ணும் மாணுக்கர்கள் இவர் அவ்வப்போது ரஸமாகச் சொல்லும் விஷயங்களை இழக்க வேண்டியவரே ஆவர்.

மாணுக்கர்களுக்குச் செய்யுட்களைக் கற்பிப்பது சிரமம்; இலக்கணத்தை அறிவுறுத்துவது அதைக் காட்டிலும் சிரமம். செட்டியார் தம்முடைய பேச்சு நயத்தால் இலக்கணத்தையும் கதை சொல்வது போலச் சொல்லிப் பிள்ளைகளின் புத்தியில் ஏற்றிவிடுவார். இலக்கண விதிகளுக்கு உதாரணம் கூறும்போது புதிய புதிய உதாரணங்களை எடுத்துச் சொல்வார். தமிழ் இலக்கணப் புத்தகங்களில் இவ்விஷயத்தில் ஒரு பெருங் குறை இருக்கிறது. தொல்காப்பிய உரையில் இளம்பூரணர் ஒரு விஷயத்திற்கு எந்த உதாரணத்தைக் காட்டுகிருரோ பெரும்பாலும் அதே உதாரணத்தைப் பின்வந்த இலக்கண நூல் உரையாசிரியர்களும் எடுத்துக் காட்டுகிருர்கள். கொற்றன், சாத்தன், தேவன், பூதன் என்று தலைமுறை தலைமுறையாக உதாரணம் காட்டுவார்கள். அங்கே உள்ள இலக்கணத்துக்குப் பொருந்திய உதாரணங்களை அவ்வக்கால வழக்கிலிருந்து நூதனமாக எடுத்துக் காட்டுவதில்லை. பிற்காலத்தில் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்காக இலக்கணங்களை எழுதினவர்களும் புதிய உதாரணங்களைக் கண்டுபிடித்து அமைக்கும் சிரமத்துக்குப் பயந்துகொண்டு பாசி பிடித்துப்போன பழைய வார்த்தைகளையே காட்டினுர்கள். முதலில் ஒருவர் காட்

டிய உதாரணத்தில் சந்தேகம் இருந்தால் வேறு உதாரணம் காட்டும்போது தெளிய வழி உண்டு. ஒன்றையே காட்டிவருவதால் அந்தச் சந்தேகம் என்றைக்கும் சந்தேகமாகவே இருந்துவிடுகிறது.

இந்தச் சங்கடத்தை அநுபவத்தால் உணர்ந்த செட்டியார் இலக்கணப் பாடம் நடத்தும்போது புதிய புதிய உதாரணங்களைச் சொல்லி விளக்குவார்; கதை கதையாகச் சொல்லிப் புலப்படுத்துவார்.

மரூஉமொழிக்கு உதாரணமாக 'அருமந்த' என்ற வார்த்தையை எல்லா இலக்கணப் புத்தகங்களிலும் காணலாம். செட்டியார் அந்தப் பழைய உதாரணத்தைக் கவனிக்கமாட்டார். கதை சொல்லத் தொடங்குவார்: "எங்கள் ஊரில் எங்கள் பந்துக்களில் ஒருவர் இருக்கிறார். அவரை விராட்டி என்று நாங்கள் அழைப்பது வழக்கம். ஏன் தெரியுமோ?" என்று செட்டியார் ஒரு கேள்வியைப் போடுவார்.

"விராட்டி விற்பவராக இருக்கலாம்" என்று ஒரு மாணாக்கன் சொல்லுவான்.

"இல்லை" என்று செட்டியார் மறுப்பார். எல்லோரும் யோசிப்பார்கள்.

"அவர் பெயர் வீரராகவசெட்டி என்பது. அது தான் விராட்டியாகிவிட்டது" என்று செட்டியார் விளக்குவார்; வகுப்பு மாணாக்கர் அனைவரும் கொல்லென்று சிரிப்பார்கள்.

"வீரராகவசெட்டி என்பது விராட்டி என்று வந்து விட்டதல்லவா? அதுதான் மரூஉமொழி. பூவராகனென்பதைப் பூரானென்றும், மகாலிங்கமென்பதை மாஞ்சு என்றும், தர்மராஜ பிள்ளையைத் தம்பாச்சியாப் பிள்ளை என்றும், குலோத்துங்க சோழனிருப்பு என்பதைக் குளத்துக்கிருப்பு என்றும் சொல்வனவெல்லாம் மரூஉமொழிகளே."

இப்படிச் சிரிப்பு மூட்டி இலக்கணத்தைப் போதிப்பதில் செட்டியாருக்கு இணை செட்டியாரே.

ஆகுபெயர்களுக்கு எவ்வளவோ உதாரணங்களைப் பழைய உரையாசிரியர்களும் புதிய புத்தக ஆசிரியர்களும் காட்டியிருக்கிறார்கள். செட்டியார் சொல்வனவோ புது முறையில் அமைந்திருக்கும். ஆகுபெயர்களில் இட ஆகு பெயரென்பது ஒன்று; தானி ஆகுபெயர் என்பது மற்றொன்று. இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று நேர் மாறானவை. ஓர் இடத்திலுள்ள பொருளை அந்த இடத்தால் குறிப்பது இடவாகுபெயர். 'உலகம் சொல்லுகிறது' என்றால் உலகத்தில் இருக்கும் ஜனங்கள் சொல்லுவதாக அர்த்தம் செய்துகொள்ளுகிறோம். உலகமென்னும் இடத்தின் பெயர் அந்த இடத்திலுள்ளவர்களாகிய ஜனங்களுக்கு ஆயிற்று. இதுதான் இடவாகுபெயர். இது பேசும்பொழுதும் எழுதும்பொழுதும் மிகுதியாக வருகிறது. ஓர் இடத்திலுள்ள பொருளின் பெயரால் அந்த இடத்தையே குறிப்பது தானியாகு பெயராகும். இலக்கண உரைகளில் 'விளக்கு முறிந்தது' என்று இதற்கு உதாரணம் காட்டியிருக்கிறார்கள். விளக்கு உள்ள தண்டு முறிந்த தென்பது அதன் பொருள். ஒரு ஸ்தானத்தில் உள்ள பொருளைத் தானியென்பர். அந்தத் தானியின் பெயரால் ஸ்தானத்தையே குறிப்பதனால் இதற்குத் தானியாகு பெயரென்ற பெயர் வந்தது. 'விளக்கு முறிந்தது' என்ற உதாரணத்தைத் தவிர வேறு உதாரணம் பெரும்பாலும் யாரும் காட்டுவதில்லை. அந்த உதாரணமும் விளக்கமாக இல்லை. செட்டியார் தானியாகுபெயரை மிக வேடிக்கையான உதாரணம் காட்டி விளக்குவார்.

"நான் வீதிவழியே போய்க்கொண்டிருந்தேன். என் பின்னாலிருந்து, 'ஏ உலக்கை!' என்று ஒரு தொனி கேட்டது. என்னை யாரப்பா வைகிறாரென்று திரும்பிப் பார்த்தேன். நல்லவேளை! நான் தப்பினேன். ஒருவரும்

என்னை வையவில்லை; வேறு யாரையுமே வையவில்லை. என் பின்னுல் உலக்கை விற்பவன் ஒருவன் வந்தான்; அவனிடம் உலக்கையை வாங்க விரும்பிய ஒரு கிழவி அவனை, 'ஏ உலக்கை' என்று அழைத்தாள். அவனை அவள் வைதாளா? இல்லை. சாதாரணமாகத்தான் அழைத்தாள். அவன் பெயர் உலக்கை என்பதா? அதுவும் இல்லை. அவன் உலக்கை விற்ருன். அதை நினைத்துக் கொண்டு அப்படிக் கூப்பிட்டாள். உலக்கை என்னும் பொருள் அவனிடம் இருந்தது. அவன் உலக்கை இருக்கும் ஸ்தானம். உலக்கை தானி. அந்த ஸ்தானத்தையே தானியின் பெயரால் கிழவி அழைத்தாள். அதுதான் தானியாகு பெயர்" என்று செட்டியார் சொல்லும்போது மாணுக்கர்களுடைய கவனம் வேறிடத்தில் போக நியாயம் ஏது? " 'ஏ, உலக்கை' என்ற தொனி கேட்டது" என்று செட்டியார் சொல்லும்போது மாணுக்கர்களுக்கு அப்படிச் சொன்னவர்மேல் கோபமும், உலக்கை விற்றவனைக் கூப்பிட்டாளென்று அறிந்தபோது சிரிப்பும், இலக்கணத்தை விளக்கப் புகும்போது எப்படி முடிக்கப்போகிருரென்ற ஆவலும் மாறி மாறி உண்டாயிருக்குமல்லவா?

---

## 23. மாணுக்கர்கள்

செட்டியாரிடம் காலேஜில் படித்த மாணுக்கர்களில் பலர் பிற்காலத்தில் மிகச் சிறந்த பதவியில் இருந்து விளங்கினுர்கள். அப்படி விளங்கும் காலத்திலும் அவர்கள் செட்டியாரிடம் படித்த விஷயத்தைப் பெருமையாகச் சொல்லிக்கொள்வார்கள். "கோபாலராவ் எங்களுக்கு இங்கிலீஷ் பாடம் கற்பித்தார்" என்பதை எவ்வளவு கௌரவமாகச் சொல்லிப் பாராட்டுவார்களோ அதே கௌரவத்தோடு, "செட்டியாரிடம் நாங்கள் தமிழ்

படித்தவர்கள்" என்று சொல்லுவார்கள். இன்னம்பர் ஸ்ரீநிவாஸராகவையங்கார், ஆர். வி. ஸ்ரீநிவாஸையர், ஹநுமந்தராவ், ஜட்ஜ் சதாசிவ ஐயர் முதலிய பெரியோர்கள் இவர் பாடம் சொல்லும் சிறப்பைக் கூறி மகிழ்வதை நான் கேட்டிருக்கிறேன். "இன்ன பாடலுக்குச் செட்டியாரவர்கள் இப்படி அர்த்தம் சொல்வார்கள், இன்ன பதத்துக்கு இப்படி அர்த்தம் சொல்லுவார்கள்" என்று குறிப்பிட்டு அப்படிச் சொன்ன நயத்தை அவர்கள் பாராட்டுவார்கள்.

தஞ்சையில் வக்கீலாக இருந்துவந்த கே. எஸ். ஸ்ரீநிவாஸ பிள்ளையென்பவர் கும்பகோணம் காலேஜில் வாசித்தார். செட்டியாரிடம் வகுப்பில் தமிழ்ப் பாடம் கேட்டதோடு இவர் வீட்டிற்கும் சென்று திருவிளையாடற் புராணம், பிரபுலிங்கலீலை, பண்டார மும்மணிக்கோவை முதலிய நூல்களைத் தனியே கேட்டார். அதனால் செட்டியாரிடத்தில் அவருக்கு அளவற்ற பற்று உண்டாயிற்று. அவர் பிற்காலத்தில், "தமிழ் வரலாறு" என்னும் புத்தகத்தை எழுதி வெளியிட்டார். தமிழ்மொழியின் சரித்திரத்தையும் தமிழ் நூல்கள் வரவர விருத்தியடைந்ததையும் விரிவாக அப்புத்தகத்தில் விளக்கியிருக்கிறார். அவருக்குள்ள தமிழன்பையும் ஆராய்ச்சித் திறத்தையும் அந் நூல் புலப்படுத்தும். அதனை அவர் தியாகராச செட்டியாருக்கு அர்ப்பணம் செய்தார். இவரிடத்துத் தமிழ் நூல்களைப் படித்ததனால்தான் தமக்குத் தமிழில் ஊக்கமுண்டாயிற்றென்று அவர் அடிக்கடி சொல்வதுண்டு. அவரைப் போலவே காலேஜில் பாடம் கேட்டதோடு காலை மாலைகளில் வீட்டிற்கும் வந்து பிரபந்தங்களையும் வேறு தமிழ் நூல்களையும் கேட்டவர்கள் பலர்.

காலேஜ் மாணாக்கர்களையன்றி வேறு சிலர் செட்டியாரிடம் முறையாக வீட்டில் இலக்கண இலக்கியங்களைக் கேட்டு வந்தனர். அவர்களிடம் செட்டியாருக்கு மிக்க

அன்பு இருந்தது. இவருக்குக் குழந்தைகளே இல்லாமை யால் புதல்வர்கள்பால் வைத்தற்குரிய அன்பை அம்மாணுக் கர்களிடம் காட்டி வந்தார்.

தெய்வநாயகம் பிள்ளையென்பவர் இவ்வாறு பாடம் கேட்டவர்களுள் ஒருவர். அவரை இவர் திரிசிரபுரத்தில் இருந்தபோது இலக்கண இலக்கியங்களில் மிகத் தேர்ந்த அறிவுடையவராகச் செய்தார். செய்யுள் இயற்றும் பழக்கமும் அவருக்கு அமைந்திருந்தது. யாரேனும் புதிய நூலைப் பதிப்பித்தால் செட்டியாரது சிறப்புப்பாயிரம் வேண்டுமென்று விரும்புவார். அப்பொழுது செட்டியார் தாம் சிறப்புப்பாயிரம் இயற்றி அளிப்பதோடு தெய்வ நாயகம் பிள்ளையையும் சிறப்புப்பாயிரம் இயற்றச்செய்து அதனையும் சேர்த்து அனுப்புவார். அக்காலத்தில் வெளி வந்த சில சிறந்த தமிழ்நூற் பதிப்புக்களில் செட்டியா ருடைய சிறப்புப்பாயிரத்தோடு தெய்வநாயகம் பிள்ளை யின் சிறப்புப்பாயிரமும் இருத்தலைக் காணலாம். அவர் இளம் பிராயத்தில் காலமானுர். அதனுல் செட்டி யார் அடைந்த வருத்தம் மிக அதிகம். பிற்காலத்தில் அடிக்கடி செட்டியார் அவருடைய அறிவாற்றல்களையும் குணங்களையும் பாராட்டிப் பேசுவார்; "அவர் உயிரோடு இருந்திருந்தால் என் வேலையை அவருக்கே செய்து வைத்திருப்பேன்" என்று என்னிடம் சொன்னதுண்டு.

கும்பகோணத்தில் தீண்டாத சாதியினராகிய ஒரு பரதேசி இருந்தார். அவர் சாந்தமும் அடக்கமும் உடைய வர்; காஷாயதாரி. அத்வைத சாஸ்திரங்களிலும் தமிழ் நூல்களிலும் பயிற்சியுள்ளவர். அவரது சிவவேடப் பொலிவு பார்ப்பவர்களுடைய கண்களைக் கவரும். அவர் தமிழ்நூல்களில் தமக்கு உண்டாகும் சந்தேகங்களைத் தெரிவித்துக்கொள்ள வேண்டுமானுல் செட்டியார் வீட்டிற்கு வந்து புறம்பே நிற்பார். அங்ஙனம் அவர் வந்திருப்பது தெரிந்தால் செட்டியார் தமக்கு என்ன

வேலையிருந்தாலும் அப்படியே நிறுத்திவிட்டுச் சென்று அவரைக் கண்டு அவர் கேட்கும் வினாக்களுக்குத் தக்க விடைகளைச் சொல்லிப் பாராட்டியனுப்புவார்.

தாயுமானவர் மடத்தில் அதிபதியாக இருந்த சபாபதித்தாயுமானசாமியார் என்னும் துறவி ஒருவர் தியாகராச செட்டியாரிடம் பாடம் கேட்டார். அவர் பன்னிரண்டு வருஷம் ஆலங்குடியிலிருந்து அவ்வூர்க் கோயிலிற் சில திருப்பணிகள் செய்தனர். அவர் குமரகுருபர சுவாமிகள் இயற்றிய சிதம்பரச் செய்யுட் கோவையைத் தனியே பதிப்பித்திருக்கிறார்.

திருவாரூர்ப் புராணத்தைப் பதிப்பித்தவரும் சந்தான குரவர் புராணம் என்னும் நூலை இயற்றி வெளியிட்டவரும் நல்ல தமிழ் வித்துவானுமாகிய சாமிநாத தேசிகரென்னும் அபிஷிக்தர் செட்டியாரிடம் பாடம் கேட்டவர். திருவாரூரிலிருந்து திரிசிரபுரத்தில் வந்திருந்து பாடம் கேட்டுவந்தார்.

தம்மிடம் படித்த மாணாக்கர்களுக்குத் தக்க உத்தியோகம் கிடைக்கவேண்டும் என்பதில் செட்டியாருக்குக் கவலை அதிகம். தமக்குத் தெரிந்த பெரிய மனிதர்களிடம் சொல்லியும் கடிதங்கள் எழுதியும் தம் கருத்தை நிறைவேற்றிக்கொள்வார். இத்தகைய இயல்புகளால் இவரிடம் படித்த மாணாக்கர்கள் இவரைத் தம் வாழ்நாள் முழுவதும் மறவாமல் வாழ்த்தி வந்தார்கள்.

---

## 24. தமிழ்ச் சுவை நுகர்தல்

தியாகராச செட்டியார் கோபமாகப் பேசினாலும், சந்தோஷமாகப் பேசினாலும், பரிகாசமாகப் பேசினாலும் இடையே தமிழ்ப் பாடல்களையோ தமிழ் நூல்களில் வரும் தொடர்களையோ சொல்லுவார். பிள்ளையவர்களி

டத்தில் இவர் பாடம் கேட்ட நூல்களையெல்லாம் நன்ருகவே சிந்தித்து வைத்திருந்தார். மேலும் மேலும் பல நூல்களைப் படிப்பதற்கு இவருக்கு நேரம் பற்ருவிடினும் படித்த நூல்களை மறவாமல் அவற்றைப் பாடம் சொல்லியும் தாமே படித்து அனுபவித்தும் வந்தார்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளுடைய வாக்கில் இவருக்கு ஈடுபாடு அதிகம். அவர் இயற்றிய பிரபந்தங்களைச் சிலருக்குப் பாடம் சொன்னுர். பிரபுலிங்க லீலையைச் சிலருக்குச் சொன்னுர். அந்நூலில் நாடு, நகரம், மலை முதலியவற்றைச் சுவாமிகள் வருணிக்கும் இடங்களில் இரண்டு மூன்று பாடல்களே இருக்கும். அவற்றைப் படிக்கையில், 'இப்படியே இன்னும் பல பாடல்கள் சொல்லியிருக்கக் கூடாதா?' என்று தோற்றும். ஒரு நாள் இந்த விஷயத்தைப்பற்றி நாங்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்தோம். செட்டியார், "சுவாமிகளை நான் காண முடிந்தால், 'ஸ்வாமி, என்ன அநியாயம் செய்து விட்டீர்கள்? வருணனைகளை ஆரம்பித்த நீங்கள் மிகவும் அழகான இரண்டு மூன்று பாடல்களைப் பாடி ருசி காட்டி விட்டு மேலே என்ன வருகிறதென்று ஆவலோடு எதிர் பார்க்கும்போது நிறுத்திவிட்டீர்களே. பசியுள்ள ஒருவனுக்குக் கால் வயிறு ஆகாரம் மட்டும் அளித்து நிறுத்துவது போலல்லவோ இருக்கிறது இது!' என்று கேட்பேன்" என்ருர்.

சிவஞான சுவாமிகள் இயற்றிய நூல்களைப் படித்துச் சுவை காண்பார். செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழென்பது சுவாமிகள் இயற்றிய பிரபந்தங்களுள் ஒன்று. பிள்ளைத் தமிழ்களில் ஒவ்வொரு பருவத்துக்கும் பத்துப் பத்துச் செய்யுட்கள் அமைப்பது புலவர் வழக்கம். சுவாமிகளோ ஒவ்வொன்றுக்கும் ஐந்து ஐந்து பாடல்களே அமைத்திருக்கிருர். இந்த வித்தியாசத்தைப்பற்றி மாணுக்கர்கள் ஆக்ஷேபிப்பார்கள்; "மகாகவிகள் எதைச் செய்து

வழி காட்டுகிறார்களோ அதுவே இலக்கணமாகிவிடும். பழைய விதியை மீறிச் சென்று புது விதியை அமைக்கும் அதிகாரம் அவர்களுக்கு உண்டு. பிள்ளைத்தமிழில் பருவத்திற்கு ஐந்து பாடல்கள் சுவாமிகள் பாடியிருக்கிறார்களென்றால் அது மாறாகாது. அதுவும் ஒருவகை என்று கொள்ளவேண்டும்'' என்று சமாதானம் சொல்வார். அன்றியும், ''ஆனால் சுவாமிகள் செய்தது ஒரு விதத்தில் எனக்கு அதிருப்தியே. பழைய சம்பிரதாயத்தை மீறி ஒரு காரியம் செய்யத் துணிந்த அவர்கள் இப்படி ஏன் செய்ய வேண்டும்? செய்யுள் இயற்றுவது அவர்களுக்குப் பஞ்சமா? பத்துச் செய்யுளாக இருக்க வேண்டாமென்பது திருவுள்ளமாக இருந்தால் ஐந்தாகக் குறைக்கவா வேண்டும்? பதினைந்தாகப் பாடலாமே! இருபது இருபதாகப் பாடினால் வேண்டாமென்று சொல்பவர் யார்? அப்படிப் பாடியிருந்தால் நாமெல்லாம் எவ்வளவு நன்றாக அவற்றின் சுவையை உணர்ந்து இன்புறலாம்!'' என்று சொல்லி அம்முனிவர் வாக்கில் தமக்குள்ள இன்ப நுகர்ச்சியை வெளிப்படுத்துவார்.

எந்தத் தமிழ்ப் பாடலானாலும் மெல்லப் படித்துப் பொருள் செய்து ஆழ்ந்து சிந்தித்து இன்புற வேண்டுமென்பது இவர் கொள்கை. யாரேனும் பாடல் சொல்லிப் பொருள் சொல்லத் தொடங்கினால், ''பாடலைவிட நீர் சொல்லுகிற அர்த்தம் இனிமையாக இருக்குமானால் சொல்லும்; இல்லாவிடின் நிறுத்தும். வீண் பேச்சுக்களைப் பேசிப் பாடலின் இனிமையைக் கெடுக்கவேண்டாம்'' என்பார். எந்த விஷயத்தைப் படித்தாலும் அது தெளிவாக விளங்கும்படி படிக்கவேண்டுமென்று சொல்வார். வார்த்தைகளை மென்று விழுங்கிப் படிப்பவர்களைக் கண்டால் இவருக்குக் கோபம் உண்டாகும்.

கம்பராமாயணப் பாடல்கள் பல இவருக்கு மனப்பாடம் உண்டு. சந்தர்ப்பம் நேரும்போதெல்லாம்

அவற்றை உடன் இருப்பவர்களிடம் சொல்லிக்காட்டி வியந்து பேசுவார். தேவார திருவாசகங்களிலும் திருக்கோவையாரிலும் இவருக்கு விருப்பம் மிகுதி. திருக்கோவையார் முற்றும் இவர் ஞாபகத்தில் இருந்தது.

---

## 25. சிவபக்தியும் குருபக்தியும்

சிவபக்தியும் சைவசமயத்தில் அழுத்தமான அன்புமுடையவர் செட்டியார். ஸ்ரீ நடராஜப் பெருமானிடத்தில் இடையறாத பக்தியுடையவராக இருந்தார். சிவத் துவேஷமுடையவர்களைக் கண்டால் கண்டித்துப் பேசுவார். நூல்களில் எங்கேனும் சிவதூஷணை வந்தால் காதைப் பொத்திக்கொள்வார். அடிக்கடி சிவநாமங்களைச் சொல்வார்.

செட்டியார் திருவாவடுதுறையில் 15-ஆம் பட்டத்தில் ஞானாசிரியராக இருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிகரிடத்தில் தீக்ஷை முதலியன பெற்றுக்கொண்டார். ஆதலால் அடிக்கடி 'அம்பலவாணா' என்று சொல்லுவார். கலாசாலையில் பாடம் சொல்வதன் பொருட்டு வகுப்புக்கு வந்து அமரும்பொழுதும் எழும்பொழுதும் தம் குருவின் திருநாமத்தையும், 'பிரணதார்த்திஹரா, பஞ்சாபகேசா, பரமசிவம், சதாசிவம்' என்பன போன்ற சிவநாமங்களையும் சொல்லுவார். அவற்றைத் தம் பெயராக உடைய மாணாக்கர்கள், "ஏன்?" என்று கேட்பார்கள். செட்டியார் புன்முறுவல் செய்வார். செட்டியாரிடம் படித்தவர்களிற் பலர் இந்த நிகழ்ச்சியைச் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

தமக்கு ஆசாரிய பீடமாகவுள்ள திருவாவடுதுறை மடத்தில் இவருக்குப் பற்று மிகுதி. 16-ஆம் பட்டத்தில் ஆசிரியராக இருந்த சுப்பிரமணிய தேசிகருடைய பெருமையை நன்கு உணர்ந்தவர் இவர். கும்பகோணத்தில்

முதல் முதலாகச் சம்பளம் உயர்ந்தபோது முதற் சம்பளத்தில் அதிகமாகக் கிடைத்த தொகையைக் கொண்டு திருவாவடுதுறை மடாலயத்திலுள்ள திருமாளிகைத் தேவருக்கு அபிஷேகம் செய்வித்தார்; வேறு ஏதேனும் பிரார்த்தனை செய்துகொண்டு நிறைவேறியபோது 1008 தேங்காய் உடைப்பது இவர் வழக்கம்.

ஆதீனத் தலைவருக்கும் மடத்தைச் சார்ந்தவர்களுக்கும் இவரிடம் நல்ல மதிப்பு இருந்தது. இவரை யாவரும் செட்டியாரென்றே வழங்குவார்கள். தமிழ்ச் சம்பந்தமான எந்த விஷயமானாலும் செட்டியாருக்குத் தெரிவிக்க வேண்டுமென்று சுப்பிரமணிய தேசிகர் கூறுவார். ஆதீன சம்பந்தமாகச் செய்யுள் இயற்றி அவற்றை யாரேனும் அரங்கேற்றினால் அப்போது செட்டியாரை வருவிப்பார்கள். புத்தகங்கள் வெளியாகும்போது செட்டியாரது சிறப்புப்பாயிரம் வாங்கி அமைப்பார்கள்.

---

## 26. புலிக்குட்டிக்கு உதவியது

திருவாவடுதுறை மடத்துக்கு வந்து இளமையிலேயே துறவு பூண்ட தம்பிரான்கள் பலருள் இராமலிங்கத் தம்பிரானென்பவர் ஒருவர்; ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் தமிழ் நூல்கள் பாடம் கேட்டவர். அவர் தம் சகபாடிகளை வேடிக்கைக்காக, தூங்கும்பொழுதும் பிற சமயங்களிலும் தெரியாமல் அழுத்தமாகக் கிள்ளி விடுவது வழக்கம். அதற்கு அநுகூலமாக நகத்தை வளர்த்துக்கொண்டிருப்பார். அதனால் மாணாக்கர்களும் தம்பிரான்களும் அவருக்குப் புலிக்குட்டி என்ற பெயரை வைத்து வழங்கலாயினர். நாளடைவில் அவர் இயற்பெயரைக் காட்டிலும் புலிக்குட்டித் தம்பிரானென்ற பெயரே அதிகமாக வழங்கி வந்தது.

அவர் இலக்கண இலக்கியங்களிலும் செய்யுள் இயற்றுவதிலும் பயிற்சியுள்ளவர். மடத்திற்கு வரும் வித்துவான்கள் அவருடைய செய்யுட்களைக் கேட்டு நல்ல பாடல்களென்று பாராட்டுவார்கள். எனக்கும் சக பாடியாதலின் என்பால் மிக்க அன்புடையவராகிப் பழகிவந்தார். பிற்காலத்தில் வாட்போக்கிப் புராணத்தில் ஒரு பகுதியை அவர் செய்யுளாக இயற்றியிருக்கிறார்.

புலிக்குட்டித் தம்பிரான் சில சமயங்களில் பெரியோர்களிடம் அபசாரம் உண்டாகும்படி நடந்துகொள்வார். எவ்வளவு சொன்னாலும் திருந்துவதில்லை. அதனால் அவரிடம் சிலருக்கு வெறுப்பு இருந்து வந்தது. ஆதீனத்தில் அக்காலத்தில் சின்னப் பட்டத்தில் இருந்த ஸ்ரீ நமசிவாய தேசிகருக்கு அவர் ஏதோ அபசாரமான காரியம் செய்துவிட்டார்; அந்த விஷயம் ஆதீனத் தலைவருக்குத் தெரிந்தபோது, "இனிமேல் புலிக்குட்டியை மடத்திற்குள்ளே விடவேண்டாம். வந்தால் நாம் அங்கீகரிக்கமாட்டோம்" என்று கட்டளையிட்டுவிட்டார். புலிக்குட்டி பூனைக்குட்டியைப்போல மடத்தினின்றும் விலக்கப்பட்டார். தம்முடைய துஷ்டத்தனமெல்லாம் அடங்கி ஒடுங்கிப் போய், 'இனி எப்படியாவது மீட்டும் மடத்தில் சேர்ந்துகொள்ளவேண்டும்' என்று முயற்சி செய்யத் தொடங்கினார்.

தக்கவர்களுடைய துணையைப் பெற்று மடத்தை அணுகவேண்டுமென்றெண்ணித் தியாகராச செட்டியாரிடம் வந்து தம் குறையைத் தெரிவித்துக்கொண்டார்; பல காலமாகப் புலிக்குட்டித் தம்பிரானோடு பழகிய செட்டியார் அவர்பால் மனமிரங்கி அவர் கருத்துக்கு இணங்கினார்.

ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று செட்டியார் புலிக்குட்டியை அழைத்துக்கொண்டு திருவாவடுதுறையை நோக்கிப் புறப்பட்டார். புறப்படும்போது ஸ்ரீநமசிவாய

தேசிகர் விஷயமாகத் தாம் இரண்டு செய்யுட்கள் இயற்றியதோடு, தம்பிரானையும் அத்தேசிகர்மீதும் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்மீதும் சில பாடல்கள் இயற்றி வைத்துக்கொள்ளச் செய்தார். இருவரும் திருவாவடுதுறை சென்று மடத்திற்குள் போனார்கள். செட்டியார் அழைத்துச் சென்றமையால் புலிக்குட்டித் தம்பிரானை யாரும் தடுக்கவில்லை. செட்டியார் அவரை அழைத்துக்கொண்டு நேரே நமசிவாய தேசிகரிடம் போனார். இருவரும் வந்தனம் செய்து விபூதி பெற்றுக்கொண்டவுடன் தம்பிரான் தம் குற்றத்தை க்ஷமிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, செட்டியார் இயற்றிய பாடல்களையும் தம்முடைய பாடல்களையும் சொன்னார். செட்டியார் இயற்றியவை வருமாறு:

(வெண்பா)

மற்றென் னருள்நமச்சி வாயகுரு வாசிறியேம்
குற்றம் பொறுத்திடனின் கொள்கையே—குற்றம்
பொறுப்பாயேற் பொல்லான் பொறுத்தானென் றுன்னை
ஒறுப்பா ரெவரிங் குளர்.

(எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

கடியவெவ் விடமுன் னயின்றனை யென்று
 கரைவர்மெய் யாகவெம் பாவக்
கொடியவெங் களையாண் டருள்வைநின் பணியே
 கூடலிற் கொடுநர கதில்வீழ்
முடிவின்மா பாவி தனைப்புரப் பதுவே
 புரப்பென்ற முதல்வனி யலையோ
வடிகொள்காச் சூழ்கோ முத்திவாழ் நமச்சி
 வாயமெய்க் குருசிகா மணியே.

[கரைவர் - கூறுவர். நின்பணி அருள்வை - நின் திருவடித் தொண்டு புரியும்படி அருள் செய்வாயாக. கூடலில் - மதுரையில். மாபாவி - மாபாதகங்கள் செய்தவன். கோமுத்தி - திருவாவடுதுறை.]

பாடல்களைச் சொன்னபின்னர் செட்டியாரும் நமச்சிவாய தேசிகரிடம் பலபடியாகச் சொல்லிப் புலிக்குட்டியைப் பொறுத்தருள வேண்டுமென்று விண்ணப்பித்துக்கொண்டார். தேசிகர் செட்டியார் சொல்வதை எண்ணித் தம் கோபம் ஆறினர்; பிறகு அவ்விருவரும் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் சென்று குறையிரந்தனர். அவர் செட்டியார் இயற்றிய பாடல்களையும் தம்பிரான் பாடல்களையும் கேட்டார். செட்டியார் தம்பிரானை ஏற்றுக்கொள்ளும்படி சொன்னபோது அதை மறுக்க அவருக்கு மனம் வருமா? "நீங்கள் சொல்வதற்காக அங்கீகரிக்கிறோம். இனிமேல் ஜாக்கிரதையாக நடந்துகொள்ளச் சொல்லுங்கள்" என்று கூறி ஆதீனத்தலைவர் மீட்டும் தம்பிரானை மடத்தில் சேர்த்துக்கொண்டனர்.

---

## 27. சில பழக்கங்கள்

செட்டியார் கும்பகோணத்தில் இருந்தது முதல் தம் மரணகாலம் வரையில் ஒரு பஞ்சவர்ணக் கிளியை வளர்த்துவந்தார். இவர் பேசுவதைப் போலவே சில வார்த்தைகளை அது சொல்லும். இவர் தம் தாயாரையோ சிறிய தாயாரையோ "ஆத்தாள்" என்று அழைப்பார். அதுவும் அப்படியே அழைக்கும். பால், பழம் முதலிய உணவுப் பொருள்களை மிக்க கவனத்தோடு அதற்கு அளித்து வருவார்.

ஒரு பசுவை இவர் பாதுகாத்து வந்தார். அதை நாள் தோறும் குளிப்பாட்டி நெற்றியிற் குங்குமம் பூசி ஆகாரம் செய்வித்து வணங்குவார். தம்முடைய வீட்டு வாயில் தூண் ஒன்றில் கட்டி அப்பசுவின் மீதுள்ள உண்ணியை மெல்ல எடுத்துக்கொண்டிருப்பார். அச்சமயத்தில் அந்த வழியாகச் செல்லும் வக்கீல்களும், உத்தி

யோகஸ்தர்களும், "ஐயா, இப்படி நீங்கள் செய்யலாமா? வேறு யாரைக் கொண்டேனும் செய்விக்கலாகாதா?" என்று கேட்பார்கள்.

"இதன் பாலை மட்டும் உண்ணலாம்; உண்ணியை எடுக்கலாகாதா? எல்லா மிருகங்களிலும் சிறந்ததும் பல தேவதைகளுக்கு இருப்பிடமானதும் இந்தப் பசு அல்லவோ?" என்பர்.

பாதக்குறடு போட்டுக்கொண்டு நடப்பது இவர் வழக்கம். எப்பொழுதும் கையில் விசிறி ஒன்றை வைத்துக்கொண்டே இருப்பார். காலேஜுக்குக் கூடக் கொண்டு செல்வார். மூக்குப்பொடி போடும் பழக்கம் இவருக்கு உண்டு. அதைப்பற்றி யாரேனும் சொன்னால், "இது குரு சிஷ்ய பரம்பரையாக வந்தது. எங்கள் ஆசிரியராகிய பிள்ளையவர்கள் மூக்குப்பொடி போட்டுவந்தார்கள். அவர்களுடைய மாணாக்கன்தானே நான்?" என்று வேடிக்கையாகச் சொல்லுவார்.

தமக்குக் கிடைத்த காலேஜ் வேலையை ஒழுங்காக நிறைவேற்றுவதில் இவர் கண்ணுங்கருத்துமாக இருந்தார். பிள்ளையவர்கள் இவரைப் பார்க்கவரும் காலங்களில் இரவு வெகுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் படுத்துக்கொள்வார். விடியற்காலையில் எழுந்து ஆசிரியர் ஊர் போவதற்காக இவரிடம் சொல்ல வந்தால், இவர் கண்ணை மூடியபடியே எழுந்து வந்து வழியனுப்பிவிட்டு மீண்டும் சென்று படுத்துக்கொள்வார். "இப்போது விழித்துக்கொண்டால் காலேஜில் பாடம் சொல்லும்போது தூக்கம் வரும். என் கடமையைச் சரியாகச் செய்யமுடியாது. ஆகையால் தூக்கம் கெடாமல் இருக்க வேண்டும்" என்று இதற்குச் சமாதானம் சொல்வார்.

'இந்த வேலையை நன்றாகப் பார்த்துவந்தாலே போதும்' என்ற திருப்தியோடு இவர் வாழ்ந்துவந்தார். சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜில் முதல் தமிழ்ப் பண்டிதராக

வேலைபார்த்து வந்த ஸ்ரீநிவாச ராகவாசாரியாரென்பவர் வேலையினின்றும் விலகிய காலத்தில், பிரின்ஸிபாலாயிருந்தவர் செட்டியார் அவ்வேலையை ஒப்புக்கொள்ளலாமென்றும் தக்க சம்பளம் கொடுக்கப்படுமென்றும் கும்பகோணத்துக்குத் தெரிவித்தார். செட்டியார், "எனக்கு வயசாகிவிட்டது. காவேரி தீரத்தில் இவ்வளவு காலம் கழித்துவிட்டேன். முதுமைப் பருவத்தில் பட்டணம் போவதற்கு என் மனம் உடன்படவில்லை" என்று தெரிவித்துவிட்டார். இவருடைய மனநிறைவை அறிந்து யாவரும் பாராட்டினர்.

---

## 28. சந்திரசேகர கவிராஜ பண்டிதர்

உடல் நலம் இன்மையாலும் பூவாளூரில் கவனிக்க வேண்டிய வேலைகள் இருந்தமையாலும் தியாகராச செட்டியார் 1876-ஆம் வருஷம் ஆகஸ்டு முதல் ஆறுமாதம் ஓய்வு பெற்றுக்கொண்டார். அக்காலத்தில் செட்டியாருடைய ஸ்தானத்தில் யாரை நியமிக்கலாமென்று இவரையே பிரின்ஸிபால் துரை கேட்டார். சித்தூர் ஹைஸ்கூலிலிருந்த சந்திரசேகர கவிராஜ பண்டிதரென்பவர் நல்ல படிப்பாளியென்றும் அவர் பாடம் சொல்லத் தக்கவரென்றும் செட்டியார் கூறவே, பிரின்ஸிபாலாகிய போர்ட்டர் துரை அவரை வருவித்து ஆறுமாத காலம் வேலை பார்க்கும்படி நியமித்தார்.

சந்திரசேகர கவிராஜ பண்டிதர், திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர், விசாகப் பெருமாளையரென்பவர்களிடம் முறையாகப் பாடங்கேட்டு நல்ல பயிற்சி பெற்றவர். மிகவும் ஸாது. தம் ஆசிரியர்கள் கட்டளையின்படி அவர்கள் முன்னிலையில் நன்னூற் காண்டிகையுரை, விருத்தி

யுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, தண்டியலங்கார உரை, வச்சணந்தி மாலை முதலிய இலக்கண நூல்களையும், விஷப் பிரதிவிஷத்திரட்டு, அரபத்த நாவலர் இயற்றிய பரத சாஸ்திரம், அத்வைத நூலாகிய விவேக சூடாமணி முதலிய நூல்களையும் பதிப்பித்துப் பெயர் பெற்றவர். வசனம் எழுதுதல், செய்யுள் இயற்றுதல் இரண்டிலும் திறமையுடையவர். பண்டைக் காலத்தில் சென்னையில் இருந்த பெரிய தமிழ் வித்துவான்களாகிய தாண்டவராய முதலியார், சிவக்கொழுந்து தேசிகர், காஞ்சீபுரம் சபாபதி முதலியார், அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார், திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை, போரூர் வாத்தியார் முதலியவர்களோடு பழகியவர். தியாகராச செட்டியாரை விட அவர் பிராயத்தில் முதிர்ந்தவரே.

அவர் சிறந்த பண்டிதராக இருந்தாலும் மாணாக்கர் களுக்குத் திருப்தி உண்டாகும்படி பாடம் சொல்லவில்லை. மாணாக்கர்களுக்கும் அவருடைய மதிப்புத் தெரியவில்லை. அவர்களைக் கண்டித்து அடக்குவதற்கு அவர் துணிய வில்லை. 'நாம் இங்கே இருப்பது சில காலமே. ஒருவாறு நம் கடமையைச் செய்துவிட்டுப் போய்விடுவோம்' என்று எண்ணியிருக்கலாம்.

ஆறு மாதங்கள் ஆயின. செட்டியார் வந்து மீட்டும் வேலையை ஒப்புக்கொண்டார். அப்போது சந்திரசேகர கவிராஜ பண்டிதர் பிரின்ஸிபாலிடம் தமக்கு நன்மதிப்புப் பத்திரம் ஒன்று கொடுக்க வேண்டுமென்று கேட்டார். அப்படியே அவர் ஆங்கிலத்தில் ஒன்று எழுதிக்கொடுத்தார். அதை மிகவும் சந்தோஷமாக ஏற்றுக்கொண்ட பண்டிதர் தலைவரிடம் விடை பெற்றுக்கொண்டு மற்ற ஆசிரியர் களைப் பார்க்கும் பொருட்டு அவர்கள் வழக்கமாகக் கூடி யிருக்கும் அறைக்கு வந்தார். அங்கே சுந்தரராவ் முதலிய ஆசிரியர்களும், செட்டியாரும் இருந்தனர். பண்டிதர் தமக்குக் கிடைத்த நன்மதிப்புப் பத்திரத்தைச் சுந்தர

ராவிடம் கொடுத்துப் பார்க்கச் சொல்லிவிட்டு அங்கே அமர்ந்தார்.

சுந்தரராவ் வேடிக்கையாகப் பேசுபவர். எப்போதும் உத்ஸாகமாக இருப்பவர். அவர் அந்த யோக்கியதா பத்திரிகையைப் பார்த்தார். பிறகு அங்கிருந்த தியாகராச செட்டியாரை நோக்கி, "தங்களுக்குப் போர்ட்டர் துரையவர்கள் ஏதாவது நன்மதிப்புப் பத்திரம் தந்திருக்கிறாரா?" என்று கேட்டார்.

"இல்லையே; நான் அவர்களிடம் ஒன்றும் கேட்கவில்லை. இனிமேல் கேட்டு வாங்கி நான் என்ன செய்யப் போகிறேன்!" என்றார் செட்டியார்.

"இதோ இருக்கிறதே; இதற்கு ஒரு பிரதி செய்து வைத்துக்கொள்ளுங்கள். இது தங்களுக்கு மிகவும் பயன்படும்" என்று சுந்தரராவ் சொன்னார்.

அப்போது சந்திரசேகர கவிராஜ பண்டிதர் திடுக்கிட்டு, "எனக்கல்லவா தலைவர் அளித்தது இது?" என்று கேட்டார்.

"இல்லை; இல்லை, செட்டியாரவர்களுக்குக் கொடுத்தது தான்; சந்தேகமே இல்லை" என்று நகைத்தபடியே சொல்லிச் செட்டியாரிடம் அதை நீட்டினார் சுந்தரராவ்.

செட்டியார் அவருடைய இயல்பை உணர்ந்தவராதலின், "என்ன சமாசாரம்? இதில் என்ன எழுதியிருக்கிறது? ஏன் இந்தப் பெரியவருக்கு மனக்கலக்கம் உண்டாக்குகிறீர்கள்?" என்று கூறவே, சுந்தரராவ் அதைப் படித்து அதன் பொருளைக் கூறினார். அது, "மாணாக்கர்கள் மனத்தைக் கவர்ந்து போதிப்பதில் வல்லவரும் சிறந்த வித்துவானுமாகிய தியாகராச செட்டியார் பார்த்துவந்த வேலையை இவர் ஆறுமாதம் பார்த்தார்" என்ற கருத்துப்பட இருந்தது. அதைப் படித்தபிறகுதான் சுந்தரராவின் வேடிக்கைப் பேச்சினால் உண்டான மயக்கம் யாவருக்கும் தெளிந்தது.

## 29. மனைவியார்

செட்டியார் தம்முடைய மனைவியாரோடு மிகவும் மன ஒற்றுமையோடு இருந்து இல்வாழ்க்கையை நடத்தி வந்தார். மனைவியாரிடம் இவர் மிகவும் உத்ஸாகமாகப் பேசிக்கொண்டு பொழுது போக்குவார். அடிக்கடி இவர் தம் மனைவியாரைக் கண்டிப்பதுபோலப் பேசுவார். நெருங்கிப் பழகியவர்களுக்கு அவ்வளவும் விநோதார்த்தமென்று தெரியும். செட்டியாருக்கு வேண்டிய உபசாரங்களைக் குறைவின்றி மௌனமாகச் செய்வதில் அந்தப் பெண்மணியார் சலிப்பே அடைவதில்லை.

நான் எப்போதாவது செட்டியார் வீட்டிற்குப் போவேன். என்னைக் கண்டவுடனே இவர், "நல்ல சமயத்தில் வந்தீர்கள், நான் பிழைத்தேன்" என்று சொல்லுவார். "என்ன சமாசாரம்?" என்று கேட்பேன். "இவ்வளவு நேரம் என்னைப் படாத பாடு படுத்தி விட்டாளையா!" என்று சிரித்துக்கொண்டே சொல்வார். இவர் மனைவியார், "எப்போது பார்த்தாலும் இந்த வேடிக்கைப் பேச்சுத்தானு?" என்று நாணத்தோடு சொல்லிவிட்டு உள்ளே போய்விடுவார். விஷயத்தை விசாரிக்கப்போனால் ஒன்றும் இராது. ஏதாவது ஓர் இடத்துக்குப் போய்வருவதைப்பற்றி அவர்களுக்குள் பேச்சு நடந்துகொண்டிருக்கும். செட்டியார் வேண்டுமென்றே தம் மனைவியார் இஷ்டத்துக்கு விரோதமாகப் பேசியிருப்பார். இவர் தம் மனத்துக்குள் இணக்கமாக இருந்தாலும் உடனே உடம்படாமல் வார்த்தைகளை வளர்த்தி வாக்கு வாதத்தை எழுப்பி இன்புறுவார். கடைசியில் அந்தப் பெண்ணினுடைய விருப்பத்தின்படியே செய்வார்.

ஒரு நாள் இவரும் இவர் மனைவியாரும் ஒரு வண்டியில் எங்கேயோ போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது யாரோ ஒருவர் வழியில் இவரைப் பார்த்து அஞ்சலி

செய்தார். இவர் உடனே வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்கி அவரோடு பேசினார். அவர் இவரிடம் படித்தவர்; நல்ல உத்தியோகத்தில் இருந்தவர். பேசியபிறகு அவரை வண்டிக்கருகில் அழைத்து வந்தார். தம் மனைவியாருக்கு அவரைக் காட்டி, "இங்கே பார்: இவர் என்னிடம் படித்தவர். இன்னும் என்னை மறவாமல் இருக்கிறார். இவரைச் சாமான்யமானவர் என்று எண்ணாதே. என் ஆயுள் முழுவதும் என்னைக் காப்பாற்றும் சக்தியுடையவர்" என்று சொல்லிவிட்டு அவரை நோக்கி, "என்ன? நான் பென்ஷன் பெற்ற பிறகு உம்மிடம் வந்து ஆறு மாசம் இருந்தால் ஆதரிப்பீரா மாட்டீரா?" என்று கேட்டார்.

அவர், "அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைக்க வேண்டுமே; காத்திருக்கிறேன்" என்றார்.

மீண்டும் செட்டியார் தம் மனைவியாரைப் பார்த்து, "உன் கையிலே நான் அகப்பட்டிருக்கிறேனென்று நினைத்துவிடாதே. இப்படி ஆயிரம் பேர் இருக்கிறார்கள்" என்று சொல்லிச் சிரித்தபடியே அந்த மாணாக்கருக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டு வண்டியில் ஏறிக்கொண்டார்.

இவ்வாறு உல்லாசமாகச் சம்பாஷணை செய்வதிலும் விளையாட்டாக அந்தப் பெண்மணிக்குச் சிறு கோபம் உண்டாக்குவதிலும் செட்டியாருக்கு விருப்பம் அதிகம். செட்டியாருடைய மனம் கோணாமல் நடந்துவந்த அவர் இவர் காலமாவதற்கு இரண்டு வருஷங்களுக்கு முன்பே உலகவாழ்வை நீத்தார்.

---

## 30. வேலையினின்றும் நீங்குதல்

செட்டியாருக்கு வரவர உடல்நிலை தளர்ச்சி அடைந்தது; வேலையை விட்டுவிட்டுச் சொந்த ஊருக்குப் போய் வசிக்கலாமென்று இவர் மனைவியார் கூறினர். ஆதலின்

இவர் வேலையினின்றும் விலகிப் பென்ஷன் பெற்றுக் கொள்ள எண்ணி அதற்குரிய ஏற்பாடுகளை 1880-ஆம் வருஷம் ஆரம்பத்தில் செய்யத்தொடங்கினார்.

தம்முடைய இடத்தில் தமக்குத் திருப்தி விளைவிக்கக் கூடிய ஒருவரை நியமிக்க வேண்டுமென்பது இவரது கருத்து. என்பால் மிக்க அன்பு பூண்ட இவருக்கு அவ் வேலையை எனக்கே செய்விக்க வேண்டுமென்ற எண்ணம் நெடுநாட்களாக இருந்து வந்தது. ஆகவே பென்ஷன் வாங்கிக்கொள்ள நிச்சயித்தவுடன் திருவாவடுதுறைக்கு வந்து ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரது அனுமதி பெற்று என்னைக் கும்பகோணத்துக்கு அழைத்துச் சென்று அக் காலத்தில் பிரின்ஸிபாலாக இருந்த கோபாலராவையும் மற்ற ஆசிரியர்களையும் மகிழ்வித்து என்னை ஏற்றுக் கொள்ளும்படி செய்தார். இவர் 1880-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 15-ஆம் தேதி வரையில் ஆசிரியராக இருந்து 16-ஆம் தேதி முதல் தம் ஸ்தானத்திலிருந்து வேலை பார்க்கும்படி என்னை அமைத்து விலகினார்.

மாணக்கர்களுக்கு இவர் கலாசாலையை விட்டுப் போவது மிக்க வருத்தத்தையே உண்டாக்கிற்று. செட்டி யார் வேலையை விட்ட பிறகும் என் வேண்டுகோளுக்கு இணங்கிக் காலேஜுக்கு வந்து பிள்ளைகளுக்கு என்பால் பிரியம் உண்டாகும்படி செய்ததோடு பாடம் சொல்லும் முறையையும் எனக்கு விளக்கினார்.

செட்டியார் வேலையினின்றும் நீங்கினாலும் பென்ஷன் பெறும் விஷயத்தில் சில சிக்கல்கள் இருந்தன. கும்ப கோணத்திலே இருந்து மேலதிகாரிகளுக்கு விண்ணப்பம் செய்துகொண்டு அவற்றை நீக்கிக்கொள்ளலாமென்று சில அன்பர்கள் கூறினமையால் இவர் ஆறுமாதகாலம் அந்த நகரத்திலே தங்கியிருந்தார்.

செட்டியார் ஒரு சமயம் தம்முடைய பண்டங்களை ரெயில்வே கூட்ஸ் மூலமாக அனுப்பி ஜாக்கிரதையாக

வாங்கி வைக்கவேண்டுமென்று திருச்சிராப்பள்ளியில் இருந்த தம் உறவினராகிய வழூச்சி செட்டியாரென்பவருக்கு ஒரு கடிதம் எழுதச்சொன்னார். நான், "செல்வச் சிரஞ்சீவி வழூச்சி செட்டியாருக்கு ஆனந்த நடராஜர் திருவருளால் எல்லா நன்மைகளும் மேன்மேலும் பெருக உண்டாகுக" என்று எழுத ஆரம்பித்தேன். அப்போது செட்டியார், "என்ன எழுதினீர்கள்?" என்று கேட்டார். நான் வாசித்துக் காட்டினேன். உடனே அவர், "அந்த வக்கணையெல்லாம் வேண்டாம். அருமை தெரியாதவர்களுக்கு நல்ல வாக்கியங்களை எழுதி வீணாக்கக்கூடாது. நான் சொல்கிறபடி எழுதுங்கள்" என்று சொல்லிவிட்டுக் கடிதத்தைச் சுருக்கமாகச் சொல்லலானார்: "வழூச்சி செட்டிக்கு, நான் சாமான்களை அனுப்பியிருக்கிறேன். பாஸ் இதனுடன் வருகிறது. ஜாக்கிரதையாகச் சாமான்களை எடுத்து வை" என்று செட்டியார் சொல்லி முடித்துவிட்டு, "இவர்களுக்கெல்லாம் செல்வச் சிரஞ்சீவியையும் ஆனந்த நடராஜரையும் கொண்டுபோய்ச் சுமத்தக் கூடாது. வெட்டொன்று துண்டிரண்டாக இருக்க வேண்டும்" என்று கூறினார்.

---

## 31. பிரிவுபசாரம்

ஆறுமாத காலம் கும்பகோணத்தில் இருந்தும் பென்ஷனுக்கு ஒரு வழியும் பிறக்கவில்லை. ஆகையால் செட்டியார் திருவானைக்காவலுக்குப் போய் வசிப்பதாகத் தீர்மானம் செய்தார். இதனை அறிந்த இவருடைய நண்பர்கள் யாவரும் இவருக்கு ஒரு பிரிவுபசாரம் நடத்தவேண்டுமென்று கருதி அதற்கு வேண்டிய காரியங்களைச் செய்யலாயினர். காலேஜ் ஆசிரியர்கள் தமக்குள் தொகை சேகரித்து நூற்றைம்பது ரூபாயும், டௌன் ஹைஸ்கூல் உபாத்தியாயர்கள் ஐம்பது ரூபாயும் சேர்த்து உதவினர்.

நூற்றைம்பது ரூபாய்க்கு ஒரு கௌரீசங்கரம் வைத்த ருத்திராக்ஷகண்டியும் ஐம்பது ரூபாய்க்கு ஒரு சால்வையும் வாங்கி அளிக்கவேண்டுமென்று ஆசிரியர்கள் எண்ணினர். அந்தத் தொகைக்கு அவ்விரண்டும் கிடைப்பது அரிது. அப்போது நான் திருவாவடுதுறை சென்று ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் எங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தேன். தேசிகர் மிக்க மகிழ்ச்சியுடன், "சால்வைக்கும் கண்டிக்கும் இந்தத் தொகை போதாது. ஆனாலும் குற்றம் இல்லை. பாக்கித் தொகை நாம் கொடுத்ததாக இருக்கட்டும்" என்று சொல்லி ஓர் அழகிய கண்டியையும் உயர்ந்த சால்வையையும் வழங்கினார்.

ஒரு நாள் பிற்பகலில் கோபாலராவ் தலைமையில் செட்டியாருக்குப் பிரிவுபசாரம் நடைபெற்றது. நகரத்திலுள்ள கனவான்களெல்லாம் வந்திருந்தனர். கோபாலராவ் தியாகராச செட்டியாருடைய குணங்களையும் பெருமையையும் எடுத்துச் சொன்னார். வேறு சிலரும் இவரைப் பாராட்டிப் பேசினர். நான் பத்துச் செய்யுட்களை இயற்றிப் படித்தேன். அதில் ஒன்று வருமாறு:

"வருந்தியருந் தமிழ்நமக்கு யார்புகல்வா
ரென்றேங்கும் மனத்தி னோர்கள்
திருந்தியசெந் தமிழ்ச்செல்வன் தியாகரா
சப்புலவர் திலகன் றன்பாற்
பொருந்தியவன் விளங்கவெடுத் துரைத்திடுநல்
லுரைகளைத்தம் புந்தி வைப்பின்
வருந்தியலைந் தியலுணர்வார் கவிபுகல்வார்
பிரசங்கம் வகுப்பார் மன்னோ."

கண்டியும் சால்வையும் செட்டியாருக்கு வழங்கப்பட்டன. ஆசிரியர்களிற் சிலர் தனித்தனியே பெட்டி, ஊன்றுகோல் முதலியவைகளைத் தம்முடைய நினைவுக்குறியாக வழங்கினர். இவர் பொடி போடும் வழக்கத்தை

அறிந்திருந்த ஆசிரியர் ஒருவர் நல்ல வேலைப்பாடு அமைந்த வெள்ளிப் பொடி டப்பி ஒன்றை இவருக்கு அச்சமயத்தில் அளித்தார்.

எல்லோரிடமும் விடை பெற்றுக்கொண்டு தியாக ராச செட்டியார் தம் மனைவியாரோடு திருவானைக் காவலுக்குச் சென்று வசிக்கலாயினர்.

---

## 32. சிங்கமையங்கார்

கும்பகோணத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன், திருவானைக்காவைச் சார்ந்த கொண்டயம் பேட்டையி லுள்ள திருவாவடுதுறை மடத்தில் இருப்பதற்கு நிச்ச யித்த தியாகராச செட்டியார் ஆதீனத் தலைவருடைய உத்தரவு பெற்றுக்கொண்டு அங்கே போய் அம்மடத்தில் இருப்பாராயினர். அம்மடம் மிகவும் பழுதுபட்டிருந்தது. இதனை அறிந்த இவர் மாணாக்கரும் பெரிய வக்கீலுமாகிய சிங்கமையங்காரென்னும் கனவான் முந்நூறு ரூபாய் செலவு செய்து அவ்விடத்தைச் செப்பம் செய்வித்தார். இடிந்த சுவர்கள் புதுப்பிக்கப்பட்டன; கதவு நிலைகள் ஒழுங்குபடுத்தப் பெற்றன; இரண்டாங்கட்டை விசால மாக்கினர். இவ்வாறு ஒரு மாணாக்கர் தம் கைச் செலவு செய்து செட்டியாருக்கு வசதி செய்வித்ததை அறிந்தவர் கள் செட்டியாருக்கும் அவரிடம் படித்தவர்களுக்கும் உள்ள நிலையான அன்பைப் பாராட்டி வியந்தனர்.

நான் ஒரு முறை திருவானைக்காவுக்குப் போயிருந்த போது செட்டியாரைப் பார்க்கச் சிங்கமையங்கார் வந்தி ருந்தார். செட்டியாருக்கு என்ன என்ன சௌகரியங்கள் செய்விக்க வேண்டுமென்று அவர் விசாரித்தார். அப்போது செட்டியார் எனக்கு அந்தக் கனவானைப் பழக்கம் செய்வித்துவிட்டு, "இவரே இம்மடத்தைச் செப்பனிடச் செய்தவர்; ஸ்ரீரங்கம் ஹைஸ்கூலில் என்னி

டம் படித்தவர் இவர்'' என்றார். பிறகு ஐயங்கார், செட்டியார் பாடம் சொல்லிக்கொடுத்த அருமையை வியந்து பாராட்டினார். எங்களுக்குக் குசேலோபாக்கியானம் பாடமாக இருந்தது. அதனை இயற்றியவர் வல்லூர்த் தேவராச பிள்ளை என்று அச்சிட்டிருந்தார்கள். உண்மையில் அதனை இயற்றியவர் பிள்ளையவர்களென்று சொல்லி அதனை இயற்றிய விசித்திரமான வரலாற்றை இவர்கள் எடுத்துச் சொன்னார்கள். குசேலருடைய குழந்தைகளின் வறுமைநிலை அந்நூலில் எவ்வளவு அழகாகச் சொல்லப் பட்டிருக்கிறது! இவர்கள் அச்செய்யுட்களைப் பாடம் சொல்லும்போது நாங்கள் மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டிருப்போம். அந்தப் பாடல்களை இன்னும் ஒரு முறை கேட்கவேண்டுமென்ற ஆசை எழுகிறது'' என்றார்.

செட்டியார் உடனே அவற்றைச் சொல்லிக் காட்டினார். சிங்கமையங்கார் மிக்க மகிழ்ச்சியுற்றார்; ''அந்த இளமை மீட்டும் எங்களுக்கு வருமா? தங்களிடம் பாடம் கேட்டபோது உண்டான ஆனந்தத்தை வாழ்க்கையில் எப்போது பார்க்கப்போகிறோம்! நாங்களும் கிழவர்களாகிக்கொண்டு வருகிறோம். பாடம் சொல்லும்பொழுது நாங்கள் கவனிக்காமல் இருந்தால் எங்கள் தலையில் தாங்கள் குட்டுவது வழக்கம். அப்பொழுது தங்கள் கையிலுள்ள முண்டுங்கூட இடிக்கும். அந்த முண்டு இன்னும் இருக்கிறதா?'' என்று கேட்டார்.

''இதோ இருக்கிறது'' என்று செட்டியார் காட்டி, ''அந்தக் காலத்தை நினைத்தால் எனக்கும் ஆனந்தம் உண்டாகிறது'' என்று கூறினார்.

---

## 33. பொடிப் பாட்டு

செட்டியாரிடம் பாடம் கேட்டவர்களுள் சோமசுந்தரம் பிள்ளையென்பவர் ஒருவர். அவர் திருவானைக்

காவில் ஒரு பொடிக்கடை வைத்திருந்தார். தக்க வேலைக் காரர்களை வைத்துக்கொண்டு புதிய பொடியை அரைக்கச் செய்து வியாபாரம் நடத்தி வந்தார். அந்தப் பொடிக்குப் பெயரும் கிராக்கியும் அதிகமாயின. சுடச்சுடப் புதுப் பொடியை வாங்கிப் போட்டுக்கொள்வதற்காகப் பல பேர் அங்கே சென்று கூடுவார்கள். கல்கத்தா முதலிய வெளியூர்களுக்கும் பொடியை அனுப்பி அதனால் பொருள் வருவாயைப் பெற்ற சோமசுந்தரம்பிள்ளை அதில் ஒரு பகுதியைச் சிவதருமத்தில் செலவிட்டுவந்தார்.

செட்டியாரும் பொடியில் மிக்க விருப்பம் உடையவ ராதலால் பிற்பகலில் தம்முடைய விடுதியிலிருந்து சென்று திருமஞ்சனக் காவேரியில் அனுஷ்டானம் செய்துகொண்டு அப்படியே சோமசுந்தரம் பிள்ளையவர்கள் கடைக்குப் போவார். அவர் உடனே எழுந்து வந்து இவரை வரவேற்று ஆசனம் கொடுத்து இருக்கச் செய்வார். ஒரு வேலைக்காரன் ஒரு பொடிப் பட்டையை இவரருகில் வைத்துவிட்டு ஒரு முறை போட்டுப் பார்ப்பதற்காக வேறு ஒரு பட்டையிலும் கொணர்ந்து கொடுப்பான். செட்டியார் அதைப் போட்டுக்கொண்டு சற்று நேரம் ஒன்றும் பேசாமல் இருப்பார். அந்தப் பொடியின் இனிமையை வேறு ஒரு தடையும் இன்றி அனுபவிப்பது தான் அந்த மௌனத்திற்குக் காரணம்.

பிறகு சோமசுந்தரம் பிள்ளை தமிழ் நூல்களிலுள்ள தம் சந்தேகங்களை யெல்லாம் கேட்பார். இவர் சிறிது நேரம் இருந்து சொல்லிவிட்டுத் தம் விடுதிக்குப் போவார்.

நான் செட்டியாரைப் பார்க்கச் சென்றேன். ஒரு முறை இந்தக் காட்சியைக் கண்டேன். செட்டியார் சோமசுந்தரம் பிள்ளை கடையில் உட்கார்ந்தார். நானும் அருகில் அமர்ந்தேன். பொடியின் மணம் மூக்கைத் துளைத்தது. வேலைக்காரன் ஒரு பொடிப் பட்டையைச் செட்டியாரிடம் சமர்ப்பித்தான். அந்தப் பட்டையைப்

பக்குவப்படுத்துவதற்கே ஒரு தனித் திறமை வேண்டும் போல் இருந்தது. மிகவும் பதமாக வெண்மையும் பழுப்பும் கலந்த ஒரு நிறத்தோடு, முக்காற்சாண் அளவில் இருந்தது, அந்தப் பட்டை. உள்ளே இருந்த பொடியின் மணம் சிறிதாவது வெளியே போகாதபடி வெள்ளை வாழை நாரால் இறுக அடிமுதல் நுனிவரையில் நெருக்கமாகச் சுற்றப்பட்டிருந்தது அந்த நாரைச் சுற்றியிருப்பதிலே ஓர் ஒழுங்கு காணப்பட்டது. பொடி போடாதவர்களும், அந்தப் பட்டையின் அழகை உத்தேசித்து, அதை வைத்துக் கொள்ளலாமென்று தோற்றும்.

பொடிக்கடைச் சம்பிரதாயப்படி தியாகராச செட்டியார் போட்டுக்கொள்வதற்குப் புதுப் பொடியை நீட்டிய வேலைக்காரன் எனக்கும் கொடுக்க வந்தான். அதன் அருமையை அறியத் திறமையில்லாத நான், "வழக்கமில்லை" என்று சொல்லிவிட்டேன்.

அவ்விடத்திலிருந்து பேசிக்கொண் டிருந்தபொழுது நான், "பொடியின் இனிமையை நுகர்ந்த புலவரொருவர் முன்பு ஒரு பாடல் இயற்றியிருக்கிறார்" என்று கூறி,

"ஊசிக் கழகு முனைமுறி யாமை யுயர்ந்தபர
தேசிக் கழகிந் திரிய மடக்கல் திரள்நகில்சேர்
வேசிக் கழகுதன் மேனி மினுக்குதல் மிசப்பெருத்த
நாசிக் கழகு பொடியென்று சொல்லுவர் நாவலரே"

என்ற பாடலைச் சொன்னேன். சோமசுந்தரம்பிள்ளை பாட்டை மறுபடியும் சொல்லச் செய்து கேட்டு இன்புற்றார். அப்போது செட்டியார், "இந்தச் செய்யுள் பொதுவாகவல்லவோ இருக்கிறது? நம் சோமசுந்தரத்தையும் இவர் கடைப் பொடியையும் சிறப்பித்து ஒரு பாடல் செய்யலாமே" என்றார். நாங்கள் இருவரும் சேர்ந்து ஒரு பாடலை இயற்றினோம். அது வருமாறு:

"கொடியணி மாட மோங்கிக் குலவுசீ ரானைக் காவில்
படியினி லுள்ளார் செய்த பாக்கிய மனையான் செங்கைத்
தொடியினர் மதனன் சோம சுந்தரன் கடையிற் செய்த
பொடியினைப் போடா மூக்குப் புண்ணியஞ் செய்யா மூக்கே."

[படியினில் - பூமியில். செங்கைத் தொடியினர் மதனன் சிவந்த கையில் வளையணிந்த மகளிருக்கு மன்மதன் போன்றவன்.]

இந்தப் பாட்டை முடித்த பிறகு இதன் பொருளை நான் சொன்னேன். பரிகாசம் செய்வதில் விருப்பமுள்ள செட்டியார் இதில் சோமசுந்தரம் பிள்ளையைச் செங்கைத் தொடியினர் மதனனென்று சொல்லியிருப்பதைப் பாராட்டிவிட்டு, "இவர் முதல் மனைவி இறந்துவிட்டாள். இரண்டாந்தாரம் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று எண்ணுகிறார். நான் வேண்டாமென்று சொன்னேன். இந்தப் பாட்டு இவர் இரண்டாவது கல்யாணம் செய்துகொள்ளத் தகுதியுள்ளவரென்று தோற்றும்படி அமைந்திருக்கிறது. அப்படிச் சொன்னதில் இவருக்குச் சந்தோஷந்தான். .. என்ன, சோமசுந்தரம், பாட்டு எப்படி?" என்றார்.

அவர் சிரித்தபடியே அதை எழுதிக்கொண்டார். பிறகு அதனைத் தனியே அச்சிட்டுப் பல இடங்களில் ஒட்டச் செய்ததோடு எல்லோருக்கும் கொடுத்தும் வந்தார்.

---

## 34. தமிழ்ச்சுவையை உணர்த்துதல்

திரிசிரபுரத்தில் ஒரு கனவான் வீட்டில் மிகச் சிறப்பாக ஒரு கல்யாணம் நடைபெற்றது. பெரிய உத்தியோகஸ்தர்களும் பிரபுக்களும் அதற்கு வந்திருந்தார்கள். செட்டியாரும் போயிருந்தார். அவர்களில் ஆங்கிலம் படித்தவர்கள் பலர் ஓர் இடத்தில் கூடிப் பேசினார்

திரு. பட்டாபிராம பிள்ளை என்னும் கனவானும் செட்டியாரும் இவர் மாணுக்கர் சிலரும் அக்கூட்டத்தில் இருந்தனர். அவர்கள் ஆங்கில இலக்கியத்தின் பெருமையை எடுத்துப் பேசி வந்தார்கள். இடையிலே சிலர், "இவ்வளவு அருமையான சுவை வேறு எந்தப் பாஷையில் இருக்கிறது? தமிழ் தமிழென்று சொல்லுகிறீர்களே; இதில் நூற்றில் ஒரு பங்கு வருமா?" என்று கூறினார்கள்.

ஆங்கிலத்தின் சிறப்பைச் சந்தோஷத்தோடு கேட்டு வந்த செட்டியாருக்குத் தமிழைக் குறை கூறுதலைக் கேட்கப் பொறுக்கவில்லை. அவர் பேச ஆரம்பித்தார்; "ஆங்கிலத்தில் பல நூல்களைப் படித்து அவற்றின் சுவையை நுகர்ந்த நீங்கள் அந்நூல்களின் சிறப்பை எடுத்துச் சொன்னது மிகவும் பொருத்தமானதுதான். ஆனால் தமிழைப்பற்றி அபிப்பிராயம் சொல்ல வந்தீர்களே; தமிழ் நூல்களை நீங்கள் படித்திருக்கிறீர்களா? படிக்காமல் தமிழில் ஒன்றும் இல்லையென்று சொல்லிவிடலாமா? நான் இங்கிலீஷில் ஒன்றும் இல்லையென்றால் நீங்கள் ஒப்புக்கொள்வீர்களா? தமிழில் எவ்வளவோ சுவையுடைய பாடல்கள் இருக்கின்றன. ஒரு பாடல் சொல்கிறேன் கேளுங்கள்" என்று சொல்லிவிட்டு, "சுடர்த்தொடீஇ கேளாய்" என்ற செய்யுளைக் கூறி விரிவாகப் பொருளும் சொன்னார். அச்செய்யுள் யாப்பருங்கலக்காரிகையில் மேற்கோளாக வருகிறது. அதைப் பாடம் கேட்டது முதல் அச்செய்யுட் பொருளில் ஈடுபட்டு இன்புற்றவராதலின் மிகவும் ரஸமாகப் பொருள் விரித்துச் சொன்னார். அதைக் கேட்டு அங்கிருந்த கனவான்கள், "மிகவும் நன்றாயிருக்கிறது. நாங்கள் இதுகாறும் இத்தகைய பாடல்களைக் கேட்டதே இல்லை" என்றார்கள்.

"தெரிந்துகொள்ள வேண்டுமென்ற கவலை இருந்தாலல்லவோ உங்களுக்குத் தெரியவரும்? இதைப் போல ஆயிரக்கணக்கான பாடல்கள் தமிழில் இருக்கின்றன.

நம்முடைய சொந்த பாஷையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ளாமற் போனால் வேறு யார் தெரிந்துகொள்ளப் போகிறார்கள்?" என்று செட்டியார் அறிவுறுத்தினார்.

தமிழன்பரும் செட்டியாரிடம் மதிப்புடையவரு மாகிய பட்டாபிராம பிள்ளைக்கு, சமயத்தில் செட்டியார் செய்யுளைக் கூறி அவர்களுடைய அறியாமையைப் புலப் படுத்தியதுபற்றி மிக்க சந்தோஷம் உண்டாயிற்று. இந்த நிகழ்ச்சியை அவர் பல காலம் வியப்போடு சொல்லிக் கொண்டே இருந்தார்.

---

## 35. திருவாசக உரை

திரு. பட்டாபிராமபிள்ளை திருச்சிராப்பள்ளியிலும் வேறு இடங்களிலும் சிரஸ்தேதாராகவும் டிப்டி கலெக்ட ராகவும் இருந்தவர். தமிழ் வித்துவான்களை ஆதரிக்கும் இயல்பை உடையவர். அறிவாளிகளைக்கொண்டு உப யோகமான காரியங்களைச் செய்யவேண்டு மென்பது அவரது விருப்பம். ஆதலால் கல்வியறிவுள்ளவர்களைக் கண்டால், "நீங்கள் இன்ன புஸ்தகம் எழுதவேண்டும்; இன்ன நூலுக்கு உரை எழுதவேண்டும்; இன்ன விஷயத் தைப் பற்றி ஆராய்ச்சி செய்து தெரிந்தவற்றை வெளிப் படுத்த வேண்டும்" என்று தூண்டுவார்; மேலும் மேலும் வற்புறுத்துவார்

தேவார திருவாசகங்களுக்கு உரையில்லையே என்ற குறை அவருக்கு இருந்துவந்தது. வைஷ்ணவராகிய அவர் திவ்யப்பிரபந்தங்களுக்குப் பலவகையான உரைகள் இருப் பதை உணர்ந்தவராதலின் சைவத் திருமுறைகளுக்கும் தக்க பண்டிதர்கள் உரை யெழுதினால் உலகத்துக்கு உப காரமாக இருக்குமென்ற கருத்தினால் யாரேனும் வித்து வான்களைச் சந்திக்க நேர்ந்தால் அவரை எழுதும்படி சொல்வது வழக்கம்.

தியாகராச செட்டியார் திருவானைக்காவில் இருந்த காலத்தில் பட்டாபிராமபிள்ளை அடிக்கடி இவரிடம் வந்து பேசி இன்புற்றுச் செல்வார். செட்டியாரைத் திருவாசகத்துக்கு உரை எழுதச் செய்ய வேண்டுமென்று அவர் தீர் மானித்துத் தம் கருத்தை இவரிடம் சொன்னார். இவர், "முடியுமானால் செய்யலாம்" என்று ஒருவாறு விடையளித்தார்.

அது முதல் பட்டாபிராமபிள்ளை இவரைச் சந்திக்கும் காலங்களிலெல்லாம் உரை எழுத வேண்டுமென்று வற் புறுத்தி வந்தார்; "நீங்கள் இப்போது ஓய்வாக இருக்கிறீர் கள். நன்றாக ஆராய்ந்து செய்வதற்கு நேரம் இருக்கிறது. உத்தியோகத் தொல்லைகளெல்லாம் நீங்கிப் பற்றற்று இருக்கும் உங்கள் மனத்துக்கு இந்தக் காரியம் சந்தோஷத்தை உண்டாக்கும். இந்தப் பருவத்தில் நீங்கள் இதைச் செய்தால் இம்மை மறுமைப் பயன்களை அடையலாம்" என்று சொல்லித் தூண்டுவார். கல்யாணம் முதலிய விசேஷங்களுக்குச் செல்லும் இடங்களில் செட்டியாரைச் சந்தித்தால், "என்ன? ஆரம்பித்தீர்களா? எவ்வளவு ஆயிற்று?" என்று கேட்பார். பக்கத்தில் உள்ளவர்கள், "என்ன?" என்று விசாரித்தால், "இவர்களைத் திருவாசகத்துக்கு ஓர் உரை எழுதவேண்டுமென்று பல காலமாகச் சொல்லி வருகிறேன். கவனிக்கவில்லை. இவர்களே கவனிக்காவிட்டால் வேறு யாரிடம் நான் சொல்வேன்!" என்று இரங்குவார்.

ஒரு நாள் செட்டியார் திரிசிரபுரத்தில் நிகழ்ந்த ஒரு துக்கத்தை விசாரித்துக் காவிரியில் நீராடிவிட்டு ஈர ஆடையோடு காவிரிப் பாலத்தின்மேல் திருவானைக்காவை நோக்கி நடந்து வந்துகொண் டிருந்தார். நடுப்பகலாதலால் வெயில் கடுமையாக இருந்தது. செட்டியாருக்குப் பசியும் உண்டாயிற்று.

அப்போது எதிரே ஒரு வண்டி வந்தது. செட்டி யாருக்கருகில் அது வந்தவுடன் நின்றது. அதிலிருந்த ஒரு வர் திடீரென்று கீழே குதித்தார். செட்டியார் நிமிர்ந்து பார்த்தார். பட்டாபிராமபிள்ளை மார்பிற் சந்தனம் மணக்க நின்றார். "எங்கே போய் வருகிறீர்கள்?" என்று செட்டி யார் கேட்டார். ஸ்ரீரங்கம் போய்ப் பெருமாளைத் தரிசி துக்கொண்டு வருகிறேன். நான் சொன்னதைக் கவனி தீர்களா? திருவாசக உரை ஏதாவது ஆகியிருக்கிறதா? என்று அவர் கேட்டார்.

பட்டாபிராமபிள்ளை பிரஸாதங்களை உண்டுவிட்டு வண்டியிலே வந்தார். செட்டியாரோ சாப்பிடாமல் வெயிலிலே நடந்துவந்தவர். இவர் மிகவும் களைப்படை திருந்தார். பட்டாபிராமபிள்ளை தம்மை, 'திருவாசகத் துக்கு உரை எழுத ஆரம்பித்தீர்களா?' என்று கேட்ட தனால் செட்டியாருக்கு அவரிடம் கோபம் வேறு உண்டா யிற்று.

"இதோ பாருங்கள்: இவ்வளவு நாளாக உங்களிடம் ஒன்றும் சொல்லவேண்டாமென்று இருந்தேன். உங்க ளுக்குத் திருவாசகத்தின் பெருமை கொஞ்சமாவது தெரியு மென்று தோற்றவில்லை. அதற்கு நானா உரை எழுதுவது திருவாசகமெங்கே? நான் எங்கே? அதற்கு உரை எழுது வதற்கு என் படிப்பு எம்மாத்திரம்? வேதம், ஆகமம், உப நிஷதம், புராணங்கள், சாஸ்திரங்களெல்லாம் தெரிந் தாலல்லவா அதற்கு உரை எழுத முடியும்? மிகவும் சுலப மாகச் சொல்லிவிடுகிறீர்களே!"

பட்டாபிராம பிள்ளை: என்ன அப்படிச் சொல்லுகிறீர் கள்? திவ்யப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்கள் எழு வில்லையா?

செட்டியார்: திவ்யப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானம் எழுதினவர்கள் பெருமை உங்களுக்குத் தெரியாதுபோல் இருக்கிறதே. அவர்கள் வடமொழி தென்மொழி இரண்

டிலும் தேர்ந்த புலமை உடையவர்கள். அவர்கள் வியாக்கியானத்தால் எவ்வளவு உயர்ந்த இரகசியங்கள் வெளிப்படுகின்றன! திவ்யப் பிரபந்தத்தால் வியாக்கியானங்களுக்குப் பெருமையா, வியாக்கியானங்களால் அப்பிரபந்தங்களுக்குப் பெருமையா என்று எண்ணும்படியல்லவா அவை இருக்கின்றன? உங்களுக்குத் திருவாசகத்தின் பெருமை எப்படித் தெரியவில்லையோ, அப்படியே திவ்யப் பிரபந்தங்களின் வியாக்கியானப் பெருமையும் தெரியவில்லை யென்றுதான் நினைக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் இப்படிக் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் நச்சு நச்சென்று என்னைத் துன்புறுத்துவீர்களா? இனிமேலும் இப்படித் தொந்தரவு செய்வதாயிருந்தால், இதோ இப்படியே காவிரியில் பொத்தென்று விழுந்து என் பிராணனை விட்டுவிடுவேன். 'பட்டாபிராம பிள்ளையவர்கள் திருவாசகத்துக்கு உரை எழுதச் சொல்லித் தொந்தரவு செய்தமையால் அந்தத் துன்பத்தைப் பொறுமல் தியாகராச செட்டியார் காவிரியில் விழுந்துவிட்டாரெ'ன்ற அபக்கியாதி உங்களுக்கு ஏற்படட்டும்.

பட்டாபிராம பிள்ளை செட்டியாருடைய கோபத்தின் அளவை உணர்ந்துகொண்டார். இவர் கையைப் பிடித்துக் கொண்டு, "ஐயா! ஐயா! வேண்டாமையா; இனிமேல் இதைப்பற்றி உங்களிடம் பிரஸ்தாபிப்பதே இல்லை ஐயா!" என்று பணிவாகச் சொல்லி ஒருவாறு செட்டியாருடைய படபடப்பை ஆற்றினர். பிறகு தம் வண்டியிலே செட்டியாரை ஏற்றிக்கொண்டு திருவானைக்காவில் இவர் விடுதியில் விட்டுவிட்டுத் தம் இடம் சென்றுர்.

---

## 36. பெருந்தன்மை

கும்பகோணம் காலேஜின் புகழுக்குக் காரணமாக இருந்தவர்களுள் அங்கே பிரின்ஸிபாலாக இருந்த போர்ட்

டர் துரை முக்கியமானவர். எல்லோருடைய அபிமானத் துக்கும் பாத்திரராக அவர் விளங்கினர். தம்முடைய அபி விருத்திக்கு அந்தத் துரையே காரணமென்று கோபால ராவ் அடிக்கடி சொல்லுவார். போர்ட்டர் துரை வேலை யிலிருந்து ஓய்வு பெற்றுக்கொண்ட பிறகு அவருடைய ஞாபகச் சின்னமாக ஏதேனும் செய்ய வேண்டுமென்ற கருத்து அவரிடம் படித்த மாணுக்கர்களுக்கும் காலேஜ் ஆசிரியர்களுக்கும் இருந்தது. அவர் பெயரால் ஒரு மண்டபம் கட்டலாமென்று முடிவு செய்தார்கள். அந்த முயற்சியை ஸாது சேஷையரும், ஆர். வி. ஸ்ரீநிவாஸை யரும் மிகுதியாக மேற்கொண்டனர். அம்மண்டபத்திற்கு அஸ்திவாரக் கல் கோபாலராவால் நாட்டப் பெற்றது. விரைவில் மண்டபம் கட்டி நிறைவேறியது.

அதன் திறப்புவிழா நடைபெற்ற காலத்தில் வெளியூர் களிலிருந்தும் பழைய மாணுக்கர்கள் பலர் வந்திருந்தனர். போர்ட்டர் துரையும் வந்திருந்தார். திருவானைக்காவி லிருந்து தியாகராச செட்டியாரும் வந்தார். கும்பகோணம் காலேஜில் வேலைபெற்றுப் பார்த்து வந்த எனக்குப் போர்ட்டர் துரையைப் பார்த்து மகிழும் சந்தர்ப்பம் அப் போதுதான் கிடைத்தது.

தியாகராச செட்டியார் என்னையும் அழைத்துக் கொண்டு போர்ட்டர் துரையைப் பார்க்கச் சென்றார். துரை செட்டியாரோடு பழைய கால நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தபோது, "உங்கள் ஸ்தா னத்தில் இப்போது யார் இருக்கிறார்?" என்று கேட் டார்.

"இவரே என் ஸ்தானத்தில் இப்போது இருந்து வேலை பார்த்து வருகிறவர்" என்று செட்டியார் என்னைச் சுட்டிக் காட்டிச் சொன்னார்.

"மிகவும் பால்யமாக இருக்கிறாரே!"

"பால்யராக இருந்தாலும் என்னைவிடக் கல்வியில் மிகப் பெரியவர். மாணாக்கர்களுக்குப் பிரியமுண்டாகும் படி நடப்பவர்" என்றார் செட்டியார்.

உடனே போர்ட்டர் துரை, "இந்த வார்த்தை இவருடைய தகுதியைக் காட்டிலும் உங்கள் பெருந்தன்மையையே எனக்கு அதிகமாக விளக்குகிறது. உங்கள் ஸ்தானத்தில் வந்திருப்பவரிடத்தில் உங்களுக்குச் சிறிதேனும் பொறாமையில்லையென்பதை அறிந்து சந்தோஷம் அடைகிறேன்" என்றார்.

அவரிடம் இருவரும் விடைபெற்றுக்கொண்டோம். தம்மைச் சார்ந்தவர்களுக்குப் பெருமை அளிப்பதிலே இன்பங் காணும் செட்டியாரது இயல்பையும், அதனை உணர்ந்து பாராட்டிய போர்ட்டர் துரையினுடைய வார்த்தைகளையும் எண்ணி எண்ணி இன்புற்றேன்.

---

## 37. பென்ஷன் பெற்ற மகிழ்ச்சி

செட்டியாருடைய பென்ஷன் விஷயத்தில் சில தடைகள் இருந்தமையால் இவருக்குப் பென்ஷன் கிடைக்க மிக்க தாமதம் ஏற்பட்டது. தம்மிடம் அன்புள்ள கனவான்கள் முகமாகப் பென்ஷன் கிடைப்பதற்குரிய முயற்சிகளை இவர் செய்து வந்தார். கோபாலராவும் மேலதிகாரிகளுக்கு எழுதினார். செட்டியாருக்கு இவ்விஷயத்தில் மிக்க கவலையுண்டாயிற்று. எனக்கு ஒவ்வொரு வாரமும் தவறாமல் இதுபற்றித் தெரிந்து எழுதவேண்டுமென்று கடிதம் எழுதிவந்தார் "எனக்குப் பென்ஷன் பணம் கிடைத்தால் பூவாளூர் ஸ்வாமிக்கே அதை அர்ப்பணம் செய்யப் போகிறேன். ஆகவே தமக்குரிய சொத்தைப் பெற்றுக்கொள்வது அந்தப் பெருமானுடைய பொறுப்பாகிவிட்டது" என்று ஒரு முறை தெரிவித்தார்.

இரண்டு வருஷ காலம் பென்ஷன் கிடைக்காமல் பிறகு 1882 - ஆம் வருஷம் மார்ச்சு மாதம் அவ்விரண்டு வருஷங்களுக்கும் சேர்ந்து ரூ. 403-13-4 கிடைத்தது. அதனால் மிக்க திருப்தியை அடைந்த செட்டியார் அத் தொகையைப் பூவாளூர் ஆலயத் திருப்பணி முதலியவற்றிற்குச் செலவிட எண்ணினார். முதலில் அக்கோயிலில் ஸ்ரீ நடராஜப் பெருமான் எழுந்தருளியுள்ள சபைத் திருப்பணியை ஆரம்பித்தார்.

நான் செட்டியாருக்கு அடிக்கடி எழுதும் கடிதங்களில் தலைப்பில் ஒவ்வொரு பாடல் எழுதுவது வழக்கம். என்னுடைய ஆசிரியராகிய ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் கற்பித்தது இது. பிறகு தியாகராச செட்டியாரும், "செய்யுள் இயற்றும் பழக்கம் விட்டுப் போகாமல் இருக்கவேண்டும். அதற்கு இங்ஙனம் செய்வது ஒரு வழி" என்று சொன்னார்.

செட்டியாருக்கு நான் எழுதின ஒரு கடிதத்தில் பின்வரும் பாடலை முதலில் அமைத்திருந்தேன்.

"ஆனஞ்சு மகிழ்ந்தாடு மமலனடிக் கமலங்களை
அகத்தி ஞன்கோற்
றேனஞ்சு மதுரகவி மொழிநிபுணன் யான்புல்லர்ச்
சேர்ந்தே னன்றை
வானஞ்சு கொடைத்தடக்கை வள்ளலெனத் துதித்திளையா
வண்ணஞ் செய்த
கோனஞ்சு குணத்தியாக ராஜவள்ளல் மிகமகிழ்வு
கொண்டு காண்க."

[ஆனஞ்சு - பஞ்ச கவ்வியம். கோல் தேன் - கொம்பத்தேன். புல்லர் - அறிவிலிகளை. வானம் - மேகம். செய்த கோன் அம் சுகுணத் தியாகராஜனென்க.]

எனக்குத் தம்முடைய உத்தியோகத்தைத் தரச் செய்து வேறு ஜீவனோபாயம் தேடித் திகைக்காமல் வைத்த பேருபகாரத்தை நினைத்தே இங்ஙனம் பாடினேன்.

அந்தக் கடிதத்திற்கு விடையாகச் செட்டியார், "கோற்றேனஞ்சுகவி கோற்றேனஞ்சுகவியாகவே இருந்தது. மார்ச்சு மாதம் முதல் தேதியில் சென்ற 24 மாதங்களின் சம்பளங்கள் ரூ. 403-13-4 பெற்றுக்கொண்டேன். இதை எல்லோருக்கும் தெரிவிக்கவேண்டும்" என்று 2-3-1882-இல் எழுதினார். இந்த நல்ல செய்தியை யாவருக்கும் தெரிவித்துவிட்டுப் பின்வரும் பாடற் கடிதத்தைச் செட்டியாருக்கு வரைந்து அனுப்பினேன்.

"நயங்குலவு புலவர்சிகா மணியாகித் திருத்தில்லை
நடரா ஜன்றாட்
புயங்குலவு பத்திமையில் வாகீச மணியாகிப்
பயனே யோராக்
கயங்குலவு புன்புலமை யிருட்கொருவிண் மணியாகிக்
கவினுற் றோங்கும்
வயங்குலவு புகழ்த்தியாக ராஜநா வலவணிது
மகிழ்ந்து காண்க."

[நயம் - அன்பு. வாகீச மணி - திருநாவுக்கரசர். கயம் - கீழ்மை. விண்மணி - சூரியன்.]

"நிறந்தயங்கு நீவிடுத்த கடிதமின்று வரப்பெற்று
நின்ற நாட்குச்
சிறந்தவுப காரச்சம் பளம்பெற்ற செய்தியையான்
தெரிந்தே நெஞ்சின்
விறந்தமகிழ் வெய்தியுநின் னன்புடையோர் பலர்க்கு மிது
விளம்பல் செய்தேன்
உறந்தபுகழ்க் கோபால மகிபாலன் றனக்குமிஃ
துரைத்திட் டேனால்."

[விறந்த - மிக்க. உறந்த - மிகுதியான.]

"அக்காலத் தூன்கடிதந் தனக்குமொன்று வந்ததெனை
அறைந்தா னன்னான்
திக்காலும் புகழ்த்துறைசை வளர்குருசுப் பிரமணிய
தேவ னென்னை

*எக்காலும் புரந்தருள்வோன் றரிசனத்திற் கியான்சென்ற*
*எல்லை யன்றோன்*
*மிக்காலும் புகழ்கினது சவுக்கியமும் நின்வரவும்*
*விளையி னுறல்.''*
[*எல்லை - சமயத்தில்.*]

இக்கடிதத்தைக் கண்ட செட்டியார் தம்முடைய மகிழ்ச்சியை அடுத்த கடிதத்தில் (14-3-1882) ஒரு பாட்டால் தெரிவித்தார்:

*''கோற்றேனுந் தீங்கனியுங் கூறு மிதனினிமைக்*
*காற்றேமென் றஞ்சி யகலவே—சாற்றுகவி*
*நாவலன்சீர் சேர்சாமி நாதமறை யோன்புலவர்*
*காவலனு வக்கவிது கண்டு.''*
[*ஆற்றேம் - நிகராக நிற்கமாட்டோம்.*]

மனம் ஒரு வழியில் உத்ஸாகமூட்டப் பெற்றால் அத் துறையிலே நம்முடைய முயற்சிகள் ஒன்றன்மேல் ஒன்றாக விருத்திபெற்று வளரும். எனக்கும் தியாகராச செட்டியாருக்கும் இடையே இந்தக் கடிதப் போக்கு வரத்துக்களிற் பல செய்யுட்கள் பிறந்தன. என் செய்யுட்களைச் செட்டியார் இந்த வெண்பாவினால் பாராட்டவே மறுபடியும் நான் ஒரு பாடலை எழுதினேன். செட்டியாரைப் பாராட்டுவதற்கு ஒரு விஷயமும் கிடைத்தது.

மேலே சொன்ன பாட்டு, கோற்றேன் என்று ஆரம்பித்து, கண்டு என முடிவு பெறுகிறது. கண்டு என்பதைச் செட்டியார் வேறு பொருளில் வைத்திருந்தாலும், அந்தச் சொல்லுக்குக் கற்கண்டு என்ற பொருள் இருப்பது என் நினைவுக்கு வந்தது. உடனே, 'உங்களுடைய பாட்டு ஆதியும் அந்தமும் தேனும் கற்கண்டுமாக இனிக்கிறது' என்ற கருத்தோடு ஒரு செய்யுளை எழுதி அனுப்பினேன்.

*''தன்னினிமை தனைச்சிறிதுந் தேராத வென்னனையா*
*தாமுந் தன்பால்*

மன்னினிமை தனைக்கண்டு மகிழ்ந்திடுமா முதலிறுதி
மாட்டே கோற்றேன்
துன்னினிமைக் கண்டுபெறு தலைப்பாவைக் கொண்டுவகை
துன்னி னேனால்
மன்னினிமைப் புகழ்மிகுத்த தியாகரா சப்பெயர்கொள்
பாவ லோனே.''

[தனது இனிமையைச் சிறிதும் தெரியாத என்னைப் போன்றவர்களும் அவ்வினிமையை அறிந்து மகிழும்படி முதலிலும் இறுதியிலும் முறையே கோற்றேன், கண்டு என்னும் சொற்களையுடைய வெண்பாவைப் பெற்று மகிழ்ச்சியை அடைந்தேன். தலைப்பா - முதற்பாவாகிய வெண்பா; கடிதத்தின் தலைப்பிலுள்ள பாடலென்றும் பொருள்படும்.]

இவ்வகைச் செய்யுள் விளையாடல்களிலே பெற்ற மகிழ்ச்சியையும், பென்ஷன் பெற்ற மகிழ்ச்சியையும் தெரிவிப்பதற்குச் செட்டியார் நேரே கும்பகோணத்திற்கு வந்துவிட்டார். தம் நண்பர்களையெல்லாம் கண்டு மகிழ்ந்து ஸல்லாபம் செய்து சில நாள் தங்கியிருந்து மீட்டும் திருவானைக்காவுக்குச் சென்றார்.

---

## 38. திருக்குடந்தைப் புராணப் பதிப்பு

திருவானைக்காவில் செட்டியார் வசித்து வந்த காலத்தில், பிள்ளையவர்களிடத்தில் தாம் முன்பு பாடங் கேட்ட நூல்களை மீட்டும் படித்து இன்புற்று வந்தார். தம்முடைய ஆசிரியர் இயற்றிய நூல்களில் அச்சில் வராதவற்றை வெளிப்படுத்த வேண்டுமென்பது இவருடைய அவா. கோயிலூர்ப் புராணத்தையும், திருவிடைக் கழி முருகர் பிள்ளைத் தமிழையும் அச்சிட்டார்; அப்பால் கும்பகோண ஸ்தலபுராணமாகிய திருக்குடந்தைப் புராணத்தை வெளியிட ஏற்பாடு செய்தார்.

செட்டியார் இயற்றிய உமையம்பிகை பிள்ளைத் தமிழை முன்பு தஞ்சைச் சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் சென்னப்பட்டணத்தில் வைத்திருந்த வித்தியாவர்த்தினி அச்சுக்கூடத்திற் பதிப்பித்துத் தந்தார். அந்தப் பழக்கத்தால், திருக்குடந்தைப் புராணத்தையும் அவர் மூலமாகவே அச்சிடலாமென்று செட்டியார் எண்ணினார். அது முடியாமற் போகவே ஸ்ரீ சோமசுந்தர நாயகர் மூலமாக அதனை அச்சிடத் தொடங்கினார்.

கையெழுத்துப் பிரதியை அச்சுக்குச் சித்தம் செய்து கொடுக்கும் வேலையைச் செட்டியார் என்பால் ஒப்பித்தார். நான் அவ்வாறே செய்தேன். சென்னை மெமோரியல் அச்சுக்கூடத்திற் புராணம் அச்சாகி வந்தது. செட்டியாரும் நானும் 'புரூப்'பைப் பார்த்துத் திருத்தியனுப்பினோம். கும்பகோணத்தில் பேட்டைத் தெருவிலும் மகாதளம் பேட்டைத் தெருவிலும் இருந்த சைவச் செல்வர்கள் அப்பதிப்புக்குப் பொருளுதவி செய்தார்கள்.

சுபானு வருஷம் ஆனி மாதம் (1883, ஜூன்) குடந்தைப் புராணம் அச்சிட்டு நிறைவேறியது. எங்கள் இருவராலும் பதிப்பிக்கப்பட்டதென்று முகப்புப் பக்கத்தில் அமைக்கச் செய்தார் செட்டியார். ஸ்ரீ சோமசுந்தர நாயகர் அதற்குச் சிறப்புப்பாயிரம் அளித்தார். அதில் இறுதி இரண்டு செய்யுட்கள் வருமாறு:—

"என்ன புண்ணிய நம்மிடை யிருந்தவா வென்று
சொன்ன தேசிகன் கட்டளை சிரமிசைச் சுமந்து
மின்னு மப்புரா ணஞ்செய்த வினைமுத லானோன்
தன்னி டைக்கற்ற நன்றியுந் தவாதுளத் தெண்ணி."

"திருவ ருங்கலைச் சாமிநா தப்பெயர் சேர்ந்த
பொருவ ரும்பெரு மறையவன் கலையுணர் புலமை
ஒருவ ரும்புகழ்த் தியாகரா சப்பெய ருரவோன்
இருவ ரும்பதிப் பித்துநல் கினரிலங் குறவே."

[இருந்தவா - இருந்தவாறு. தேசிகனென்றது சுப்

பிரமணிய தேசிகரை. வினைமுதலானோன் - ஆசிரியராகிய பிள்ளையவர்கள். தவாது - நீங்காமல். பொரு - ஒப்பு. ஒருவரும் - நீக்குதற்கரிய. உரவோன் - அறிவுடையோன்.]

---

## 39. நூற்பதிப்புகள்

திருவானைக்காவில் தியாகராச செட்டியார் இருப்பதை யறிந்து பல தமிழ்ப் பண்டிதர்களும் இவர்பாற் படித்த மாணாக்கர்களும் இவரிடம் அடிக்கடி வந்து பேசிச் செல்வார்கள்; தமிழ் நூல்களில் தங்களுக்குள்ள சந்தேகங்களையும் கேட்டுத் தெரிந்துகொள்வார்கள்; பழைய செய்திகளையெல்லாம் பேசி இன்புறுவார்கள். சிலர் இவரிடம் சில நூல்களைப் பாடங்கேட்டு வந்தார்கள்.

தபால் இலாகா ஸூபரிண்டெண்டாக இருந்த ம. வீ. கனகசபைப் பிள்ளை என்பவர் திரிசிரபுரத்தில் இருந்தார். யாழ்ப்பாணத்தினராகிய அவர் தமிழ் அன்பு மிக்கவர்; தமிழர் சரித்திர சம்பந்தமான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். தமிழிலுள்ள பழைய நூல்களைப் படித்து ஆராய்ந்தார். பழஞ்சுவடிகளைத் தக்கவர்களைக் கொண்டு பிரதி செய்வித்துப் படித்தார். அவர் தியாகராச செட்டியாரிடம் வந்து தமிழ் சம்பந்தமாக உரையாடி இருந்துவிட்டுச் செல்வது வழக்கம். ஒரு சமயம், "மணிமேகலை ஏட்டுச் சுவடி கிடைத்தால் நலமாக இருக்கும்" என்று செட்டியாரிடம் அவர் தெரிவித்தார். என்னிடம் அச்சுவடி இருப்பது தெரிந்த செட்டியார் எனக்கு எழுதினர். நான் சுவடியிலிருந்து ஒரு பிரதி செய்வித்து அனுப்பினேன்.

பிள்ளையவர்களுடைய நூல்களைப் பதிப்பிக்கச் செட்டியார் முயன்றார். உடனுள்ள மாணாக்கர்களின் உதவியைக் கொண்டு பிரதி செய்வது முதலிய காரியங்

களை நிறைவேற்றிக்கொண்டார். திருவானைக்காவல் அகிலாண்டேசுவரி மாலை, திருத்தவத்துறைப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ் என்னும் இரண்டும் இவரால் பதிப்பிக்கப் பெற்றன.

இவர் தாம் சேமித்து வைத்த பொருளில் ஒரு பகுதியைக் கொண்டு பூவாளூர் நடராஜருக்கு ஒரு மண்டபம் அமைத்தார். எஞ்சிய பணத்திற்கு நிலங்கள் வாங்கி நடராஜப் பெருமானுக்கு நித்திய பூஜையும் ஆருத்ரா தரிசன உத்ஸவமும் நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார். அடிக்கடி பூவாளூர் சென்று வருவார். சில சமயங்களில் நானும் உடன் போய் வந்ததுண்டு.

பூவாளூர் ஸ்தல மான்மியத்தை உணர்த்தும் புராணம் ஒன்று தமிழ்ச் செய்யுள் உருவத்தில் திருவாவடுதுறை யாதீனத்தைச் சேர்ந்த கச்சியப்ப முனிவரால் இயற்றப்பெற்றிருக்கிறது. அதனை அச்சிட வேண்டுமென்று பூவாளூரில் இருந்த செட்டிமார்கள் விரும்பவே இவர் அங்ஙனமே 1885-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் அதனை வெளியிட்டார். அப்போது அப்பதிப்புக்கு ஒரு சிறப்புப் பாயிரம் வேண்டுமென்று எனக்கு எழுதினார். திருவாவடுதுறை யாதீனத்தைப்பற்றிச் சிறப்பாகச் சொல்லவேண்டுமென்பது இவர் விருப்பம். அவ்வாதீனத்திலே பயின்ற எனக்கு அது மிகவும் சந்தோஷத்தை உண்டாக்கியது. செட்டியார் விரும்பியபடியே 14 பாடல்களால் ஒரு சிறப்புப் பாயிரம் எழுதி அனுப்பினேன். நான்கு பாடல்கள் திருவாவடுதுறை யாதீனச் சிறப்பை விளக்குவன.

"பரிசுபெற வுட்புகுவோர் பரிசுபெற்று வெளிவருவோர்ப்
பார்த்து நீவிர்
அரசரெந்த நாட்டினுக்கென் றிடச்சிலரின் றிங்கரச
ரானே மீங்கு

விரசுமுன மேயரச ரிவர்முன்னம் யாமுமிடி
வேந்த ரென்றே
இரசமுற வெதிர்விடுக்கும் விதம்பெரிய கொடைச்செல்வம்
இயைந்த தாகி''

[விரசுமுனமே - கலக்குமுன்னமே. மிடிவேந்தர் - தரித்திர அரசர். இரசம் - சுவை.]

ஆங்கொருசார் சிலரிருந்து பாணுக்கர்க் கியற்றமிழை
அன்பி னோத
ஆங்கொருசார் சிலரிருந்து வடமொழிநூற் றிறவாதம்
ஆற்றி மேவ
ஆங்கொருசார் சிலரிருந்து சிவபுரா ணக்கதைகள்
அமிழ்திற் சொல்ல
ஆங்கொருசார் சிலரிருந்து முப்பொருளி னியறேர
அமைந்த தாகி.''

[முப்பொருளின் இயல் - பதி பசு பாச இலக்கணம்.]

''தண்ணியவா ரியமொழியுந் தமிழ்மொழியும் யாம்புரிமா
தவப்பே றென்றே
கண்ணியகங் களிதுளும்புங் கவினுடைத்தா யருட்சைவா
கமத்தை யாராய்ந்
தெண்ணியள வளவுபுதா மிருத்தலன் றி யொருவீடும்
இச்சி யாத
மண்ணியமா மணியனைய முனிவரர்கட் கிடமாய
மடால யத்தில்.''

[அளவளவு - அளவளாவி. மண்ணிய - கழுவிய.]

இப்பாடல்களில் அங்கே நான் அனுபவத்திற் கண்ட காட்சிகளை வருணித்தேன்.

செட்டியாருடைய சிறப்பை விளக்கும் கவிகளிற் சில வருமாறு.

''புவியரசர் புகழ்பெருமை மீனாட்சி சுந்தரப்பேர்
பூண்ட நான்மைக்

கவியரசி னிடைக்கற்ற கடிமலர்க்கற் பகமெனது
காம தேனு
சவியமையக் கல்லாப்புன் புலமைவனத் தினைத்தானே
தடிந்து மேவும்
நவியமடுத் தவர்களைத்தன் போலாக்குந் தன்மைமரீஇ
நகுமா மேரு."

[சவி - ஒளி. நவியம் - கோடரி.]

"நத்தனய னாதியர்கள் பணிந்தேத்தும் பூவாளூர்
நடராச ற்கு
நித்தியமா திகளென்றுந் தணவாது நடப்பவினை
நிலங்கண் மேன்மை
பொத்தியபுன் ணியவழிதா னிட்டுபொருள் கொடுவோங்கிப்
பொருத்து நல்லோன்
சத்தியஞா னினிமைத் தியாகராச சப்பெயர்கொள்
தமிழ்வல் லோனே."

[நத்தன் - திருமால். தணவாது - நீங்காமல்.]

---

## 40. உறையூர் வாசம்

செட்டியாருக்கு வரவரக் கண்பார்வை குறையத் தொடங்கியது. தேகமும் மெலிவுற்றது. உறவினர்களுடன் இருந்து வரவேண்டுமென்று எண்ணிய இவர் திருவானைக்காவை விட்டுச் சில காலம் திரிசிரபுரத்தில் இருந்தார். அப்பால் உறையூருக்குச் சென்று அங்கேயே வசிக்கத் தொடங்கினார். அங்கே இவருடைய உறவினர்கள் பலர் இருந்தனர். அவருள் ஒருவராகிய அண்ணாமலை செட்டியார் என்பவர் திரிசிரபுரத்திற்கே வந்து இவரை அழைத்துச் சென்று தம்முடைய வீட்டில் ஒரு பாகத்தில் இருக்கும்படி செய்து கவனித்து ஆதரித்துவந்தார்.

ஒரு நாள் உடையார்பாளையத்திலிருந்து முதியவரான புலவர் ஒருவர் வந்தார். தாம் அவ்வூர் ஸ்தல

புராணத்தைத் தமிழிற் பாடியிருப்பதாகச் சொல்லி அதற்குச் சிறப்புப்பாயிரம் கொடுக்கவேண்டுமென்று செட்டியாரிடம் மன்றாடினர். சில செய்யுட்களைப் படிக்கச் செய்து செட்டியார் கேட்டார். அங்கங்கே பல வகையான பிழைகள் இருந்தன. செய்யுளோசை சில இடங்களில் நன்றாக இல்லை. அவற்றை உணர்ந்த செட்டியார் சிறப்புப்பாயிரம் தர இயலாதென்று சொல்லிவிட்டார். அந்தக் கிழவரோ விட்டபாடில்லை. "நீங்கள் சிறப்புப்பாயிரம் தராவிட்டால் நான் உங்கள் வீட்டு வாசலிலே பட்டினி கிடப்பேன்" என்று பிடிவாதம் செய்யத் தொடங்கினர். நயமாகவும் பயமாகவும் இவர் என்ன என்னவோ சொல்லிப் பார்த்தார். அவர் கேளாமல் மேலும் மேலும் வற்புறுத்தினர்; "இவ்வீட்டை விட்டுப் போகவே மாட்டேன்" என்று போராடினர். வேறு வழி இல்லாமல் செட்டியார் சிறப்புப்பாயிரம் தர இசைந்தார். ஐயாத்துரை என்பவருக்கு முன்பு சிறப்புப் பாயிரந் தந்ததைப்போல முடிந்தது அது.

"சீர்பூத்த புண்டரிகக் கேத்திரமா மாத்தலத்தின்
சிறப்பென் றெண்ணிப்
பார்பூத்த தமிழினால் அருணாச லக்கவிப்பேர்
படைத்த சுத்தன்
கார்பூத்த ஞானத்தால் நகைமலிய வெளிதாகக்
கற்ற தன்மை
பேர்பூத்த வுலகறியப் புராணமெனப் பெயரிட்டுப்
பேசி னானே."

[புண்டரிகக் கேத்திரம் - உடையார்பாளையம். கார் பூத்த ஞானம் - கருமையுடைய ஞானம்; அறியாமை; மேகம்போலக் குளிர்ந்த தன்மை பெற்ற ஞானமென்றும் பொருள்படும். நகை - சிரிப்பு; மகிழ்ச்சி. எளிதாகக் கற்ற தன்மை - பெருகக் கல்லாமல் சிறிதே கற்ற இயல்பை; வருத்தமின்றிக் கல்வி கற்ற இயல்பை.]

இரண்டுவித அர்த்தம் அமையும்படி பாடிய இதனைக் கிழவர் கையில் கொடுத்து, "போய்வாருங்கள்" என்று செட்டியார் சொன்னார். அவரோ அதோடு விடவில்லை. "கும்பகோணம் தமிழ்ப்பண்டிதர் சாமிநாதையரிடமும் ஒரு சிறப்புப்பாயிரம் வாங்க வேண்டும். அவருக்கு நீங்கள் ஒரு கடிதம் தந்தால் உபகாரமாக இருக்கும்" என்றார். 'எப்படியாவது இவர் விரைவில் நம்மை விட்டாலே போதும்!' என்ற எண்ணத்தால் செட்டியார் ஒரு சிறு குறிப்பு எழுதி அளித்து விடை கொடுத்தார்.

அவர் கும்பகோணம் வந்து அதனை என்னிடம் கொடுத்துச் செட்டியார் பாடலையும் சொல்லிக் காட்டி, "எப்படி இருக்கிறது, பார்த்தீர்களா!" என்றார்.

செட்டியாருடைய விஷமத்தை அறிந்து நான் மனத்துக்குள்ளே நகைத்தேன்; "உங்கள் திறமை இன்னதென்று இது நன்றாகத் தெரிவிக்கிறது" என்று சொன்னேன். உடனே அவர், "நீங்களும் இப்படி ஒன்று பாடித் தரவேண்டும்" என்று நயந்து வேண்டினார்.

"அப்படியே தருகிறேன்" என்று சொல்லிச் செட்டியாருடைய போக்கைப் பின்பற்றி ஒரு வெண்பா இயற்றிக் கொடுத்தேன். "ஆலகால விஷத்தையே உண்ட சிவபெருமான் எந்தக் குற்றத்தையும் பொறுப்பாரென்ற கருத்தால் முற்கபுரி மான்மியமென்ற பெயரோடு ஒரு நூலைச் சொன்னான்" என்ற கருத்துடைய அப்பாடல் வருமாறு;

"செற்றம் புரிவிடமுண் செய்கைகண்டிம் மாதேவன்
குற்றம் பொறுப்பனெனக் கொண்டுதன்பால்—உற்றூர்
மருணீங்கு முற்கபுரி மான்மியமென் றேயொன்
றருணு சலனறைந்தா னால்."
[முற்கபுரி - உடையார்பாளையம்]

அந்த அப்பாவிக் கிழவர் அதையும் வாங்கிக்கொண்டு போய்விட்டார்.

சில நாட்களின் பின்னர் நான் செட்டியாரைப் பார்க்கச் சென்றபோது, "அவர் வந்தாரா?" என்று கேட்டார். அவர் இன்னாரைக் குறிப்பிடுகிறாரென்று உணர்ந்த நான், "வந்தார்; உங்கள் பாடலைக் காட்டி அதேமாதிரி ஒன்று வேண்டுமென்றார். நான் ஒன்று கொடுத்தேன்" என்று சொல்லிப் பாடலையும் சொன்னேன். செட்டியார் சிரித்துவிட்டு, "நன்றாகப் பதங்களை வைத்திருக்கிறீர்கள். அருணாசலக்கவிப்போர் படைத்த சுத்தனென்று நான் சொன்னேன். நீங்கள் மொட்டையாக அருணாசலனென்று சொல்லிவிட்டீர்கள். பாடினான், இயற்றினான், புனைந்தான் என்றெல்லாம் சொல்ல மனம் வராமல் 'புராணமெனப் பெயரிட்டுப் பேசினனே' என்று நான் சொன்னேன். நீங்கள் 'அறைந்தான்' என்று அமைத்தது அதிக ஸ்வாரஸ்யமாக இருக்கிறது. சில பாடல்களைப் படிக்கச் செய்து கேட்டபோது என் காதில் அறைந்த மாதிரியே விழுந்தன. நன்றாகச் சொன்னீர்கள்!" என்றார்.

அக்காலத்தில் செட்டியாரைப் பின்பற்றி இவ்வாறு நான் பாடினாலும் பிற்காலத்தில் அவ்வாறு செய்ததைப் பற்றி இரங்கினேன்.

---

## 41. சென்னைப் பிரயாணம்

தியாகராச செட்டியாருக்கு வரவரக் கண் ஒளி குறைந்து வந்தமையால் நூல்களைப் படித்து இன்புற இயலாமல் போயிற்று. தக்க வைத்தியரிடம் காட்டலாமென்று சில அன்பர்கள் யோசனை கூறினார்கள். சென்னையில் கண்வைத்தியத்தில் சிறந்தவர்கள் உள்ளார்களென்றும், அங்கே சென்று பார்ப்பதே நலமென்றும், வேறு இடங்களில் பார்த்தால் பின்னும் துன்பம் உண்டாகு

மென்றும் சிலர் கூறினர். அதன் பின் செட்டியார் சென்னைக்கே போய்வருவதாக நிச்சயித்தனர்.

1885-ஆம் வருஷம் மே மாதம் செட்டியார் தம் குடும்பத்தினர் சிலருடன் சென்னைக்குப் பிரயாணமானார். சென்னை வந்து சேலம் இராமசாமி முதலியார் பங்களாவில் அவர் விரும்பியபடி சில காலம் தங்கியிருந்தார். பிறகு திருமயிலை (மயிலாப்பூர்) அரிசிக்காரத் தெருவில் இருந்தவரும் ஸர்வகலாசாலைப் புத்தகசாலைப் பாதுகாப்பாளருமாகிய வைத்தியநாத சாஸ்திரியாரின் உதவியைக்கொண்டு மயிலாப்பூரிலேயே சில நாள் இருந்தார். அப்பால் எழும்பூரில் சோடசாவதானம் தி. கா. சுப்பராய செட்டியார் வீட்டிற்கு அருகில் ஒரு ஜாகை வைத்துக்கொண்டு அதில் இருந்து வந்தார்.

செட்டியாரிடம் படித்தவர்கள் பலர் அக்காலத்தில் சென்னையில் வேலையில் இருந்தார்கள். அவர்கள் மூலமாகவும் வேறு வழியாகவும் இவருடைய புலமையைப் பலர் உணர்ந்திருந்தனர். செட்டியார் சென்னைக்கு வந்திருப்பதை அறிந்த அவ்வன்பர்கள் மிக்க ஆவலோடு வந்து இவரைக் கண்டு பேசி இன்புற்றுச் சென்றனர். சிலர் தங்கள் தங்கள் விடுதிகளுக்கு அழைத்துச் சென்று உபசரித்தனர். பூண்டி அரங்கநாத முதலியார், பம்மல் விஜயரங்க முதலியார் முதலிய கனவான்கள் செட்டியாரைச் சந்தித்து ஸல்லாபம் செய்து பாராட்டினர்; 'காஸ்மோபாலிடன் கிளப்'பிற்கு அழைத்துச் சென்று தம்முடைய நண்பர்களைப் பழக்கம் செய்துவைத்தனர். அவர்களோடு பேசிப் பழகும்போதெல்லாம் செட்டியார் தமிழ்ச் செய்யுட்களைச் சொல்லியும், காலேஜ் அநுபவங்களை எடுத்துரைத்தும், பிள்ளையவர்களைப்பற்றிப் பேசியும் பொழுது போக்கினர். நீதிநெறி விளக்கம், குசேலோபாக்கியானம், கம்ப ராமாயணம் முதலிய நூல்களை இவரிடம் காலேஜில் பாடங் கேட்ட அன்பர்கள், "ஐயாவை இப்போது சந்தித்தது

எங்கள் பாக்கியம். காலேஜில் வாசித்த காலம் ஞாபகத் துக்கு வருகிறது. தாங்கள் அந்த நூல்களிலிருந்து சில பாடல்களைச் சொல்லிப் பொருள் கூறவேண்டும்; கேட்க ஆவலாக இருக்கிறது'' என்று மிக்க விருப்பத்தோடு கேட்கவே செட்டியார் அங்ஙனமே தமக்கு இயல்பான குரலில் அச்செய்யுட்களைச் சொல்லிக் காட்டினுர்; பொருளையும் விளக்கிச் சொன்னுர்.

அரிசிக்காரத் தெருவில் இவர் தங்கியிருந்த வீட்டிற்கு எதிரே ஒரு வீட்டுத் திண்ணையில் ஒருவர் பள்ளிக்கூடம் வைத்திருந்தார். 'இந்தப் பட்டணத்தில்கூடத் திண்ணைப் பள்ளிக்கூடம் இருக்கிறதா?'' என்று இவர் ஆச்சரிய முற்ருர். அந்தப் பள்ளிக்கூட உபாத்தியாயர் பிள்ளை களுக்கு மூதுரை, திருவேங்கட சதகம், குமரேச சதகம், திருவரங்கக் கலம்பகம், அருணைக் கலம்பகம், பாரதத்தில் கிருஷ்ணன் தூது முதலியவற்றை அவர்கள் தகுதிக்கு ஏற்றபடி இசையோடு சொல்லிக்கொடுத்துக்கொண் டிருந்தார். மாணுக்கர்கள் பயபக்தியுடன் பாடம் கற்றுக் கொண்டதன்றிப் பாடல்களை இசையோடு சொல்லி வந்தார்கள். இவற்றைக் கண்ட செட்டியாருக்கு அளவற்ற திருப்தி உண்டாயிற்று.

அக்காலத்தில் நான் ''மத்தியார்ஜுன மான்மியம்'' என்னும் புத்தகத்தை அச்சிடும்பொருட்டுச் சென்னைக்கு வந்திருந்தேன். செட்டியாரைப் பார்த்து அவருடன் இருந்துவரலானேன். ஒரு நாள் எதிரில் இருந்த திண்ணைப் பள்ளிக்கூடத்தில் திருவரங்கக் கலம்பகம் பாடம் நடந்து வந்தது. பிள்ளைகள் இசையோடு பாடல்களை ஒப்பித்தார் கள். செட்டியார் என்னைப் பார்த்து, 'கிராமங்களில்கூட இந்த வழக்கம் இப்போது குறைந்து வருகிறது. பாடல் களை இசையோடு சொல்வதும், ஒப்பிப்பதுமாகிய வழக்கங் களை இங்கே கண்டு மிக்க ஆனந்தமடைந்தேன். காலேஜில் தமிழ்ப் பாடம் நடக்கிறதே; அதனுல் என்ன பயன்?

இப்படி இரண்டு வருஷங்கள் படித்தால் போதுமே; உள்ளத்துக்குள்ளே தமிழ் ஊறிவிடுமே" என்றார். இவர் கூறியவற்றை நானும் ஒப்புக்கொண்டேன். நாங்கள் இருவரும் அப்பள்ளிக்கூடத்துக்குச் சென்று உபாத்தியாய ரோடு பேசி அவரைப் பாராட்டிவிட்டு வந்தோம்.

"சென்னை வாழ்க்கை எப்படி இருக்கிறது?" என்று இவரைக் கேட்டேன்.

"எனக்கு இவ்விடம் திருப்திகரமாகவே இருக்கிறது. ஜனங்கள் சாதுக்களாகவும் தமிழருமை தெரிந்தவர்களாக வும் இருக்கிறார்கள். சிலர் பாடல்கள் சொல்லுகிறார்கள். என்னையும் சொல்லச் செய்து கேட்கிறார்கள். பெரிய உத்தியோகஸ்தர்களாக இருந்தாலும் மரியாதையாக இருக்கிறார்கள். சோம்பேறிகளே பெரும்பாலும் இங்கே இல்லை. நான் ஆரம்பத்தில் வந்தபோது சில வார்த்தை களுக்குப் பொருள் விளங்காமல் திகைத்தேன். பிறகு தெரிந்துகொண்டேன்" என்றார்.

"எந்த வார்த்தைகள்?" என்று கேட்டேன்.

"தமிழ்தான்; ஆனாலும் நம் பக்கத்தில் கேட்ட வழக்கமில்லை. 'என்னாங்க' என்று ஒரு வகையான ஸ்வரத்துடன் பீடிகை போட்டுக்கொண்டு பேச ஆரம்பிக் கிறார்கள். அண்ணாத்தை, அப்பேன், இஸ்துக்னு முதலிய பல புதிய வார்த்தைகளை இந்த நகரத்திலேதான் கேட்டேன். ஒருவர், 'இன்றைக்குச் சனிக்கிழமை; ஸ்நானம் பண்ணினேன்' என்றார். 'இதென்ன வேடிக்கை யாக இருக்கிறதே! வாரத்துக்கு ஒரு முறைதான் ஸ்நானம் செய்வாரா என்ன?' என்று முதலில் யோசித்தேன். பிறகுதான் எண்ணெய் தேய்த்து நீராடுவதை ஸ்நானம் செய்ததாகச் சொல்லுவது இவ்வூர் வழக்கென்று தெரிய வந்தது. 'நம் வீட்டில் பிரயோஜனம்' என்று ஒருவர் அழைத்தார். அவர் அழைப்பு எனக்கு விளங்குவதற்கு இரண்டு நாட்களாயின. எங்கே போனாலும் செங்கல்வ

ராயன் என்ற பெயரைக் கேட்டுக் கேட்டுச் சலிப்பு உண்டாகிவிட்டது. அந்தப் பெயர் திருத்தணிகை ஆண்டவன் பெயரென்று தெரிந்த பிறகுதான் அந்தப் பெயரின் மேல் இருந்த வெறுப்பு நீங்கிற்று.''

இவ்வாறு சென்னையில் வழங்கும் வார்த்தைகளைக் குறித்து ஓர் அத்தியாயம் ரஸமாகச் சொன்னார்.

கண் வைத்தியம் செய்பவர்களைப் பற்றிச் செட்டியார் விசாரித்துப் பெரியமெட்டில் இருந்த அச்சிறுபாக்கம் குமாரசாமி முதலியார் என்ற வைத்தியரிடம் சென்று கண்ணைக் காட்டினார். அவர் பரிசோதித்துவிட்டு, ''ரத்தம் குறைந்துகொண்டு வருகிறது; கண்நோய் நீங்காது. ஊருக்குப் போய்ச் சௌக்கியமாய் இருங்கள்'' என்று சொன்னார். அப்பால் பிராக்மன் என்னும் ஆங்கிலேய டாக்டரிடம் காண்பித்தார். அவர் ரெவரெண்டு ஜி. யூ. போப்பின் மருகர். இவர் சிறந்த தமிழ்ப் புலவரென்பதை அறிந்து சிரத்தையோடு அவர் பரீட்சை பண்ணிப் பார்த்தார். ''இனிமேல் இதற்குச் சிகிச்சை இல்லை'' என்று அவரும் சொல்லிவிட்டார். செட்டியாருக்கு அதிக வருத்தம் உண்டாயிற்று. சென்னைக்கு வந்த காரியம் அநுகூலமாகாவிட்டாலும் பல பழைய நண்பர்களைப் பார்த்ததும் புதிய அன்பர்களது பழக்கம் ஏற்பட்டதும் இவருக்கு ஓரளவு ஆறுதலை உண்டாக்கின. சென்னையிலிருந்து புறப்பட்டுத் திருவாவடுதுறை வந்து சேர்ந்தார்.

---

## 42. திருவாவடுதுறை வாசம்

திருவாவடுதுறையில் அக்காலத்தில் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் தமக்குப் பின் ஆதீனத் தலைமைப் பதவியை வகித்து நடத்துவதற்காக ஒருவரைச் சின்னப் பட்டத்தில் நியமித்திருந்தார். அம்பலவாண தேசிக

ரென்னும் அவர், தக்க பண்டிதர்களிடத்தில் தமிழும் ஸம்ஸ்கிருதமும் பாடங் கேட்டுவந்தார்.

செட்டியார் ஆதீனகர்த்தரைத் தரிசித்தபோது அவர், "நீங்கள் நல்ல சமயத்தில் வந்தீர்கள். சின்னப்பட்டத்திற்கு ஒருவரை நியமித்திருக்கிறோம். அவருக்குத் தமிழ் இலக்கண இலக்கியப் பாடங்களைச் சொல்லிக்கொண்டு இங்கே ஸௌக்கியமாக இருக்கலாம்" என்றார். செட்டியார் அவ்வாறே அங்கே தங்கிப் பாடம் சொல்லலானார். ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுக்குக் கொடுத்திருந்த விடுதியையே செட்டியாருக்கு அளித்துத் தவசிப் பிள்ளை ஒருவனை நியமித்து ஆகாரத்திற்கு வேண்டிய சௌகரியங்களையும் தேசிகர் செய்வித்தார்.

செட்டியார் பாடம் சொல்வதை அறிந்த பல கனவான்கள் ஆதீனகர்த்தரைத் தரிசிக்கும் போதெல்லாம் அப்படியே செட்டியாரையும் பார்த்துப் பேசி இன்புற்றுச் செல்வார்கள். செட்டியார் பாடம் சொல்லும்போது உடனிருந்து பலர் கேட்டு மகிழ்வார்கள். "செட்டியாரவர்கள் இங்கே வந்திருப்பது மடத்திற்குக் கௌரவமாக இருக்கிறது" என்று சுப்பிரமணிய தேசிகர் இவரைப் பாராட்டினார்.

அக்காலத்தில் மாயூரம் தாசில்தாராக இருந்த நாதமுனி கிருஷ்ணையங்காரென்பவர் திருவாவடுதுறையில் முகாம் போட்டுச் சில கிராமங்களைப் பார்வையிட எண்ணினார். தாம் தங்குவதற்குரிய விடுதி முதலியவற்றை அமைப்பதற்காக முன்னால் ஒரு சேவகனை அனுப்பினார். அந்தச் சேவகன் மடத்தின் முக்கியமான அதிகாரி ஒருவரைக் கண்டு விஷயத்தைச் சொன்னபோது, "இங்கே பல விடுதிகள் இருக்கின்றன. எது தாசில்தாரவர்களுக்குச் சௌகரியமாக இருக்குமென்று பார்த்துச் சொன்னால் அதை ஒழுங்கு செய்யச் சொல்லலாம்" என்றார் அவர். இவன் மடத்தைச் சார்ந்த விடுதிகளைப் பார்த்தான்

செட்டியார் தங்கியிருந்த இடம் நன்றாயிருப்பதை அறிந்து அதைத் திட்டம் செய்யும்படி அதிகாரியிடம் சொன்னான்.

"அதில் செட்டியாரவர்கள் இருக்கிறார்கள், வேறு எதையாவது சொல்லும்" என்றார் அதிகாரி.

"செட்டியார் இருந்தால் என்ன? அவரை வேறு இடத்துக்குப் போகச் சொல்லிவிடுங்கள். தாசில்தாரை விடச் செட்டியார் பெரியவரா?" என்றான் சேவகன்.

அதிகாரி அவன் அறியாமையைக் கண்டு சிரித்தார்; "அவரைப் போகச்சொல்வதென்பது முடியாத காரியம்" என்று சொல்லிவிட்டார்.

"உங்களுக்குப் பயமாக இருந்தால் நானே போய் அவரைக் கிளப்பிவிடுகிறேன்" என்று கூறிவிட்டுச் சேவகன் வெகு வேகமாகச் செட்டியார் இருந்த ஜாகையை அடைந்தான். செட்டியாரிடம், "உடனே இந்த இடத்தை விட்டு வேறு இடம் போக வேண்டும். எசமான் வரப் போகிறார்கள்" என்று சொல்லி நின்றான்.

செட்டியாருக்கு ஒன்றும் விளங்கவில்லை; "யாரப்பா உங்கள் எசமான்?" என்று கேட்டார்.

"தாசில்தாரையா வருகிறார்கள். அவர்களுக்கு இந்த இடந்தான் பிடித்திருக்கிறது. இதைக் காலி செய்து விடுங்கள்."

இவ்வாறு சேவகன் சொல்லிக்கொண் டிருக்கும் போது மடத்து அதிகாரி அங்கே வந்து அவனை மெல்ல அழைத்துக்கொண்டு அக்கிரகாரத்திற்குப் போனார். அங்கே ஸ்ரீ வைஷ்ணவர் ஒருவருடைய வீட்டைக் காட்டி, அவனை ஒப்புக்கொள்ளும்படி செய்து பந்தல் முதலியவை போட்டு எவ்வளவு சௌகரியம் செய்விக்க வேண்டுமோ அவ்வளவும் செய்வித்து அவனை அனுப்பிவிட்டார். அவனும் திருப்தியடைந்து போய்விட்டான். தாசில்தார் அந்த வீட்டில் வந்து இறங்கினார்.

திருவாவடுதுறையில் இருந்த ஒருவர் தம்மைச் சேர்ந்த ஒருவருக்குக் கர்ணம் வேலை செய்விக்கும்படி தாசில்தாரிடம் சிபார்சு செய்யவேண்டுமென்று தியாக ராச செட்டியாரிடம் சொன்னார். "தாசில்தார் எனக்குப் பழக்கமானவராக இருந்தால் சொல்கிறேன். அவர் பெயர் என்ன?" என்று செட்டியார் கேட்டுக்கொண்டு, "தாசில் தார் ஓய்வாக இருக்கும் சமயம் தெரிந்து வந்து சொன்னால் போய்ப் பார்க்கலாம்" என்றார்.

ஒரு நாள் பகல் பதினொரு மணிக்கு அந்த அன்பருடன் புறப்பட்டுத் தாசில்தாரைப் பார்க்கச் செட்டியார் சென்றார். தம் வரவைத் தாசில்தாருக்கு ஒருவரும் தெரி விக்க வேண்டாமென்று இவர் சொல்லியிருந்தார்.

தாசில்தார் அப்பொழுது ஜாகையின் திண்ணையில் வீற்றிருந்தார். பல செல்வர்கள் அவருக்குமுன் மிகவும் பணிவாக அமர்ந்திருந்தனர். வேறு சிலர் கையைக் கட்டிக் கொண்டு திண்ணையின் கீழே நின்றார்கள். பக்கத்து ஊர் களிலிருந்து வந்த கிராம உத்தியோகஸ்தர்கள் சிலரும் அங்கே நின்றார்கள். செட்டியாருடைய மதிப்பையும் புலமையையும் அறியாமல் அலட்சியமாக எண்ணும் இயல் பினர் சிலரும் அங்கே இருந்தனர். அவர்கள் இவர் வரவைக் கண்டு "இந்தக் கர்நாடகம் இங்கே எதற்கு வருகிறது?" என்று தமக்குள்ளே பேசிக்கொண்டார்கள்.

செட்டியார் வருவதைக் கண்ட தாசில்தார் திடீ ரென்று திண்ணையினின்று கீழே குதித்து, "ஐயா, வெயிலில் எங்கே நடந்து போகிறீர்கள்? இங்கே எப் போது வந்தீர்கள்? சௌக்கியமாக இருக்கிறீர்களா?" என்று கேள்வி கேட்டபடியே அவரை அணுகினார். தாசில்தார் கீழே குதிக்கவே திண்ணையில் உட்கார்ந் திருந்த கனவான்களெல்லாம் தடதடவென்று குதித் தார்கள்.

"நீங்கள் யார் தெரியவில்லையே? நான் இங்கே வந்திருக்கும் தாசில்தாரைப் பார்க்கப் போகிறேன்" என்றார் செட்டியார்.

"நான்தான் தாசில்தார்; தங்களுடைய சிஷ்யன். நாதமுனி கிருஷ்ணையங்காரென்பது என் பெயர், ஞாபகம் இல்லையா? பால்யத்தில் நீங்கள் எவ்வளவு அன்போடு பாடம் சொல்லிக்கொடுத்தீர்கள்!" என்று சொல்லிச் செட்டியாரை அழைத்து வந்து திண்ணையில் அமரச் செய்தார்.

செட்டியார், "எனக்குப் பார்வை சரியாக இல்லாமையால் உடனே உம்மைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. உம்மை நான் மறப்பதற்கு நியாயமில்லையே" என்றார்.

"நீங்கள் ஒருகால் மறந்துபோனாலும் நான் மறக்க மாட்டேன். உங்கள் அன்பின் பலனைத்தான் நான் இப்போது நல்ல பதவியில் இருக்கிறேன்" என்று சொல்லித் தாசில்தார் அருகில் இருந்த கனவான்களைப் பார்த்து, "இவர்கள் மிகப் பெரிய தமிழ் வித்துவானென்பது உங்களுக்குந் தெரிந்திருக்கும். இவர்கள் என் குரு. இவர்களிடம் ஸ்ரீரங்கத்தில் நான் படித்தேன். அதற்குப் பிறகு பல இடங்களில் படித்தாலும் இவர்களுடைய அன்பையும் கற்பிக்கும் அழகையும் நான் மறக்கவேயில்லை. ஆஹா! எவ்வளவு நன்றாகப் பாடம் சொல்லிக்கொடுப்பார்கள்! இவர்களிடம் கேட்ட பாடம் இன்னும் ஞாபகத்திலேயே இருக்கிறது" என்று பாராட்டிப் பேசலானார்.

செட்டியார், "நான் சொல்லிக்கொடுத்த பாடம் ஞாபகத்தில் இருக்கிறதென்று சொல்லுகிறீர்களே; இப்போது ஏதாவது ஒரு பாடல் சொல்ல முடியுமா?" என்று கேட்டார்.

"ஒரு பாடல் என்ன? நான் படித்த அவ்வளவு பாடல்களையும் சொல்லுகிறேன், கேளுங்கள். நன்னூற்சூத்திரங்

களை வேண்டுமானாலும் ஒப்பிக்கிறேன்" என்று சொல்லிச் சில செய்யுட்களைச் சொன்னார்.

"நன்றாயிருக்கிறது. உங்களுடைய விசுவாசத்தை நான் பாராட்டுகிறேன். எனக்கு இப்பொழுது வயசாகி விட்டது. கண் ஒளி குறைந்து போயிற்று. உங்களைப் போன்றவர்களுடைய விசுவாசம் இந்தத் தளர்ந்த நிலையில் எவ்வளவோ ஆறுதலை அளிக்கிறது" என்று செட்டியார் சொல்லவே உடனிருந்தவர்கள் பலர் மனம் உருகினர்.

"ஐயா அவர்களைப் பார்த்து எவ்வளவோ வருஷங் களாகிவிட்டன. இப்பொழுதாவது சந்திக்க நேர்ந்தது என் பாக்கியந்தான். இன்றைக்கு எனக்கு உண்டான சந்தோஷத்திற்கு அளவே இல்லை. உங்களிடம் பாடம் கேட்ட அந்தப் பால்ய நசையே வந்துவிட்டதுபோல இருக்கிறது" என்று தாசில்தார் கூறிக் குதுகலித்தார்.

இந்தக் காட்சிகளைச் செட்டியாருடன் சென்றிருந்த நான் கவனித்துவந்தேன்.

செட்டியார் தாசில்தாரைப் பார்த்து, "உங்கள் சேவகன் இருக்கிறானா?" என்று கேட்டார்.

"எந்தச் சேவகன்?"

"இங்கே ஜாகை பார்க்கும்பொருட்டு அனுப்பினீர் களே, அந்தச் சேவகனைத்தான் கேட்கிறேன். இங்கே இப்போது வந்திருக்கிறானா?"

இவர் வந்ததையும் தாசில்தார் இவரிடம் மரியாதை யாக நடந்துகொள்வதையும் பார்த்து அவன் அடங்கி ஒடுங்கி ஒரு மூலையில் நின்றுகொண் டிருந்தான். 'நல்ல வேளையில் இவர் புறப்பட்டுப் போகவேண்டும்' என்று அவன் அஞ்சிப் பதைபதைத்துக்கொண்டு நின்றான். செட்டியார் அவனைப்பற்றி விசாரித்தவுடனே அவனுக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று.

"ஏன் அவனைத் தேடுகிறீர்கள்?" என்று தாசில்தார் செட்டியாரைக் கேட்டார்.

தாசில்தார் சேவகன் இருந்த பக்கத்தில் தம் பார்வையைத் திருப்பினதுதான் தாமதம்; அவன் ஓட்டமாக ஓடி வந்து செட்டியாருடைய காலில் விழுந்து, "உங்களைத் தெரிந்துகொள்ளவில்லை, சாமி! மன்னிக்கவேண்டும்" என்று சொல்லிச் செட்டியார் காலிலும் தாசில்தார் காலிலும் விழுந்தான்.

தாசில்தாருக்கு விஷயம் விளங்கவில்லை. "என்ன சமாசாரம்?" என்று கேட்டார்.

செட்டியார் சேவகனைப் பார்த்து, "என்னப்பா உன்னுடைய எசமான் என்னிடத்தில் எவ்வளவு பிரியமாக இருக்கிறார் பார்த்தாயா? ஜாகையை விட்டு உடனே வேறு இடம் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று நீ கடுமையாக என்னிடம் சொல்லவில்லையா? இப்போது வந்து காலில் விழுகிறாயே! உன் எசமான் எவ்வளவு பணிவாக இருக்கிறார்! உன் எசமான் அதிகாரத்துக்குமேல் உன் அதிகாரம் இருக்கிறதே. இனியாவது மற்றவர்களிடம் ஜாக்கிரதையாக நடந்துகொள்ளப் பழகிக்கொள்" என்று சொல்லிவிட்டு முன் நிகழ்ந்ததை அங்கே இருந்தவர்களிடம் கூறினார். எல்லோரும் கேட்டு நகைத்தனர்.

"இப்படித்தான் நல்லவர்களுக்குக் கெட்ட பெயர் வாங்கிவைக்கும் பேர்வழிகள் உயர்ந்த இடங்களிலும் உத்தியோகசாலைகளிலும் இருக்கிறார்கள்" என்று தாசில்தார் சொன்னார்.

"நீங்கள் நல்ல பெயரையே வாங்கி வைக்கிறீர்கள். என்னுடைய அதிருஷ்டம் இது" என்று செட்டியார் கூறி மேலே தாம் வந்த விஷயத்தைச் சொல்லி அநுகூலமாக முடித்துக்கொண்டார்.

## 43. சேய்ஞலூர்ப் புராண முயற்சி

திருவாவடுதுறை மடத்தில் ஸ்ரீ அம்பலவாண தேசிகருக்குத் தமிழ்ப்பாடம் சொல்லிவந்த தியாகராச செட்டியார், ஆதீனத் தலைவராகிய ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகருடைய சல்லாபத்தாலும், அங்கே பெற்ற உபசாரத்தாலும் திருப்தியடைந்து இருந்துவந்தார். ஆயினும், இவருடைய கண்ணொளி வரவர மங்கிக்கொண்டே வந்தமையாலும், தேகபலம் குறைந்துகொண்டு வந்தமையாலும் இவருக்கு, 'அயலிடங்களில் இருப்பது உசிதமன்று' என்ற எண்ணம் உண்டாயிற்று. தாம் உறையூருக்கே சென்று உறவினர்களிடையே வசிக்க விரும்புவதாகச் செட்டியார் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் விண்ணப்பம் செய்துகொண்டார். தேசிகருக்கு இவரைப் பிரிந்திருப்பது வருத்தமாகவே இருந்தது. ஆயினும், இவரது தேக அசௌக்கியத்தை நினைந்து இவருக்கு விடையளித்தார். 1885-ஆம் வருஷம் ஜூலை மாதமுதல் மீண்டும் செட்டியார் உறையூருக்கே வந்து வசிக்கலானார்.

இவர் திருவாவடுதுறையில் இருந்த காலத்தில், திருப்பனந்தாள் காசிமடத்தில் தலைவராக இருந்த ஸ்ரீ குமாரசுவாமித் தம்பிரான் சேய்ஞலூர்த் தல புராணத்தைத் தமிழ்ச் செய்யுளாகப் பாடவேண்டுமென்று இவரைக் கேட்டுக்கொண்டார். இவரும், "சிவகிருபை இருந்தால் அவ்வாறே செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டார். இவருக்குக் கண் ஒளி குறைந்துவந்ததோடு, இருமல் முதலிய வேறு சில அசௌக்கியங்களும் உண்டாயின. அதனால் அப்புராணத்தைத் தொடங்கவில்லை.

உறையூருக்குச் சென்றவுடன், நான் இவருடைய சௌக்கியத்தையும் புராணம் இயற்றும் முயற்சியையும் பற்றி விசாரித்து ஒரு கடிதம் எழுதினேன். அதற்கு

***10-9-1885-இல் எழுதிய விடைக் கடிதத்தில் இவர் தம் நிலையைக் குறித்திருந்தார்; அது வருமாறு:***

*“......கண் உபத்திரவம் முன்போலவே இருக்கிறது. இரவில் துணையின்றி வெளிப்படக் கூடவில்லை. சி. அண்ணாமலை செட்டியார்தான் எனக்குக் கண்ணாயிருக்கிறார். ஆனால் ஏடுகள் பார்த்துச் சொல்லும்படியான பாக்கியத்தை நான் அடையவில்லை. ஸ்ரீமத் டனைசைச் சுவாமிகள் கட்டளையிட்ட தலபுராண விஷயத்தை ஏற்றுக்கொள்ள மேலான சிவபுண்ணியம் என்னிடத்துண்டா? அங்குத்தி திருவாக்கே நிறைவேற்றுமென்று நினைத்தால் கண்ணும் தக்க உதவியும் இல்லாத நான் என்ன செய்யலாம்? ஓர் ஏடு பார்க்கவேண்டுமானால் பார்த்துச் சொல்லுவோர்கள் இங்கு இல்லை. சிறிது சிறிதாக நாடு நகரம் செய்யும்படி கட்டளையிட்டிருக்கிறதே, அந்தக் கதையை ஆதியோடந்தமாய்ப் பாராமல் எப்படிச் செய்யக் கூடும்? பாயிரம் முதலியவற்றிலே தலபுராணக் கதையிலே ஏதாவது குறிப்பிக்க வேண்டியதாய் இருக்குமே. தங்களைப் போல்வாருடைய உதவி இருந்தால் ஒருவேளை துணியலாம். இந்தத் தலத்தைச் சூழ்ந்த சம்பந்தமுடைய தலங்களும் தீர்த்தங்களும் இருக்கலாமே. அவைகளையெல்லாம் விசாரித்து எழுதிவைக்கவேண்டும். இந்தத் தலத்தில் சிவபெருமான், விக்கினேசுவரர் முதலியோர்க்குத் தனித்தனியே வேறு பேர் இருக்கலாம். அவைகளையும் கவனிக்கவேண்டும். ஸ்ரீ சுவாமிகளிடத்தில் நான் சம்மானம் பெற்றுத் துவையல் பண்ணிச் சாப்பிடுகிறதா? எனக்கு இருக்கிறது போதும். என்னுடைய தேகஸ்திதி சௌக்கியத்துக்கு வரும்படி சிவபெருமான் கருணை செய்தால் ஒருவேளை நினைக்கலாம். தாங்களே ஆரம்பித்தால் தடையின்றி முடியுமென்று நினைக்கிறேன். என்னாலாகவேண்டிய உதவியிருந்தாலும் தடையில்லை. நான் படித்ததெல்லாம் மறந்துவிட்டேன். சிவ கதையொன்றும் ஞாபகம் இல்லை; கண்ணில்லை. தகுந்த பருவமுள்ள தாங்களே தொடங்குவது மிக்க நலமாகத் தோற்றுகிறது......”*

ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணாக்கராகிய இவருக்குப் புராணம் இயற்றும் திறமை நன்றாக இருந்தது; ஒரு ஸ்தலத்திற்குப் புராணம் இயற்றுவதற்கு முன் இன்ன இன்ன விஷயங்களைச் சேகரித்துக்கொள்ள வேண்டுமென்பதும் தெரியும். இக்கடிதத்திலிருந்தே இச் செய்திகள் விளங்கும்.

செட்டியாருடைய தேக நிலை வரவரப் பலக்குறைவுற்று வந்தமையின் இவரால் புராணம் இயற்ற முடியவில்லை. சீவகசிந்தாமணி ஆராய்ச்சியில் அப்போது ஈடுபட்டிருந்த எனக்கும் அதை மேற்கொள்ள முடியவில்லை.

---

## 44. மூன்று பிரபந்தங்கள்

ஒரு நாள் தியாகராச செட்டியாரிடமிருந்து தபால் மூலம் ஒரு கட்டு வந்தது; பிரித்துப் பார்த்தேன்; திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி என்ற பிரபந்தத்தின் கையெழுத்துப் பிரதியாக இருந்தது. அதனோடு வந்த கடிதத்தில் செட்டியார், "இந்தப் பிரபந்தம் ஓர் அன்பரால் இயற்றப்பெற்றது. அவர் உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறார். பார்த்துத் திருத்தி அனுப்பவேண்டும்" என்று எழுதியிருந்தார். அப்பிரதி, உறையூரில் செட்டியாருடன் இருந்து உதவி செய்து வந்த மு. நல்லசாமி பிள்ளை என்பவருடைய கையெழுத்தாக இருந்தது. படித்துப் பார்த்தேன். தியாகராச செட்டியார் வாக்கு என்று தெரிந்துவிட்டது. தம்முடைய கண்ணோய் நீங்கவேண்டுமென்று பிரார்த்தித்து அப்பிரபந்தத்தைப் பாடியிருந்தார். நான் அதனை முற்றும் படித்து உடனே அதைப் பாராட்டி இரண்டு செய்யுட்களை இயற்றிச் செட்டியாருக்கு அனுப்பினேன்.

செட்டியார் பார்த்து மகிழ்ந்து எனக்கு அம்மகிழ்ச்சியைப் புலப்படுத்தி ஒரு கடிதம் எழுதினார்: (25-11-85).

அக்கடிதத்தில் முதலில் என் பாடலைப் பாராட்டிப் பின் வரும் செய்யுளை எழுதியிருந்தார்.

"நண்ணுமறி ஞன்சாமி நாதமறை யோனன்பிற்
பண்ணி யனுப்புதமிழ்ப் பாடல்கள்—அண்ணியவென்
அந்தாதிக் கம்பகமோ வார்ந்த மணிமுடியோ
சிந்தாதென் செப்புவேன் றேர்ந்து."

[அம்பகமோ-கண்ணோ.]

......தங்கள் பாடல்களைப் பிரபந்தத்தோடு பெற்றேன். யான் நோயோடு சம்பந்தபட்ட விருத்தனாதலின் தவறுவது இயற்கை. அதனால் தங்கட்கு அனுப்பி நன்றாய்ச் சோதிப்பிக்க நினைந்தேன்...இன்னும் ஒரு பிரபந்தம் அஞ்சாறு தினத்தில் முன் பிரபந்தத்தோடு அனுப்புவேன். இரண்டையும் நன்றாய்க் கவனித்துப் பார்த்து அனுப்பல் வேண்டும்..."

என்று கடிதத்தில் எழுதியிருந்தார். நான் மற்றொரு பிர பந்தத்தை எதிர்பார்த்திருந்தேன். சில தினங்களில் இவர் முன் அனுப்பியதையும் சேர்த்து மூன்று பிரபந்தங்கள் அனுப்பினார். திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி யென்பதும், திருவாரூர் மருந்து வெண் பாமாலை யென்பதும் புதியவை. அவ்விரண்டுக்கும் சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் எழுதியனுப்பினேன்.

திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி என்னும் பிரபந்தம் சிதம் பரத்தில் எழுந்தருளிய ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தி விஷயமாகப் பாடிய நூறு வெண்பாக்கள் அடங்கியது. அந்தப் பிரபந்தத்தில் விநாயகர், சமயாசாரியர், ஸ்ரீ சுப்பிர மணிய தேசிகர் ஆகியவர்களைத் துதிக்கும் மூன்று செய்யுட் கள் முதலில் உள்ளன.

"தன்னுபெருஞ் செல்வத் துறைசை கயிலையென
மன்னி யமருமெழின் மாணிக்கம்—மின்னுபுகழ்ப்
பீடார் குருசுப் பிரமணிய தேசிகன்சீர்
பாடார் படித்தென் பயன்"

என்பது சுப்பிரமணிய தேசிகர் துதி.

முதற் செய்யுள் வருமாறு:

"சீர்பூத்த வம்பலத்திற் றேவிமலர்க் கண்களிக்க
நாரபூத்த வின்ப நடநவிலும்—கார்பூத்த
கண்டன் மறைச்சிலம்பு காட்டு மலர்ப்பாதம்
உண்டுதுணை நாயே னுயிர்க்கு."

[நார் - அன்பு. இன்ப நடம் நவிலும் - ஆனந்த தாண்டவம் புரியும் கார்-கருமை.]

அப்பிரபந்தத்தில் தம்முடைய கண்ணோயைப் போக்கி யருளவேண்டுமென்னும் குறிப்பை அமைத்துப் பாடிய செய்யுட்கள் வருமாறு:

"பணிகண்டா வம்பல வாண வருத்தம்
பிணிகண்டு நெஞ்சிரக்கம் பேணாய்—பணிகண்ட
பூணாய்பொன் மன்றாடும் புண்ணியா நீசற்றுக்
காணாய்நா யேன்மறைந்த கண்." (10)

"கண்ணொளிமாய்த் தன்பர் கவிபுகலக் கேட்டடியேன்
கண்ணொளி மாய்க்கக் கருதினாய்—பண்ணொளிரப்
பாடவறி யேனம் பலவாதா நின்னடனம்
நாட வருள்கண் ணலம்."

[மாயத்து - மறைத்து. சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் கண்ணொளியைப் போக்கி அவரால் பாடப்பெற்றமையை முதலடியிற் குறித்தார்.]

திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி யென்பது முன் வெண்பாவால் திருவாரூரையும் பின்வெண் பாவால் திருவொற்றியூரையும் மாறி மாறித் துதிக்கும் நூறு செய்யுட்களை உடையது. நக்கீரர் கைலை, காளத்தி என்னும் இரண்டையும் பாராட்டி இயற்றிய கைலைபாதி காளத்திபாதி யந்தாதியைப் பின்பற்றி இதனை இவர் பாடினார். திருவாரூரிலும் திருவொற்றியூரிலும் தியா கேசர் சந்நிதிகள் உண்டு. தியாகப் பெருமானுக்கு வழி வழி யடிமை செய்யும் குலத்தில் உதித்தவராதலின் செட்டி யார் இவ்விரண்டு தலங்களையும் ஒருங்கே துதித்தார்.

**இதன்கண் பல பாடல்களில் தம் கண்ணோயைப் போக்க வேண்டுமென்று இறைவனை வேண்டுகின்றார். சில வருமாறு:**

"திருவார் கமலைத் தியாகேசா வொப்பில்
ஒருவாவென் கண்ணோ யொழிப்பாய்—கருவாய
பிணிக்குமருந் தென்றுனைப் பேசலன்றி யெனக்கண்
மணிக்குமருந் தென்பேன் மகிழ்ந்து."

[கமலை - திருவாரூர். கருவாய பிணிக்கு - கருப்பத்தில் வாய்க்கும் பிறவிப் பிணிக்கு.] (1)

"மகிழ்ந்தொற்றி யூர்வாழும் வள்ளான்முக் கண்ணா
நெகிழ்ந்துள்ள நின்னை நினைப்பேன்—புகழ்ந்துகவி
பாடுவனென் கண்மறைவைப் பாற்றினனென் [றென்றுங்கொண்
டாடுவனென் னையா வருள்."

[பாற்றினன் - நீக்கியருளினான். என்று என்றைக்கும் கொண்டாடுவேன்.] (2)

"அருளுடையே னென்றென் றறைவையறி வில்லா
மருளுடையேன் கண்ணை மறைத்தல்—அருளோ
திருவாரூர் வாழுஞ் சிவனேவான் வாழ
மருவாரூர் மாய்த்தாய் வெறுத்து." (3)

[மருள் - மயக்கம். மருவாரூர் - பகைவர் ஊராகிய திரிபுரங்களை.] (3)

"பாடக்கண் பாவலர்க்குப் பண்டுதந்தா யின்றென்னை
நாடக்கண் ணோயற்கு நன்குதவின்—நீடுன்
புகழ்புதியா மாரூர்ப் புனிதாவஃ தன்றி
இகழ்பவரோ யாரு மிலா."

[பாவலர் என்றது சுந்தரமூர்த்தி நாயனாரை. முன்பு அவருக்குக் கண்ணொளி தந்தாயென்ற பழஞ்சரிதம் எனக்கு இப்போது கண்ணொளி யருளினால் புதுமை பெறுமென்றார்.] (61)

"நம்பினே னுன்னை நழுவவிட்டேல் வெந்நோயால்
வெம்பினேன் வீதி விடங்கனே—நம்பிக்

கரத்தானே யானுமொரு கான்முளைமண் ணுண்ட
சாதமே தாயருள்செய் வேலவா."

[வீதிவிடங்கனென்பது தியாகேசர் திருநாமங்களுள் ஒன்று. தும்பிக் கரத்தான் - விநாயகர். கான்முளை - மகன். உனக்கு விநாயகர் மாத்திரம் பிள்ளையோ? நானும் மகனல்லனோ? மண் உண்ட சாதமே தாய - உலகத்தை உண்ட திருமாலாகிய அன்னையை உடையோய்.] (71)

மூன்றாவது பிரபந்தமாகிய திருவாரூர் மருந்து வெண்பா மாலை யென்பது ஸ்ரீ தியாகேசரை மருந்து மருந்தென்று சொல்லிப் பாராட்டும் நூறு பாடல்களை யுடையது.

"நகமணி மேனித் தியாகேச னென்றும்போ
தகசப் புனைந்த தனிமருந்து—தங்கத்
திருவாரு தருமருந்து செய்யமறைச் செவ்வி
மருவு மருந்தாரூர் மருந்து"

என்பது அதன் முதற்செய்யுள்.

தம் கண்ணோயை மாற்றவேண்டுமென்னும் குறிப்பை உள்ளடக்கிச் செட்டியார் அமைத்த பாடல்கள் சில வருமாறு:

"பொன்னை யணிந்த புகைமருந்தன் பாக்கென்றும்
நன்றாய்ப் புகுந்தபுரி நன்மருந்து—நன்றாகக்
காட்சிபடி யேற்கருளும் கண்மருந்து கல்வியான்
மாட்டும் பெறுமாரூர் மருந்து." (2)

"தேவி மகிழத் திருநடனஞ் செய்மருந்து
பாவியேன் கண்ணோயைப் பாற்றுமருந்—தோவில்
அருளே திருமேனி யாக்கொண் மருந்து
மருவோயா வாரூர் மருந்து."

[பாற்றும் - போக்கும். மருவோயா - மயக்கம் பொருந்தாத.] (40)

"திருமருந்து வேதச் சிரமருந்தானந்தம்
தருமருந்தென் கண்ணோய் தவிர்க்கும்—அருமருந்து

தேமருந்து நேருந் தியாகேச னென்னும்பேர்
மாமருந் தாரூ மருந்து.''
[தேமருந்து நேரும் - தெய்வத்தன்மையுடைய அமுதத்தை யொத்த.] (100)

இப்பிரபந்தத்தில் நாயன்மார்களுடைய சிறப்பையும் மதுரையில் சோமசுந்தரக் கடவுள் இயற்றிய் திருவிளையாடல்களையும் பலபடியாகப் பாராட்டியிருக்கிறார்.

[இந்த மூன்று பிரபந்தங்களும் 1888-ஆம் வருஷம் என்னால் சென்னை, தொண்டைமண்டலம் அச்சியந்திர சாலையிற் பதிப்பிக்கப்பட்டன.]

---

## 45. குறளைத் திருத்திய பாதிரியார்

செட்டியாரிடம் படித்த மாணாக்கர்களும் பழகியவர்களும் இவர் உறையூரில் இருந்தபோதும் அடிக்கடி வந்து பார்த்துப் பேசி மகிழ்ச்சியடைந்து செல்வார்கள். நூல்களை இயற்றுபவர்கள் இவர்பால் வந்து சிறப்புப் பாயிரம் பெற்றுச் செல்வார்கள். தமிழ் சம்பந்தமான விசேஷ நிகழ்ச்சி எதுவும் இவருக்குத் தெரியாமல் நடைபெறாது.

சீவகசிந்தாமணியை நான் பதிப்பிக்கும் பொருட்டு ஆராய்ந்து வந்தபோது இவருக்கு அதனைத் தெரிவித்தேன். இவர் மிகவும் சந்தோஷமடைந்து எனக்குக் கடிதம் எழுதினார். கிடைக்கக்கூடிய ஏட்டுப் பிரதிகளை வாங்கி அனுப்பவேண்டுமென்று இவருக்கு எழுதினேன். இவர் அவ்வாறே உதவி புரிந்தார்.

ஒரு நாள் இவரை நாடி ஓர் ஐரோப்பியர் உறையூருக்கு ஒரு வண்டியில் வந்தார். இவருடைய வீட்டை விசாரித்துக்கொண்டு வந்து இறங்கினார். அவர் வந்து இறங்குவதைக் கண்ட தெருவார் பலர் கூட்டமாகக் கூடிவிட்டனர். "யாரோ வெள்ளைக்காரர் ஒருவர் செட்டியாரவர்களைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறார்" என்ற

செய்தி பக்கத்துத் தெருக்களிலும் பரவவே, பின்னும் பலர் வந்து கூடினர்.

அப்பொழுதுதான் செட்டியார் சிவபூசையை முடித்து உணவுண்டு கையில் ஒரு விசிறியுடன் வந்து புறத்திண்ணையில் அமர்ந்திருந்தார். முழங்கால்வரையிலுள்ள ஒரு துண்டு மாத்திரம் இவர் இடையில் இருந்தது.

வண்டியில் ஐரோப்பியக் கனவானுடன் வந்த ஒருவர் முதலில் இறங்கி வந்தார்; செட்டியாரைக் கண்டவுடன், 'தியாகராச செட்டியாரவர்களென்பது நீங்களா?'' என்று கேட்டார். இவருடைய கோலத்தைக் கண்டபோது அவருக்குச் சந்தேகம் உண்டாயிற்றுப் போலும்!

''ஆம், நான்தான்; என்ன வேண்டும்?'' என்றார் செட்டியார். இவருக்குக் கண்ணொளி மங்கிக்கொண்டு வந்த காலம் அது.

வந்தவர், ''உங்களைத் தேடிக்கொண்டு துரையவர்கள் வந்திருக்கிறார்கள். நீங்கள் இப்படி இருக்கிறீர்களே! வேறு உடை உடுத்து வந்து சீக்கிரம் அவரை வரவேற்க வேண்டுமே. இங்கே நாற்காலி ஒன்றும் இல்லையா?'' என்று சற்று அதிகாரத்தொனியோடு கேட்டார்.

செட்டியார் சிரம பரிகாரம் செய்துகொள்ளும் பொருட்டு வந்து அமர்ந்தவர். ஏதோ பெரிய கௌரவம் செட்டியாருடைய வாயிலில் காத்து நிற்பதுபோல அந்த மனிதர் பேசியதைக் கேட்டபோது இவருக்குக் கோபந்தான் வந்தது.

''துரையா! வரட்டுமே. இப்படியே பார்க்கக் கூடாதோ! இந்தத் திண்ணையில் வந்து உட்காரச் சொல்லுங்கள்'' என்று அமைதியாக இவர் சொன்னார்.

அவர் என்ன செய்வார்! துரை அவசரப்படுவாரென்று அறிந்து அவரை அழைத்துவந்து திண்ணையின் மேல் இருக்கச் செய்தார். செட்டியார் அவரை வரவேற்றார்.

"தங்களை நான் தெரிந்துகொள்ளவில்லையே. காலேஜ் பிரின்ஸிபாலாக இருந்த துரை யாரேனும் அனுப்பினார்களோ?" என்று கேட்டார் செட்டியார்.

"இல்லை; நானேதான் தங்களைத் தேடி வந்தேன் மதுரையிலிருந்து வருகிறேன். தமிழ் படித்து வருகிறேன்."

அந்தத் துரை குழறிக் குழறித் தமிழிலே பேசினார். அந்தப் பேச்சிலிருந்தே அவர் ஒரு பாதிரியாராக இருக்க வேண்டுமென்பதைச் செட்டியார் ஊகித்துக்கொண்டார்.

"சந்தோஷம். படிக்கப் படிக்க இனிமை தரும் பாஷை தமிழ்" என்றார் இவர்.

"நான் யாப்பிலக்கணம் படித்தேன். திருக்குறள் படித்தேன். அந்த இலக்கணத்தின்படி குறளைச் சில இடங்களில் திருத்தியிருக்கிறேன். தங்களிடம் காட்ட வந்தேன்."

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் செட்டியார் திடுக்கிட்டார்.

"என்ன, குறளையா திருத்தினீர்கள்?" என்று படபடப்போடு கேட்டார்.

"ஆமாம். எதுகை மோனை சில இடங்களில் சரியாக அமையவில்லை............"

செட்டியாருக்குக் கோபம் மூண்டது.

"'தக்கார் தகவில ரென்ப தவரவர், எச்சத்தாற் காணப்படும்' என்றிருக்கிறதே; இதில் எதுகை நன்றாக அமையவில்லையே. இரண்டாவது அடியை மக்களாற் காணப்படுமென்று திருத்தினேன். அந்தத் திருத்தம் எவ்வளவு நேர்த்தியாகப் பொருந்துகிறது பார்த்தீர்களா?"

அவரை மேலே பேசவொட்டாமற் செய்தது செட்டியார் செய்கை. இவர் எழுந்து நின்றார்; தலையிலே அடித்துக்கொண்டார்; காதைப் பொத்திக்கொண்டார். துரை ஏதோ சொல்ல வாயெடுப்பதற்குள், "திருவள்ளுவரைவிடப் புத்திசாலியாகிவிட்டீரோ! குறளைத் திருத்த

வேண்டுமென்ற இந்த ஞானம் உமக்கு எப்படி ஏற்பட்டது? திருக்குறள் எப்படிப்பட்ட நூல்! உம்முடைய கையில் சிக்கிச் சீர்குலையவா அதைத் திருவள்ளுவர் இயற்றினர்? எச்சத்தாலென்பதை மக்களாலென்று திருத்தினராம்! எச்சமென்பதும் மக்களென்பதும் ஒன்றுகுமா? இந்த வித்தியாசம் தெரியாதவருக்குக் குறளைக் கையிலே தொடுவதற்குக்கூட யோக்கியதை இல்லையே! இந்த மகா பாதகச் செயலைச் செய்தவர் முகத்தில் விழிப்பதே பாவம்!" என்று சொல்லிக்கொண்டே உள்ளே போய் இவர் கதவை அடைத்துக்கொண்டார்.

இவ்வாறு நடக்குமென்று அந்தக் கனவான் எதிர்பார்க்கவில்லை. அவர் மதுரையில் ஒரு தமிழ்ப் பண்டிதரின் உதவியைக் கொண்டு சில நூல்களைப் படித்தார். நன்னூலைப் படித்து யாப்பிலக்கணத்தையும் ஒருவாறு கற்றுக்கொண்டார். யாப்பிலக்கணத்தின்படியே தமிழ் நூல்களில் செய்யுட்கள் இருக்கின்றனவா என்று சோதனை செய்யத் தொடங்கினர். அவர் கையில் திருக்குறள் கிடைத்தது. சில இடங்களில் எதுகை மோனை இல்லை என்பதைக் கண்டுபிடித்தார்; அந்தக் குறையைப் போக்கவேண்டுமென்ற கருத்து எழுந்தது. சிலவற்றைத் திருத்திப் பண்டிதரிடம் காட்டினர். அவர் என்ன சொல்லுவார்! மெல்லவும் மாட்டாமல் விழுங்கவும் மாட்டாமல் திண்டாடினர். பிறகு, "நீங்கள் எதுகையும் மோனையும் வரும்படி அமைத்தது பொருத்தமாக இருக்கிறது. ஆனால் பழைய நூல்களில் இத்தகைய திருத்தங்களைச் செய்யும்போது பெரிய பண்டிதர்களுடைய சம்மதத்தையும் தெரிந்துகொள்ளுதல் நலம்" என்று சொல்லித் தர்மசங்கடத்தினின்றும் ஒருவாறு தம்மை விடுவித்துக்கொண்டார். அவர் சொன்ன 'பெரிய பண்டிதர்கள்' யாரென்று விசாரித்தபோது தியாகராச செட்டியாருடைய பெருமையும் இருப்பிடமும் தெரியவந்தன.

தாம் செய்த காரியம் தமிழுக்கே பெருமை தருவதென்ற நம்பிக்கையும் அதை யாவரும் ஆதரிப்பார்களென்ற உறுதியும் துரைக்கு இருந்தன. அதனால் செட்டியாரிடம் வந்து தம் திருத்தங்களைத் தெரிவித்தார்.

செட்டியார் உள்ளே போனவர் வெளியே வருவதாகத் தெரியவில்லை. துரையுடன் வந்தவர்கள் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து, "துரையவர்கள் உங்களைத் தேடிக்கொண்டு நெடுந்தூரத்திலிருந்து வந்திருக்கிறார்கள். இவர்களை இப்படி அவமதிக்கலாமா?" என்று கேட்டார்கள்.

இவருக்குக் கோபம் பொங்கியெழுந்தது. "இந்த மகானுபாவரை நான் தாம்பூலம் வைத்து அழைக்கவில்லையே! குறளைத் திருத்தும் துணிவுபடைத்த ஒருவருக்குத் தமிழ்நாட்டில் மதிப்பு எவ்வாறு கிடைக்கும்? இவர் திருவள்ளுவருக்கே அவமதிப்பை உண்டாக்குகிறவர். இவர் எப்படி இருந்தாலென்ன! சக்கவர்த்தியாகத்தான் இருந்தால் என்ன!" என்று தம்முடைய உள்ளத்திலுள்ள கொதிப்பையெல்லாம் வார்த்தைகளாக வெளியிடத் தொடங்கினார்.

துரை வேறு வழியொன்றும் காணாராய் வந்த வழியே திரும்பிச் சென்றார்.

---

## 46. மகிழ்ச்சியும் குறையும்

**1887**-ஆம் வருஷம் நான் சீவகசிந்தாமணியைப் பதிப்பித்து வெளியிட்டேன். அதற்குச் சிலருடைய கையொப்பங்களை வாங்கித் தந்து இவர் உதவி செய்தார். சிந்தாமணிப் புத்தகத்தைச் செட்டியாரிடம் நேரே சமர்ப்பிக்கவேண்டுமென்ற ஆசையால் நான் திரிசிரபுரம் சென்றேன். அந்நகரில் கையொப்பமிட்ட நண்பர்களுக்குக் கொடுக்க வேண்டிய பிரதிகளையும் எடுத்துச் சென்றேன்

திரிசிரபுரத்தில் இறங்கி ஒரு வண்டி வைத்துக்கொண்டு உறையூருக்குப் போனேன். இராத்திரிகாலமாக இருந்தது, செட்டியார் தங்கியிருந்த வீட்டுக்குப் போய்க் கதவைத் தட்டி, "ஐயா!" என்று அழைத்தேன்.

செட்டியார், "உன்னையே நினைத்துக்கொண்டு படுத்திருக்கிறேன்" என்று சொல்லியபடியே வேகமாக வந்து கதவைத் திறந்தார். 'உங்களை' என்று இயல்பாகச் சொல்லும் இவர் என்னை எதிர்பார்த்து நின்ற ஆவலையும். அன்பின் மிகுதியையும் 'உன்னையே' என்ற சொல் புலப்படுத்தியது. கதவைத் திறந்தவுடன் என்னைக் கட்டிக் கொண்டார். சீவகசிந்தாமணி பதிப்பித்ததற்காக நான் அடைந்த சிறப்புக்களிலெல்லாம் சிறந்தது அந்த அணைப்பு செட்டியாருடைய அன்பு கரைகடந்து புரண்டதை அந்தச் செயல் காட்டியது.

அவர் எதற்காகச் சந்தோஷப்பட்டாரென்பது எனக்கு முதலில் விளங்கவில்லை. 'இனிமேல்தானே நாம் புஸ்தகத்தைக் கொடுக்கப் போகிறோம்?' என்ற நினைவினால் நான், "என்ன இவ்வளவு சந்தோஷம்?" என்று கேட்டேன்.

"திருவானைக்காவலிலிருந்து ஆறுமுகசாமியும் கிருஷ்ணையரும் இன்று இங்கே வந்திருந்தார்கள். சிந்தாமணிப் புஸ்தகத்தை ஸந்நிதானத்தில் கொடுத்ததாகச் சொல்லி என்னிடம் சாமி காட்டியது. கிருஷ்ணையர் முகவுரை முதலியவற்றைப் படித்துக் காட்டினார். என்னால் படித்துப் பார்க்க முடியவில்லை. கையில் வாங்கிப் பார்த்தேன்! மிகவும் கனமாக இருந்தது. இந்தப் பெரிய காரியத்தை நீங்கள் எப்படி நிறைவேற்றினீர்கள்? உங்களுக்கு இதெல்லாம் யார் சொல்லித் தந்தார்கள்? முகவுரை, ஆசிரியர் வரலாறு, கதைச் சுருக்கம், அகராதிகள் எல்லாவற்றையும் படிக்கக் கேட்டு ஆனந்தமடைந்தேன். 'ஐயா அவர்கள் இருந்து இந்தச் சந்தோஷத்தை அடையக்கூட

வில்லையே!' என்று வருத்தமடைந்தேன். இதில் நாமகள் இலம்பகம் முன்பு பாடமாக இருந்தபோது நான் பட்ட கஷ்டம் எனக்குத் தெரியும். நானும் ஐயா அவர்களும் சேர்ந்து எவ்வளவோ சிரமப்பட்டோம். இதன் அருமை எனக்குத்தான் தெரியும்.''

செட்டியார் கடல்மடை திறந்ததுபோலப் பேசினார்; பாராட்டினார்; வாழ்த்தினார். நான் என்னை மறந்திருந்தேன்.

"ஐயா அவர்களும் தாங்களும் என்பால் வைத்த அன்புதான் இத்தகைய காரியங்களைச் செய்யும் தைரியத்தை எனக்கு உண்டாக்கியது'' என்றேன்.

"அதெல்லாம் சரிதான், ஐயா! வாயினால் சொல்லி விடலாம். புஸ்தகத்தைப் படித்து அர்த்தம் பண்ணிக் கொண்டு பதிப்பிக்கிறதென்றால் லேசான காரியமா? புஸ்தகம் எவ்வளவு பெரிது! தமிழ்நாட்டுக்கு ஒரு பெரிய நிதியையல்லவா தந்திருக்கிறீர்கள்?''

என்னுடைய பதிலால் பின்னும் அதிகமான பாராட்டு வெளியாயிற்று. ஒரு வகையாக அந்தப் புகழ்வெள்ளம் அடங்கியது. செட்டியார் சிறிது நிதானித்தார்.

"ஆனால், ஒரு குறை'' என்று தொடங்கினார். நான் துணுக்குற்றேன்.

"திருவாவடுதுறைப் பண்டார ஸந்நிதிகளையும் பிள்ளையவர்களையும்பற்றிமட்டும் முகவுரையில் எழுதியிருக்கிறீர்களே. என்னைப்பற்றி ஒன்றும் எழுதவில்லையே! இந்த விஷயத்தில் எனக்கு வருத்தமாகவே இருக்கிறது.''

தம் உள்ளத்தே தோன்றிய மகிழ்ச்சிப் பெருக்கை வெளியிட்டதுபோலவே அந்தக் குறையையும் இவர் வெளியிட்டார். என்ன தூய்மையான உள்ளம்! மறைத்துப் பேசவேண்டிய அவசியம் இவருக்கு இல்லை.

நான் விடை கூற முடியவில்லை. ஏதோ சமாதானம் சொன்னேன். எனக்கே அந்தச் சமாதானம் திருப்தியைத்

தராதபோது செட்டியாருக்குத் தர நியாயமில்லை. இவர் அந்தக் குறையை மறந்துவிட்டார். மறுநாள் முழுவதும் இவரோடு இருந்து சல்லாபம் செய்தேன். நான் கொடுக்க வேண்டிய புஸ்தகங்களை உரியவர்களிடம் சேர்ப்பிக்கும் படி இவரே ஏற்பாடு செய்துவிட்டார். இவர் பேசிக் கொண்டிருந்தபோது பொழுது போவதே தெரியவில்லை. நான் பிறகு விடை பெற்றுக்கொண்டேன்.

ஒரு பிழையை அறியாமற் செய்துவிட்டால் அதற்கு மூன்று முறை வருந்தி மன்னிப்பு வேண்டினால் பிராயச் சித்தமாகிவிடுமென்று சொல்வார்கள். தியாகராச செட்டியார் உணர்த்திய குறையை நான் மூன்று வகையாகப் போக்கினேன். 1903-ஆம் வருஷம் நான் பதிப்பித்த ஐங்குறுநூற்றை இவருக்கு அர்ப்பணம் செய்தேன்.

"திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானும் என் ஆசிரியருமாக விளங்கிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய கண்மணி போன்ற முதன் மாணாக்கரும், பாடஞ் சொல்லுதல் செய்யுள் செய்தல் நூலாராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்றவரும், முன்பு கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ் தமிழ்ப் பண்டிதரா யிருந்தவரும், வேறு கவலையின்றி நூலாராய்ச்சியையே செய்துகொண்டு காலங்கழிக்கும்படி வற்புறுத்திக் கூறி அவ்வாறே யான் நடத்தற்குக் கரும்பு தின்னக் கூலி கொடுத்தாற் போலத் தம்முடைய அரிய வேலையை அன்புடன் எனக்கு எளிதிற் கிடைக்கச் செய்தவரும், 'இரந்துபுன் மாக்கடமை யென்றுந் துதியா, வரந்தர வென் முன்னின்ற வள்ள'லுமாகிய திரிசிரபுரம் வித்துவான் ஸ்ரீ தியாகராச செட்டியாரவர்களுடைய பேருதவி எழுமையும் மறக்கற்பாலதன்று. அவர்கள் செய்த மேற்கூறிய அரிய உதவியில்லையேல் எனக்கும் பழைய தமிழ் நூலாராய்ச்சிக்கும் இக்காலத்தில் யாதோரியையுமின்றென்பது திண்ணம். ஆதலால், இனியதும் அரியதுமான இந்நூற் பதிப்பை அவர்களிடத்துள்ள நன்றியறிவிற்கு அறிகுறியாக அவர்களுக்கு உரியதாக்குகின்றேன்."

இந்த வார்த்தைகளால் என் கடமையை முற்றும் நிறைவேற்றியவனாகேனென்பதை நான் உணர்வேன். சென்னையில் நான் வாழும் இல்லத்திற்கு, தியாகராஜ விலாசம் என்ற பெயரை அமைத்தேன். கும்பகோணம் காலேஜ் பி. ஏ. வகுப்பில் படிக்கும் சைவமாணாக்கர் ஒருவருக்கு அவர் பெயரால் வருஷந்தோறும் உபகாரச் சம்பளம் (ரூபாய் 48) கொடுக்க ஏற்பாடு செய்தேன்.

---

## 47. உருவப்படம்

செட்டியாருடைய தேகம் வரவர மெலிவடைந்து வந்ததோடு வயிற்றுப் போக்கு முதலிய சில நோய்களும் இவரைப் பற்றிக்கொண்டன. அந்த நிலையில் இவர் தம்மிடமுள்ள பணத்தைக்கொண்டு நிலங்கள் வாங்கிப் பூவாளூர் ஆலயத்துக்கு அளித்தார். தேவார திருவாசகங்களைப் படிக்கச் செய்து கேட்டுக் காலம் போக்கிவந்தார்.

இவருடைய ஞாபகம் எனக்கு என்றும் மறவாது; ஆயினும் அந்த ஞாபகம் பின்னும் சிறப்பாக இருக்கும் பொருட்டு இவருடைய உருவப் படம் ஒன்று இருந்தால் நலமென்று எண்ணினேன். போட்டோ எடுக்கும் வசதிகள் இருந்தும் முன்பு இவருடைய படம் எடுக்கப்படவில்லை. இத்தகையவர்களின் படத்தை எடுக்க வேண்டுமென்பதில் அக்காலத்தவருக்குக் கவனம் அதிகமாக இல்லைபோலும். யாரையேனும் கொண்டு இவர் படத்தை எடுக்கச் செய்து அனுப்ப வேண்டுமென்று ஒரு நண்பருக்கு நான் எழுதினேன். படம் எடுப்பதை இவர் விரும்பவில்லை. அதற்குரிய காரணத்தை இவர் ஒரு கடிதத்தில் (4-12-1887) தெரிவித்தார்.

"........என்னுருவத்தைப் பொட்டகிராப் எடுக்கும்படி தாங்கள் உத்தரவு செய்தீர்களாம். யான் குரூபம் அடைந்த காலத்தில் எடுக்க எனக்குச் சம்மதம் இல்லை. அன்றியும் நல்ல

உடை உடுத்துக்கொண்டு ஒரு நாழிகை அசையாதிருக்கச் சற்றும் பலமில்லை. படுத்துக்கொண்டே இருக்கிறேன். நேத்திரம் இரண்டு நிமிஷம் சேர்ந்தாற்போல விழித்திருக்கக் கூடவில்லை. இந்த ஸ்திதியில் உருவம் எடுப்பது சற்றும் தகுதியன்று. தாங்கள் இவ்விடமிருந்து போன நாள் முதல் நாளது பரியந்தம் போகும் வயிற்றுப் போக்குச் சற்றும் நிற்கவில்லை. அன்னம் செல்லவில்லை. காரமும் சேரவில்லை.

"தேகம் விளர்ப்புடன் மிக மெலிந்துவிட்டது. ஆதலால் நான் செவ்வையாயிருக்கும்போது காலேஜ் ஸ்தம்பத்தில் உருவம் ஒன்று செய்யப்பட்டிருக்கிறது. தெற்குத் தாழ்வாரத்தில் கீழ் புறத்தில் இருக்கிறது. கோபாலராயரவர்களுடைய உருவம் குதிரையில் இருந்ததுபோல ஒரு பக்கத்தில் செய்யப்பட்டிருக்கிறது. நல்ல மொச்சியன் அகப்பட்டால் அந்த உருவத்தைக் காண்பித்துக் கூடியவரையில் ஒரு படம் எழுதிக்கொண்டால் அதை வைத்துக்கொண்டு பொட்டகிராப் வேண்டியபடி எடுத்துக் கொள்ளலாம்.........படம் எழுதும் மொச்சியன் என்னைப் பார்த்திருப்பவனாயிருந்தால் உத்தமந்தான்."

இவ்வாறு எழுதிய பிறகு நான் என்ன செய்வது? காலேஜில் தூணில் அமைக்கப் பெற்றிருந்த அந்த உருவத்தைப் பார்த்தேன். தியாகராச செட்டியாருடைய தலைப் பாகை, கைவிசிறி, பாதக்குறடு என்பவற்றை அந்த உருவத்தில் கண்டேன். ஆனால் செட்டியாரின் உருவ அமைப்பை அதிலே காண முடியவில்லை. கோபாலராவின் உருவத்தை அமைத்ததைப்போல் இவருடைய உருவத்தையும் தூணில் அமைத்து வைத்தமை இவருக்குக் காலேஜில் இருந்த மதிப்பை நன்கு புலப்படுத்தியது. 'தச்சன் அரைகுறையாகவாவது உருவத்தை அமைத்தான். காலேஜில் செட்டியார் இருந்த காலத்தில் அவருடைய படத்தை எடுக்க ஒருவரும் முயலவில்லையே!' என்று வருந்தினேன்.

பிற்காலத்தில் தூணில் இருந்த உருவத்தைப் படம் பிடிக்கச்செய்து அதைப் பார்த்துத் தனியே ஒரு சித்திர

காரரைக் கொண்டு படம் எழுதச் செய்வித்தேன். இரண்டு படங்களையும் பார்க்கும்போது செட்டியாருடைய ஞாபகம் வருகின்றதென்பது உண்மையே. ஆனால் அந்த ஞாபகத்திலே என் உள்ளத்தே தோற்றும் படம் வேறு ஒன்றாக இருக்கிறது! நானே ஓவியனாக இருந்தால் ஒருகால் செட்டியார் படத்தை உள்ளவாறே எழுத முடியும்!

படம் எடுப்பதைப்பற்றி எழுதியிருந்த கடிதத்தில் செட்டியார் பின்வரும் செய்தியையும் தெரிவித்திருந்தார்:

"........காலேஜ் கனவான்கள் எனக்குக் கொடுத்த ஏறுமுகக் கண்டியை ஸ்ரீ நடராஜரது திருமேனிக்கு அணிந்துவிட்டேன். ம-ள-ள-ஸ்ரீ சேஷையரவர்கள் முக்கியமாய்த் தந்த ஆபரணமாதலால் சேஷாபரணம் பரமசிவத்துக்குத்தானே பாத்தியமாகும்?"

சேஷாபரணம் என்பதை இவர் சிலேடையாக உபயோகித்திருக்கிறார். அது சேஷையர் தந்த ஆபரணம், ஆதிசேஷனைப் போலச் செய்த ஒருவகை ஆபரணம் (நாகாபரணம்) என இரண்டு பொருள்படும். சிவலிங்கப் பெருமானுக்கு அவ்வாபரணம் செய்து அணிவது வழக்கம்.

---

## 48. வியாசைக்கோவை

ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மயிலாப்பூர் விநாயக முதலியார்மீது ஒரு கோவை இயற்றத் தொடங்கினார். அவர் சென்னைக்குச் சென்றிருந்தபோது அக் கோவையை இயற்றி வந்தார். நூறு பாடல்களைச் செய்து ஸம்மானம் பெற்றுப் பிறகு அவர் திரிசிரபுரம் வந்துவிட்டார். எஞ்சிய பகுதியை இயற்றுவதில் பிள்ளையவர்களுக்கு ஊக்கம் உண்டாகவில்லை. அக்காலத்தில் தம்மிடம் பாடம் கேட்டுக்கொண்டிருந்த செட்டியாரிடம் அப்பிரபந்தத்தை முற்றுவிக்கும்படி கட்டளையிட்டார். செட்டி

யார் அதைப் பெரும் பேருகக்கொண்டு இயற்றி நிறை வேற்றினர்.

செட்டியார் உறையூரில் இருந்த காலத்தில் நான் இவரைப் பார்க்கச் சென்ற சமயங்களில் ஒரு முறை, "வியாசைக்கோவையை நான் முற்றும் படித்ததில்லை. ஐயா அவர்களும் தாங்களும் சேர்ந்து இயற்றியதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். பிரதி கிடைக்கவில்லை" என்றேன்.

"மயிலாப்பூரில் சித்திரச் சத்திரம் என்ற சத்திரத்தை நடத்திவந்த வியாசர்பாடி விநாயக முதலியார் ஐயாவிடம் மிகவும் ஈடுபட்டார். ஐயா அவர்கள் சென்னைக்குப் போயிருந்தபோது இப்படிப் பல பேரைத் தம் வலைக்குள் போட்டுக் கொண்டார்கள். சித்திரச் சத்திரப் புகழ்ச்சி மாலை என்று ஒரு பிரபந்தம் இயற்றியிருக்கிறார்கள். முதலியாருடைய அன்பர்கள் ஐயா அவர்களிடம், 'தங்கள் வாயால் ஐந்திணைக் கோவை ஒன்று பாடவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார்கள். ஒரு நாளோ இரண்டு நாளோ பாடினார்கள். நூறு பாடல்கள் ஆயின. அதற்குள் ஊருக்கு வந்துவிட்டார்கள். இங்கே வந்த பிறகு இவ்விடத்து விஷயங்கள் அவர்களைச் சூழ்ந்துகொண்டன. கோவையை முடிக்க ஓய்வு நேரவில்லை. ஒரு நாள் என்னிடம் கட்டளையிட்டார்கள். இளமை முறுக்கில் நான் அதை ஒருவாறு பூர்த்தி செய்தேன்" என்று அதன் வரலாற்றை இவர் சொன்னார்.

"அந்தப் புஸ்தகம் இருந்தால் தரவேண்டும்" என்று கேட்டேன்.

"என்னிடம் ஒரு பிரதிதான் இருக்கிறது. வேண்டுமானால் இங்கேயே படித்துப் பாருங்கள்" என்று சொல்லி அந்தப் புத்தகத்தைக் கொண்டுவந்து கொடுத்தார்.

ஆவலோடு அக்கோவையைப் படிக்கத் தொடங்கினேன். சில சில இடங்களை இவர் விளக்கிக்கொண்டே

வந்தார். மிக்க ஊக்கத்தோடு படித்துக்கொண்டு சென்றேன்.

இடையே ஒரு செய்யுள் முடிந்து மற்றொன்றை வாசிக்கத் தொடங்கினேன். இவர் திடீரென்று, "நிறுத் துங்கள்; மேலே வாசிக்க வேண்டாம்" என்றார்.

"ஏன்? தங்களுக்குச் சிரமமாக இருக்கிறதோ? அப்படியானால் நானே படித்துக்கொள்கிறேன்" என்றேன்.

"என்னிடத்தில் உங்களுக்குள்ள மதிப்பு நிலை யாக இருக்கவேண்டுமானால் இதோடு நிறுத்திக் கொள்ளுங்கள்."

'எதைக் கருதி இவர் இவ்வாறு சொல்லுகிறார்?' என்ற யோசனையில் ஆழ்ந்தேன்.

"ஐயா அவர்கள் செய்த பாடல்களை இதுவரையில் வாசித்தீர்கள். இனிமேல் நான் இயற்றியவை வருகின்றன. அவற்றை வாசித்தால் என் யோக்கி யதை வெட்டவெளியாய்விடும். அமிர்தத்தை உண் டவன் பிண்ணாக்கைத் தின்பதுபோலிருக்கும்" என்றார். அப்படிச் சொல்லும்போதே இவர் கண்களில் நீர் துளித் தது. செட்டியாருடைய உள்ளத்தடத்தே பிள்ளையவர் களின் பிம்பம் தோன்றி வருத்துகிறதென்பதை உணர்ந்து கொண்டேன்; நானும் அந்த உணர்ச்சியிலே கரைந்து நின்றேன்.

சிறிது நேரத்திற்குப் பின் நான் செட்டியார் வாக் கைப் படிக்கத் தொடங்கினேன்; முற்றும் படித்து முடித் தேன். இளமைக் காலத்தில் அதைப் பாடி முடிக்கத் திறமை வேண்டும்; தைரியமும் வேண்டுமல்லவா? இவ்விரண்டும் இவரிடம் இருந்தன. அவற்றை நான் பாராட்டினேன்.

---

## 49. சரம தசை

இவருடைய மரண காலத்திற்கு முன்பு இவர் படுக்கையாகவே இருக்கலாயினர். ஆகாரம் செல்ல வில்லை. கண்ணும் ஒளி மழுங்கியது. பேச்சு அடங்கிவிட்டது. இவர் முன்பே தெரிவித்திருந்தபடி தேவாரத்தைக் கொணர்ந்து ஒருவர் படிக்கலாயினர். அவருக்குத் தமிழில் நல்ல பயிற்சி இல்லை. ஏதோ ஒருவாறு துணிந்து படித்தார். அப்போது செட்டியார் கையைத் தட்டினார். அதன் குறிப்புச் சிலருக்கு விளங்கவில்லை. தேவாரம் படிப்பவர் அதைப் பிழையாகப் படிக்கிறாரென்பதையும், அதைத் தான் செட்டியார் குறிப்பிக்கிறாரென்பதையும் உணர்ந்த ஓரன்பர் தாமே வாங்கிப் படிக்கத் தொடங்கினார். பேச்சு முதலியன அடங்கிய காலத்திலும் செட்டியாரின் அறிவு 'அவியுறு சுடர் போலே' விளக்கம் பெற்றிருந்தது. அந்தத் தேவார நினைவிலேயே இவர் இவ்வுலகத் தொடர்பை நீத்தார். ஸர்வஜித்து வருஷம் தைமாதம் ஏழாந் தேதி (19-1-1888) செட்டியார் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தார்.

இவருடைய மரணத்தைக் கேட்டு அன்பர்கள் வருந்தினர்; மாணாக்கர்கள் பதறினர். நான் துயரில் மூழ்கினேன். இவருடைய பிரிவாற்றாமல் பலர் பல கவிகளை இயற்றினர். என்னுடைய துயரிற் பிறந்தவை வருமாறு:

(நேரிசை வெண்பா)

1. சருவசித்திற் றையேழிற் சத்தமியோ டுற்ற
குருவாரந் தோணிநாள் கோடாத்-திருவத்
திடராசன் கல்வித் தியாகரா சன்சீர்
நடராசன் றாளடைந்த நாள்.

[தோணிநாள் - ரேவதி நட்சத்திரம். கோடாத்திருவத் திடராசன் - பட்சபாதமற்ற நடுநிலைமைச் செல்வத்தையும் மன வுறுதியையுமுடைய அரசனைப் போன்றவன்.]

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்)

2. வாளுட்சி புறுஞ்சீர்த்தி மலிந்தகவி வலவர்சிகா
மணியா யோங்கும்
மீளுட்சி சுந்தரவா ரியன்வியக்கக் கவிபாடும்
விறலோ யென்றும்
தேளுட்சி யுறுமொழியாம் தியாகரா சப்பெயர்கொள்
செல்வா துன்பம்
யாளுட்சி யுறத்தணந்த தென்னேயோ வென்னேயோ
வியம்பி டாயே.

[துன்பம் யான் ஆட்சியுற - நான் துன்பத்தை அடைய. தணந்த - பிரிந்த.]

3. மடியென்றுந் தவிர்திமதி யினைவளர்க்கும் நூல்கள்பல
மகிழ்ந்தே மெல்லப்
படியென்றுஞ் சுவையொழுகப் பாடென்று மெனக்கன்பிற்
பகர்வோர் யாரே
மிடியென்று மெனையகலச் செயுந்தியாக ராசனெனு
மேன்மை யோனே
துடியென்று முறுகரத்தா னடியென்று மறவாத
தூய்மை யோனே.

[மடி - சோம்பல். மிடி - வறுமை. துடி - உடுக்கை. கரத்தான் - சிவபெருமான்.]

4. அந்நாளின் மீளுட்சி சுந்தரவா ரியனகன்று
னைய கோமற்
பின்னாளிற் றுறைசையிற்சுப் பிரமணிய குருமணியும்
பிரிந்தா னந்தோ
இந்நாணீ யும்பிரிந்தா யானிருந்தே னென்னபய
னெய்த வோவென்
மன்னுவோ சிரகிரியிற் றியாகரா சப்பெயர்நா
வலவ ரேறே.

[துறைசை - திருவாவடுதுறை. சுப்பிரமணிய குரு மணி - மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்.]

5. வற்ருத வளத்துறைசை வருகுருசுப் பிரமணிய
வள்ள றன்னை
உற்ருர்வ மொடுதொடர்ந்து சென்றனைமற்
றவற்பிரிந்த வுறுக ணீக்கிப்
பற்ருத வெனைப்புரப்பா ரெவரெவர்க்கென் மனத்துன்பைப்
பகர்வே னென்பாற்
கற்ருவிற் கசியுளத்துத் தியாகரா சப்பெயர்கொள்
கவிவல் லோனே.

[செட்டியார் காலமாவதற்குச் சில நாட்களுக்கு முன்புதான் (7 - 1 - 1888) ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் பரிபூரணமாஞர். உறுகண் - துன்பம். பற்ருத - எதற்கும் உபயோகமில்லாத. கற்ருவின் - கன்றையுடைய பசுவைப் போல.]

6. புகழ்பூத்த வறிவுடையோர் நாவாயி லெஞ்ஞான்றும்
பொருந்தி வாழ்வாய்
திகழ்பூத்த தியாகரா சப்பெயரோய் சிவபத்திச்
செல்வம் வாய்ந்தோய்
அகழ்பூத்த சிரபுரத்தா யிஞ்ஞான்று நாவாயி
லகன்ற வாற்ருல்
இகழ்பூத்த பெரும்பிறவிக் கருங்கடலைக் கடந்தாயென்
றெண்ணி னேனல்.

[அறிவுடையோர் நாவாயில் - புலவர்களுடைய நாவினிடத்தே. நாவாயில் - ரேவதி நட்சத்திரத்தில்; தோணியிலென்பது மற்ருெரு பொருள்.]

7. தாம்படைத்த பொருளினைச்சே மித்துமகிழ்ந் திடுவாரித்
தரணியோர்கள்
ஓம்படைத்த பொருளாய வருளாளன் பூசைவிழா
வுஞற்ற லாதித்
தேம்படைத்த வறம்விளங்கச் செயல்படைத்த
சிவனு வோர்யார் [பொருளுடைநிற்
றோம்படைத்த வழிமாற்றுந் தியாகரா சப்பெயர்கொள்
சுகுணக் குன்றே.

[சேமித்து - தொகுத்து. ஓம்பு அடைத்த - பாதுகாப்புப் பொருந்திய. அருளாளன் - அருளையுடைய சிவபெருமான். சிவணுவோர் - ஒப்பவர். தோம் - குற்றம்.]

பார்த்தமுகம் யாவையுமே வேற்றுமுக மாய்த்தோன்றும்
பார்வைக் கிந்நாள்
பேர்த்ததுய ருடையேனை வெளிச்செய்து மகிழ்ந்திடுநீ
பிரிந்த வாற்றால்
சீர்த்ததிரி சிரபுரத்துத் தியாகரா சப்பெயர்கொள்
செல்வா வென்றும்
கார்த்தகளத் தமலனடிக் கமலமலர் பொருந்திதய
கமலத் தோனே.

[கார்த்த களத்து அமலன் - கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமான்.]

---

## 50. சில செய்திகள்

தியாகராச செட்டியார் தம்முடைய அறிவையும் பொருளையும் நல்ல முறையிலே பயன்படுத்தினார். அதனால் இவருக்குப் புகழும் புண்ணியமும் உண்டாயின. தம் அறிவுத் திறத்தால் இவர் பிரபுக்களை நண்பராக்கினார்; புலவர்பால் மதிப்படைந்தார்; மாணாக்கர்களுடைய அன்பைப் பெற்றார். சிறந்த ஆசிரியரென்ற பெயர் இவருக்கு உண்டாயிற்று. தெரிந்த விஷயத்தைத் தெளிவாகக் கற்பிக்கவேண்டுமென்பதே இவர் கருத்து. பல விஷயங்களைத் தெரிந்துகொண்டதாக மாணாக்கர்களுக்குத் தம்மைப் புலப்படுத்திக் கொள்வதைவிட அவர்கள் தாம் கற்பிப்பவற்றை முற்றும் உணர்கிறார்களா என்பதை உணர்ந்து போதிப்பதுதான் ஆசிரியனது இலக்கணம். அந்த இலக்கணம் செட்டியாரிடம் நிரம்பியிருந்தது. மாணாக்கர் பலர் இவர்பால் ஈடுபட்டு இவரை என்

றும் மறவாமல் பாராட்டி வந்தனரென்பதே இதற்குச் சிறந்த சான்ருகும்.

தம் மாணுக்கர்களிடம் இவர் பூண்ட அன்பு சிறிதும் குறைந்ததன்று. இவருடைய ஆசிரியராகிய மகாவித்துவான் ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மாணுக்கர்களையே தம் சுற்றமாகக்கொண்டு வாழ்ந்தவர். அந்தப் பேராசிரியரிடம் கல்வி கற்ற செட்டியார் அவருடைய இயல்புகளிலும் பலவற்றை அவரிடமிருந்து மேற்கொண்டார்.

இவருக்குக் கல்வியினுல் வந்த கௌரவம் மிகுதி. கனவான்கள் பலர் இவரைத் தெய்வமாகக் கொண்டாடினர். வித்துவான்களில் அரைகுறைப் படிப்புடையவராக இருந்தால் இவர்முன்னே வருவதற்கும் நடுங்குவார். நல்ல வித்துவான்கள் இவரை அணுகி நூல்களிலுள்ள சந்தேகங்களைக் கேட்டுச் செல்வார்கள்; தாம் தாம் இயற்றிய நூல்களைக் காட்டித் திருத்தச் செய்து சிறப்புப் பாயிரம் பெற்று மகிழ்வார்கள்.

பிள்ளையவர்கள், யாழ்ப்பாணம் ஸ்ரீ ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை முதலிய பலரைப் பாராட்டி அவர்களுடைய நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கியிருக்கிருர். பிள்ளையவர்கள் இயற்றிய திருநாகைக் காரோணப் புராணம், திருவானைக்கா மாலை, சித்திரச் சத்திரப் புகழ்ச்சிமாலை என்னும் நூல்களுக்கு இவர் அளித்த சிறப்புப் பாயிரங்களில் இவருடைய வாக்குவன்மையும் குருபக்தியும் புலப்படும். வேதநாயகம் பிள்ளை இயற்றிய நீதி நூலுக்கு இவர் சிறப்புப் பாயிரம் உதவினுர்.

ஒரு சிறந்த மகாகவியினுடைய மாணுக்கராகிய இவர் செய்யுள் இயற்றும் திறமை பெற்றிருந்தது ஆச்சரியமன்று.

இவர் இயற்றிய நூல்கள் வருமாறு:—(1) *ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அந்தாதி, (2) வீரை உமை யம்மை பிள்ளைத் தமிழ். (3) சவராயலு நாயகர் இரண்டைமணிமாலை, (4) திருச்சிற்றம்பல வெண்பா வந்தாதி, (5) திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி, (6) திருவாரூர் மருந்து வெண்பா மாலை, (7) வியாசைக் கோவையின் பிற்பகுதி.

இவர் பதிப்பித்த நூல்கள் வருமாறு:— (1) உறையூர்ப் புராணம், (2) திருக்குடந்தைப் புராணம், (3) திருப்பெருமண நல்லூர்த் திரு வெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ், (4) திருத்தவத்துறைப் பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ், (5) திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ், (6) திருவானைக்கா அகிலாண் டேசுவரி மாலை, (7) பூவாளூர்ப் புராணம். முதல் ஆறு நூல்களும் பிள்ளையவர்கள் இயற்றியவை.

செட்டியார் தாம் சேமித்து வைத்திருந்த பொருள் முழுவதையும் பூவாளூர் ஆலயத்திற்கு உரிமையாக்கி விட்டார். அந்தப் பொருளைக்கொண்டு செட்டியாருடைய அன்பர்கள் பத்து ஏக்கருக்கு மேற்பட்ட நிலம் வாங்கிச் செட்டியார் கருத்துக்கிணங்க ஆலயத்தில் கட்டளைகளை நடத்தி வரலாயினர். இப்போது அந்நிலங்கள் பதினையா யிரத்துக்கு மேற்பட்ட மதிப்புடையனவாக உள்ளன. செட்டியார் மெய்யன்பினால் உதவிய அந்தப் பொருள் இவருடைய புகழ்போலப் பெருகி நிற்கின்றது.

இவருடைய இயல்புகளையும் இவர் செய்த சிவ தருமச் சிறப்பையும் பாராட்டி ஓரன்பர் சில செய்யுட்களை இயற்றினார். அவற்றில் இப்போது கிடைத்தவை வருமாறு:

---

* இன்னும் அச்சிடப்படாதது.

"பொன்பூத்த நெடுவரைவே யுகுத்திடுநித் திலத்திரளின்
பொலிவை வாரித்
தென்பூத்த தென்னருவி சொரிதரக்காண் வாரணங்கள்
செறிந்து லாவிக்
கொன்பூத்த வாலரியின் குலமெனக்கால் சீத்தென்றுங்
கொறிக்க மேவும்
மன்பூத்த பெருவளங்கள் மாறாது பொலியுமெழில்
மழவ நாட்டில்."

[வேய் - மூங்கில். நித்திலத் திரள் - முத்தின் தொகுதி. தென் - அழகு. வாரணங்கள் - கோழிகள். வால் அரியின் குலம் என - வெள்ளிய அரிசியின் தொகுதி என்று. கால் சீத்து - காலால் துடைத்து. கொறிக்க - கொத்த.]

* * *

"பொலிதருபொற் சபையினிடைப் பிரமன்மால் முதற்றேவர்
புரிந்து வாழ்த்த
மலியருட்கட் கடையிடப்பாற் சிவகாம வல்லியருள்
வதன மார
நலிதருதுன் பொழிந்தன்ப ராகரவென் றேமுழங்க
நடன மாடும்
புலிதருதோ லுடையுடுத்த வானந்த தாண்டவர்க்கும்
புகலுமைக்கும்."

"பொன்றாலு மணியாலும் புனையப்பட் டிளங்கிரணப்
பொலிய வீசித்
தென்றாலு நெடுஞ்சிகரந் தினகரன்போல் விளங்குமெழிற்
சினக ரத்தில்
மன்றாலு மறைமுதல பன்னூலு மாய்புலவர்
மகிழ்ந்து பன்னாள்
சொன்றாலு முலவாச்சீர்த் திருமூல நாதர்பதந்
தொழுத நாளும்."

[சிகரம் - கோபுரம். சினகரம் - கோயில். உலவா - குறை

யாத. திருமூலநாதர் - பூவாளூர்க் கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்.]

"நலம்பொலிநை வேத்தியமு மருச்சனையுந் தினந்தோறும்
நடக்கு மாறும்
வலம்பொலிமார் கழிமதியில் வருதிருவா திரைநாளில்
மலியு மன்பால்
புலம்பொலியு மபிடேக மலங்கார நனிசிறப்புப்
புரிந்து வேதச்
சிலம்பொலிக்குஞ் சிதபாத மமரர்தொழ நகர்வலஞ்செய்
விக்கு மாறும்."

[வேதச் சிலம்பொலிக் குஞ்சிதபாதம் - வேதமாகிய சிலம்பு முழங்கும் தூக்கிய திருவடி.]

* * *

"நவின்றவிழாச் சிறப்புகளி லுறப்பொன்றுங் குறையாமல்
நடத்தக் கற்றுக்
கவின்றஅந் தப் பெருமானார் காரியஞ்செய் அண்ணாவென்
கவின்பேர் பூண்டு
தவன்றுசிவ புண்ணியமே சொரூபமெனக் கொள்பெரியோன்
துளங்கு கையில்
எவன்றரணி யிடையிவனை நேர்வானென் றேவிரும்பி
ஈந்திட் டானல்."

[அண்ணா - அண்ணாமலை செட்டியாரென்பவர். பெரியோனது கையில் ஈந்திட்டான்.]

"இன்னசிவ காரியஞ் செய் அண்ணாவென் புண்ணியவான்
இலங்க முன்னர்ச்
சொன்னவிளை நிலமெல்லாந் தானேபோய் விளைவித்துத்
தொகுநெற் கொண்டு
பன்னுவிழா விற்சிறிதுங் குறையாமற் புரிந்தெவரும்
பரவ நின்றான்

பின்னுந்தன் சந்ததியார் தமைக்கொண்டே நடப்பிக்கும்
பெட்பி னானல்.''

[பெட்பு - விருப்பம்.]

''பின்புரைந்தே யுளமுருகு மன்பர்குழீஇ யானந்தப்
பெருக்கி லாழக்
கொன்புனைந்த கரஞ்சிரமேற் குவியவெதிர் நின்றுகூத்
தாடி மேவ
மின்புனைந்த செஞ்சடில விமலர்திரு மிடற்றழகு
விளங்கச் செய்யப்
பொன்புனைந்த வேறுமுகக் கண்மணிமா லிகையொன்று
புனைவித் தானால்.''

[குழீஇ - கூடி. எறுமுகக் கண்மணி மாலிகை - எறுமுக ருத்திராட்ச கண்டி.]

''அனையவிழாச் சிறப்பாற்றிக் கண்மணிமா லிகையணியும்
அணிந்து வந்த
வினையமலி சுகுணமுடைப் பேரறிஞன் யாவனெனில்
விளம்பு வாமால்
கனையபெருங் கடல்புடைசூழ் புவியாதின் றிலகமெனக்
கவின்று வல்லோர்
புனையவள மலிந்திலகு பூவாளூ ரெனமுன்னர்ப்
புகன்ற வூரில்.''

[கண்மணி மாலிகை - ருத்திராட்சமாலை. வினையம் - அடக்கம். கனைய - மிகுதியையுடைய. கவின்று - விளங்கி.]

''துலங்குறுகண் மணிபூண்டு வெண்ணீறு நுதலணிந்து
தூய ஞான
வலங்குலவு மஞ்செழுத்து முறச்செபித்துச் சிவபூசை
மறவா தென்றும்
நலங்குலவப் புரிந்தோங்கு நம்பெருமான் றிருவடிக்கண்
நண்ணும் தூய்மை
குலம்புரியு முரிமையெனக் கொளுஞ்சைவ வைசியர்தங்
குலத்தின் மாதோ.''

"தேங்குபெரு வாய்மைபொறை தெளிவுயர்வு நல்லொழுக்கஞ்
சிறந்த ஞானம்
ஓங்குபெருங் கல்விகொடை யடக்கமுய ரன்புடைமை
ஒருவர் செய்த
பாங்குபெறு நன்றிமற வாமைமுதற் பலகுணமும்
படைத்தெஞ் ஞான்றும்
தீங்குதவிர்ந் திலகுகல்விக் குடையார்கோத் திரமினிது
செழிக்க வந்தோன்."

"நிதம்பரவு சிவனடியார் திருவடியே யெஞ்ஞான்றும்
நினைக்குஞ் சீலன்
இதம்பரவு பேரன்பின் கடலாய வாதவூ
ரிறைவர் செய்யற்
புதம்பரவு வாசகப்பா முறையையன்பின் மலர்கொண்டு
பூசிப் போனஞ்
சிதம்பரவே ளூவந்துபுரி செழுந்தவத்தின் பெரும்பயனுச்
சிறந்து வந்தோன்."

[வாசகப்பாமுறை - திருவாசகமாகிய திருமுறை.]

"விண்மதிசெஞ் சடைக்கணிந்த சிவபெருமா னிறையென்று
விளம்பு நூல்கள்
நுண்மதிகொண் டினிதுநுனித் துணர்ந்தந்த வழியெவர்க்கும்
நுவலுந் தூயன்
மண்மதிக்குஞ் சமயகுர வர்புகன்ற வருட்பாவை
மதிப்போன் யாரும்
எண்மதிஞன் வெண்மதிசேர் புலவர்நவின் மொழிசெவியி
லென்று மேவான்."

[இறை - தெய்வம். நுனித்து - ஆராய்ந்து. வெண்மதி - அறியாமை.]

"மடந்தைபா கங்கொண்ட மாதேவ னருளுடனே
மகிழ்ந்து வாழும்
குடந்தைமா நகரினிடைப் பலவுருட முவந்திருந்து
கோதி லாமல்

இடந்தையந் தவிர்ந்தொழிய மாணாக்கர்க் கினியதமிழ்
இசைத்த மேலோன்
படந்தைமுடிச் சேடனிகர் தியாகரா சப்பெயர்கொள்
பாவ லோனே."

[இடந்து - நீக்கி. ஐயம் - சந்தேகம். படந்தை - படம்.]

"அன்றியுந்தென் கயிலையெனுந் திரிசிராப் பள்ளியிடை
யாக சாலை
முன்றயங்கு மண்டபத்தி லாத்தான மண்டபமென்
முதற்பேர் பூண்டு
மின்றயங்கு மரகதத்தா லியற்றியதென் றேயெவரும்
விரும்பச் செய்தான்
பொன்றயங்கு மணிபுனைந்த தியாகரா சப்பெயர்கொள்
புலவ ரேறே."

செட்டியாருடைய பெருமை முற்றும் இச்செய்யுட்களில் அடங்கவில்லை. ஆயினும் இவரது புகழைப் பாட்டாகப் பாடவேண்டுமென்று ஒரன்பருக்குத் தோற்றியதே இவருடைய மதிப்புக்கு ஓர் அடையாளமாகும்.

தியாகராச செட்டியார் சிறந்த பண்டிதர்; உபகாரி; ஆற்றலுள்ள ஆசிரியர்; நல்ல அன்பர். இவருடைய அன்பர்கள் இவருடன் பழகிய காலத்தில் நிகழ்ந்த ஏதேனும் ஒரு நிகழ்ச்சியையாவது மறவாமல் நினைத்திருப்பார்கள். இவருடைய இயல்பும் செயல்களும் பழகுவோர் மனத்தில் பதிந்து நிற்பன.

தமிழுலகம் இவ்வகையான மனிதர்களைப் பெறுவது அருமை.

முற்றும்